

ஹரி ஓம் நமோ நாராயணாய

This Book is Published with the Financial Assistance of Tirumala Tirupathi Devasthanams Under their Scheme "Aid to Publish Religious Books"

## பொருளடக்கம்



**அட்டையிலுள்ள படங்கள்**

**முன் அட்டை :** கந்தாஸ்ரமம் வெளிப்புறத் தோற்றமும், ஸ்கந்த குருநாதனின் திருவுருவமும்.

**பின் அட்டை :** வெட்டுவான் கோயில் சிற்பம். (சிவபெருமான்)

# இறையருள் நல்கும்
# 21 திருத்தலங்கள்


*ஆக்கியோன் :*

**எம். இராஜகோபாலன்**

M. A. *(வரலாறு)* M. A. *(தமிழ்)*

C. A. I. I.B (I). C. J. M. C.



*விற்பனை உரிமை :*



**ஸ்ரீ இந்து**
**பப்ளிகேஷன்ஸ்**
௨, முத்துக்கிருஷ்ணன் தெரு,
தியாகராயநகர், சென்னை-600017.

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Iraiarul Nalgum 21 Tiruthalangal |
| Author & Publisher | : | M. Rajagopalan<br>A4 (Anand) Mico Colony<br>Besantnagar, Madras-600090 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | July 1991 |
| Copy right | : | Author |
| Sales right | : | Sree Indu Publications<br>2, Muthukrishnan Street<br>Theagarayanagar, Madras-17 |
| Paper used | : | Seshasayee |
| Size of the book | : | Double Crown |
| Printing types | : | Ten point |
| Number of Pages | : | 232+24 Pages art paper |
| Number of Copies | : | 1200 |
| Price | : | Rs. 29/ (Twenty Nine only) |
| Printed at | : | Gururaja Press<br>7, Chinnappa Rowthar Street,<br>Madras - 600 005 |
| Binding | : | Paper Back |
| Artist (Cover page) | : | P. N. Anandan |
| Subject | : | A Collection of Essays on 21 Temples located in Tamilnadu. |

சாதுராம் ஸ்வாமிகள் | உ | சென்னை-24
ஸ்ரீ பொங்கிக்ருபா | முகாம்
23-5-91.

இறையருள் நல்கும் இருபத்தொரு திருத்தலங்கள் என்னும் உரைநடை நூலுக்கு 'வள்ளிமலை வள்ளல்' திருப்புகழ் ஸ்ரீஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சீடரும், சென்னை-600061, நங்கை நல்லூர் பொங்கி மடாலய அதிபரும் ஆன அருட்கவி—

தவத்திரு சாதுராம் ஸ்வாமிகள் அவர்கள் அருளிய சாற்றுக் கவிகள்.

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

1

அம்மைய நாயகனூர் இலஞ்சி அன்னூர்
ஆதனூர் ஈரோடு கழுகு வெற்பு
செம்மைசேர் சின்னமனூர் கோபி ஊர்தென்
சேலம்கல் லங்குறிச்சி துத்திப் பட்டு
தம்மைநேர் தருமபுரி நயினார் கோயில்
தழைசெய்திரி புவனைதிருத் தண்கால் பாரில்
நம்மைஆள் தேவிகா புரம்வாள் வைத்த
நற்கோட்டம் புதுக்கோட்டை மயிலாப் பூர்மேல்.

திருஇடளத் தைரிஷிவந் தியம்என் பேர்கொள்
திருத்தலங்கள் தெய்வஇறை அருளை நல்கும்
இருபானொன் றென்றெடுத்து விவர மாக
இவற்றின்வர லாற்றை உரை நடைநூல் ஆக்கித்
தருகின்றான் விளக்கமா வரலா(று) எம். ஏ.
தமிழ் எம். ஏ. தாம்தேர்ந்த ராஜ கோபால்
இருநூல்கள் இதுபோல இதற்கு முன்பே
எழுதிவெளி யிட்டிருக்கும் இவன் இன்றைக்கே.

3

தமிழகத்தில் திண்டுக்கல் காய்தே மில்லத்
தண்கோவை தஞ்சாவூர் நெல்லைக் கட்ட
பொமன் பெரியார் திருச்சிராப் பள்ளி மற்றும்
புகல்கின்ற சிதம்பரனார் பசும்பொன் தேவர்
தமது குலத் திருமகனார் மதுரை சேலம்
தருமபுரி புதுவைமா நிலம்காம் ராஜர்
நமதுசெங்கை அண்ணாவ டார்க்காட்டம்பேத்
கர்திருவண் ணாமலைச்சம் புவரா யர்ராம்.

நாதபுரம் புதுக்கோட்டை சென்னை நல்தென்
னார்க்காடு கன்னியா குமரி நாமம்
ஓதலுறும் மாவட்டம் இருபா னொன்றுக்
கொவ்வொன்றுக் கொருதலமா முறையே தேர்ந்து
பேதம் அறப் பிள்ளையார் பெருமாள் கந்தப்
பெருமானார் சிவபெருமான் பிராட்டி என்று
போதம்உறு தெய்வங்கள் பலவற் றின்பேர்ப்
புண்ணியமா தலங்கள் பற்றிப் புகழ்ந்து பேசி.

5

எழுதியுள்ள ராஜகோபாலன் இந்நூல்
''இறைஅருள்நல் கும்இருபா னொருதலங்கள்''
பழுதறவே வாழ்க! என்றும் படிப்போர் மூலம்
பரவிவியா பகமாக! படித்துப் பார்த்துத்
தொழுதுதல வலம்வருவோர் தொகைபெருக்க!
தோத்திரங்கள் சாத்திரங்கள் ஸூத்திரங்கள்
விழுதுள ஆல்மரம்போல் ஹிந்து தர்மம்
மிகத்தழைக்க! நூலாசான் மேல்மேல் ஓங்க!

சென்னை-24 முகாம்
23-5-1991

—அருட்கவி—தவத்திரு சாதுராம்
ஸ்வாமிகள், ஸ்ரீபொங்கிமடாலயம்,
சென்னை-600061.

# முன்னுரை

ஆகம விதிப்படி அமைக்கப்பட்ட கோயில்களும், வெற்றி அரசர்கள் பெருமிதத்துடன் எழுப்பிய ஆலயங்களும், சுயம்புலாக மூர்த்தி தோன்றிய இடங்களில் உருவாக்கப்பட்ட கோயில்களும் தமிழ்நாட்டில் ஏராளம்.

சைவம்—வைணவம் ஆகிய சமயப்பிரிவுகளிடையே ஒற்றுமையைத் தோற்றுவிக்கும் விதமாகவும், தெய்வ தரிசனம் போலவே தேவிதரிசனத்தைச் சிறப்பாக எடுத்துக்காட்டும் விதமும், பல்வேறு ஆலயங்கள் தமிழகத்தில் அமைந்துள்ளன.

இந்த ஆலயங்கள் சிற்ப அற்புதங்களுக்கு இருப்பிடமாகவும், அபூர்வ கலைகளுக்கு இருப்பிடமாகவும் அமைந்தன. உள்ளத்துக்கு விருந்தாக அமைவது போல உடல் நோய்க்கு மருந்தாகவும் புகழ் பெற்ற திருப்பதிகள் பலவும் தமிழ் நாட்டில் உண்டு.

இந்த ஆலயங்களின் பின்னணியாகச் சுவையான புராணக் கதைகளும், இறைவனின் திருவிளையாடல்களும் அமைந்தன. அவற்றைத் தல புராணங்களில் எழுதி வைத்திருக்கிறார்கள். நாயன்மார்களும், ஆழ்வார்களும் தலங்களின் சிறப்பைப் புகழ்ந்து பாடியும் இருக்கிறார்கள்.

இவற்றையெல்லாம் மனத்திற்கொண்டு, அபூர்வமான கலைகளைப் பயிலவும், உடல்நோய்க்கு மருந்தாக அமையவும், ஆன்மிக உணர்வு தழைக்கவும், தலங்களின் சிறப்பை உணரவும் புனிதப் பயணம் மேற்கொள்ளும் வழக்கம் தமிழர்களிடையே தொன்றுதொட்டு இருந்து வந்திருக்கிறது.

இந்த வகையில் இறையருள் நல்கும் இருபத்தொன்று திருத்தலங்களின் சிறப்பை திரு ம. இராஜகோபாலன் இந்த நூலில் எடுத்து உரைத்திருக்கிறார். ஒவ்வொரு தலத்துக்கும் உரிய தீர்த்தம், தலவிருட்சம், தலபுராணம், ஆகியவற்றையும் குறிப்பிடுகிறார். புவனேஸ்வரியின் அருட்பீடமான புதுக்கோட்டை அதிஷ்டானம் போன்ற இடங்களும் நமக்கு அறிமுகமாகின்றன.

உடலுக்கு மருந்தாகவும், உள்ளத்துக்கு விருந்தாகவும் அமையக்கூடிய தலயாத்திரைக்கு, இது ஒரு பயனுள்ள கையேடாக இருக்கும். ஆலயங்களைப் பற்றிய சிறு குறிப்புகளும், சுவையான வழக்குக்கதைகளும், விழாக்கள் பற்றிய தகவல்களும் பயனுள்ளவை.

தொடர்ந்து இந்த நல்ல முயற்சியை, இடையறாது மேற்கொண்டு ஆசிரியர் ஆன்மிகத் தொண்டாற்ற வேண்டும் என்பது, என்போன்ற எண்ணிலாத் தமிழ் வாசகர்களின் விருப்பமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

சென்னை-90
17 - 6 - 91

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்
துணை ஆசிரியர். ஞானபூமி



அம்மைய நாயக்கனூர் ஆலயம் முகப்பு



புறத்தோற்றம்
கழுகுமலை



இராஜகோபுரம்
ஆதனூர்



விமானம்—அன்னூர்



முன்புறத் தோற்றம்
இலஞ்சி



சிற்பத் தொகுதி
வெட்டுவான் கோயில்



கலியபெருமாள் (மூலவர்)
கல்லங்குறிச்சி



இராஜகோபுரம்
சின்னமனூர்



பூலாநந்தீஸ்வரர்
சின்னமனூர்



திக்பாலர் தருமபுரி



கோயிலும் திருக்குளமும்
கோயிலூர்



தொங்கும் தூண்
தருமபுரி



துர்க்கை - தர்மபுரி

# 1. அம்மைய நாயக்கனூர்

(திண்டுக்கல் காயிதே மில்லத் மாவட்டம்)

## கதலி நரசிங்கப் பெருமாள் கோயில்

சைவமும், வைணவமும் இந்து மதத்தின் இரு கண்களெனக் கருதப்பட வேண்டியவை. அரியும், அரனும் ஒரே சக்தியின் இரு அம்சங்களே ஆவர் என்பதை நமது புராணங்கள் வலியுறுத்துகின்றன. பாணாசுரனின் சரிதை இதே உண்மைக்கு ஓர் எடுத்துக்காட்டு. தட்பமும், வெப்பமும் சமமாக இருந்தால் மட்டுமே உயிரினங்கள் தழைக்க முடியும் மிகையான உஷ்ணம் அல்லது மிகுந்த குளிர் நிறைந்த பகுதிகளில் உயிரினங்கள் இல்லை. மனித உடம்பிலும், தட்பமும், வெப்பமும் உள்ளன. வெப்பம் குறைந்து விட்டால் உயிர் பிரிந்து விடுகிறது. திருமால் தட்பத்தில் சூக்கம ஆற்றலாகவும், சிவன் வெப்பத்தின் சூக்கம ஆற்றலாகவும் விளங்குகின்றனர். தட்பத்தின் வண்ணம் பச்சையாகும்; அவ்வாறே திருமாலின் நிறமும் பச்சை; குளிர்ச்சியானவராகையால் பாற்கடலில் எழுந்தருளியுள்ளார். நெருப்பின் நிறத்தைப் போலவே சிவபெருமானும் பவளச் சிவப்பு மேனியர். குளிர்ச்சியை அளிக்கும் வில்வமாலை சிவனாருக்கு ஏற்றதாகிறது. ஒரே பரம்பொருளின் இரு தன்மைகளே நன்மை, நிறைவு ஆகியவை இரண்டும்; நன்மை சிவமாகவும், நிறைவு திருமாலாகவும் விளங்குகின்றன. இந்த தத்துவத்தைப்

பாமர மக்களுக்குப் புரிய வைப்பதற்காக எழுந்த வழக்கு மொழியே, 'அரியும் அரனும் ஒண்ணு; இதை அறியாதவன் வாயிலே மண்ணு'. ஒரே பக்கமுடைய காகிதம் இல்லை; நாணயத்திற்கும் இரு பக்கங்கள் உள்ளன. அவ்வாறே சிவனும், விஷ்ணுவும் ஒரே பரம்பொருளின் இரு வேறு அம்சங்கள்.

இந்த உண்மையை உணராமல் பிற்காலத்தில் சைவர்களும், வைணவர்களும் ஒருவரை ஒருவர் துவேஷிக்கத் துவங்கினர். இதன் உச்சக்கட்டமாக சைவச் சார்புடைய மன்னர்களும், அரசியல் அதிகாரிகளும் வைணவர்களைத் துன்புறுத்தினர். அவ்வாறே வைணவச் சார்புடைய அரசர்கள் சைவர்களுக்குத் தொல்லைகள் அளித்தனர். சைவ, வைணவர்களுக்கிடையே ஏற்பட்ட மனக்கசப்பைப் பற்றிய சுவையான சம்பவம் ஒன்றுண்டு. வைணவக் கோட்பாடுகளில் தீவிரப் பற்றுடையவர் ஒருவர் திருவானைக்காவிலுள்ள சிவாலயம் வழியாகச் சென்றபோது, சற்று பாழடைந்திருந்த அதன் கோபுரத்தில் ஒரு காகம் ஏறியதால் அதிலிருந்து ஒரு கல் அவர் மீது விழுந்து காயம் ஏற்பட்டது. அதனால் ஏற்பட்ட வலியையும் பொருட்படுத்தாமல் "ஸ்ரீரங்கத்து வீர வைணவ காகமே திருவானைக்கா சிவாலயத்தை இடித்துத் தள்ளு" என்று அவர் கூறினாராம்.

சைவ, வைணவர்களுக்குள் ஏற்பட்ட வேற்றுமைகளை நீக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. சைவ ஆலயங்களில் திருமாலின் உருவங்கள் அமைக்கப்பட்டன. திருக்குறுங்குடி, திருக்கோஷ்டியூர் ஆகிய தலங்களிலுள்ள விஷ்ணு கோயில்களில் சிவபெருமானுக்குத் தனி சந்நிதி உண்டு. காஞ்சி ஏகாம்பரேஸ்வரர் கோயிலிலுள்ள 'நிலாத்திங்கள் துண்டம்' எனப்படும் விஷ்ணு சந்நிதியை ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர். 'கோயில்' என்று சைவர்கள் போற்றும் தில்லையம்பலத்தில் நடராஜரின் சந்நிதிக்கு அருகேயுள்ள 'சித்திரக் கூடம்'

எனப்படும் கோவிந்தராஜர் சந்நிதியும் ஆழ்வார்களால் போற்றப்பட்டது. கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள பன்னிரண்டு பிரதான சிவாலயங்களில் சிவராத்திரியன்று நள்ளிரவில் காவியுடை அணிந்த பக்தர்கள் "கோவிந்தா! கோவிந்தா!" என்று திருமாலின் திருநாமத்தை முழங்கியவாறு பிரகாரங்களை வலம் வரும் பழக்கம் உள்ளது. சைவ, வைணவ ஒற்றுமைக்கு இது நல்ல எடுத்துக்காட்டு. அரசர்களும் சைவம், வைணவம் ஆகிய இரு பகுதியினரையும் சமமாகவே நடத்தத் துவங்கினர். ஆலயங்களின் உட்பகுதிகளிலும், கோபுரங்கள், விமானங்கள் ஆகியவற்றின் மீதும் சைவம், வைணவம் ஆகிய இரண்டு பகுதிகளைப் பற்றிய சிற்பங்களும் அமைக்கப்பட்டன.

சிவபெருமானின் அறுபத்து நான்கு மூர்த்தங்களுள் ஒன்றான கேசவார்த்த மூர்த்தி, சிவன், விஷ்ணு ஆகிய இருவரின் அம்சங்களையும் சரிபாதியாகப் பெற்றுள்ளார். இவரே சங்கரநாராயணர் என்ற திருநாமத்துடன் சங்கரன் கோயிலில் எழுந்தருளியுள்ளார். திருவேங்கட மலையில் திருவேங்கடநாதனைப் பேயாழ்வார் தரிசித்தபோது அவரது கண்களுக்கு வேங்கடநாதன் ஒரு பாதி சிவமாகவும், மற்றொரு பாதி விஷ்ணுவாகவும் காட்சியளித்தாராம்.

"தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால் சூழுந்
திரண்டருவி பாயுந் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து"

எனும் பாசுரம் அவரது உள்ளங்கிடங்கை வெளிப்படுத்துகிறது. வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள திருப்பாற்கடலில் மூலவரான பிரசன்ன வெங்கடேசர் சிவலிங்கத்திற்கு உரிய ஆவுடையார் மீது நின்ற கோலத்தில் காட்சி தருகிறார்.

இன்று பல கோடி மக்கள் வழிபடும் ஹரிஹர சுதனான ஐயப்பன் திருமால், சிவன் ஆகிய இருவரின் சக்திகளையும் பெற்றுள்ளார். சைவ, வைணவ ஒருமைப் பாட்டிற்குச் சிறந்த உதாரணமாகத் திகழ்வது கதலி நரசிங்கப் பெருமாள் திருக்கோயில். இவ்வாலயம் அமைந்துள்ள ஊர் அம்மையநாயக்கனூர். மதுரை திண்டுக்கல் நெடுஞ்சாலையில் 'கொடை ரோடு' புகை வண்டி நிலையத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. நெடுஞ்சாலையின் ஓரமாகவே இக்கோயில் இருப்பதால் பேருந்து நிறுத்தத்திலிருந்து எளிதில் இதனை அடையலாம்

ஒரே ஆலயத்தில் சிவனும், விஷ்ணுவும் அமைந்துள்ளதைப் பல இடங்களில் காணலாம். ஆனால் இக்கோயிலில் ஒரே கருவறையில் சிவபெருமான் இலிங்க உருவிலும், அவரை அடுத்துத் திருமால்தேவியருடனும் இருப்பதைக் காணலாம். சிவபெருமானின் திருநாமம் கதலி ஈஸ்வரர்; திருமாலின் திருப்பெயரோ கதலி நரசிங்கப்பெருமாள்.

நரசிங்கப்பெருமாள் என்றவுடனே இரணிய சம்ஹாரம் நினைவுக்கு வரும். பல அரிய வரங்களைப் பெற்ற இரணியன் 'திருமால் எங்குள்ளார்' என வினவிய போது பிரகலாதன் அடக்கமாகப்பதிலளித்தான்.

''சாணினும் உளன் ஓர் தன்மை அணுவினை சத கூறிட்ட
கோணினும் உளன் மாமேருக் குன்றினும் உளன், நின்ற
தூணினும் உளன் நீ சொன்ன சொல்லினும் உளன்''

பிரகலாதனின் கூற்றை மெய்ப்பிப்பார் போல உக்கிர ரூபம் கொண்ட நரசிம்மராகத் திருமால் தோன்றினார்.

நகை செயா வாயும் கையும் வாளொடு நடந்ததாளும்
புகை செயா நெடுந்தீப் பொங்க உருத்தெதிர்
பொருந்தப் புக்கான் தொகை செயற்கு அரிய
தோளால் தாள்களால் சுற்றிச் சூழ்ந்தான்

*மிகை செய்வார் வினைகட்கு*
*எல்லாம் மேற்செய்யும் வினையம் வல்லாம் (கம்பர்)*

நரசிங்கர் என்றவுடன் 'பிறை எயிற்று அனல் விழி பேழ்வாய்த் தெள்ளிய சிங்கத்தை' இவ்வாலயத்தில் எதிர்பார்த்தால் பெருத்த வியப்பு காத்திருக்கிறது. இங்குள்ள நரசிங்கப் பெருமாள் சாந்த சொரூபியாகக் கரங்களில் சங்கு, சக்கரம் ஏந்தியவராய், நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். இருபுறமும் ஸ்ரீதேவியும், பூதேவியும் உள்ளனர். இங்குள்ள உற்சவர்களும் மூலவர்களைப் போலவே அமைந்துள்ளனர்.

நரசிங்கப் பெருமாள் இவ்வாறு சாந்த சொரூபியாகத் தோன்றுவதற்கான காரணம் தெரியவில்லை. இக்கோயிலில் பணிபுரியும் அர்ச்சகரும் இவ்வாறே இயம்புகிறார். "நானும் எதுபற்றி இவ்வூரைச் சேர்ந்த முதியோர்கள் பலரைக் கேட்டுவிட்டேன். எவரும் சரியான விடை அளிக்கவில்லை. 'நம்முடைய மூதாதையர்கள் காலத்திலிருந்து இதே பெயர் வழக்கத்திலுள்ளது, என்று அவர்கள் கூறுகிறார்கள்." இதுவே அவர் அளித்த பதில் ஆனால் சுவாமி சந்நிதிக்கு முன்புள்ள மண்டபத்திலுள்ள ஒரு தூணில் நரசிம்மரின் இரணியவதக் காட்சி சிற்பவடிவில் இடம் பெற்றுள்ளது. பல கரங்களுடன் தோன்றும் நரசிம்மப் பெருமாளின் முகத்தில் உக்கிரம் தாண்டவமாடுகிறது. மடியில் கிடத்திய இரணியன் துடி, துடிக்குமாறு அவனது மார்பைத் தன் நகங்களால் பிளக்கிறார்.

நரசிங்கப் பெருமாளுக்கு முன்னர் கதலி ஈஸ்வரர் சுயம்பு இலிங்கமாக அருள்புரிகிறார். முற்காலத்தில் இப்பகுதியில் கதலி எனும் வகையைச் சார்ந்த வாழை மரங்கள் அதிகமாக இருந்ததால் கதலிவனம் என்ற பெயர் ஏற்பட்டதாம். இங்கு ஒரு மரத்தடியிலுள்ள பொந்தில் பசுக்கள் பால்சொரிவதைக் கண்ட இடையர்கள் அப்பொந்தைத் தோண்டினர். அங்கு கல்

போன்ற ஒரு உருவத்தைக் கண்டு அதனை அப்புறப் படுத்த முயன்றனர். அக்கல்லை நகர்த்த முடியாமல் போகவே கடப்பாறையால் அதனைப் பெயர்க்க முயன்றபோது உதிரம் பெருக்கெடுத்ததாம். அச்சம் கொண்ட இடையர்கள் ஊரிலுள்ள பெரியவர்களிடம் இதனைத் தெரிவித்தனர். ஊராரின் முயற்சியால் இங்கு ஆலயம் எழுப்பப்பட்டு வழிபாடு நடைபெறலாயிற்று. இங்குள்ள இலிங்கமும் காலப்போக்கில் பெரிதாக வளர்ந்ததாம்.

பின்னர் ஒரு வைணவப் பெரியார் இத்தலத்திற்கு வந்து சிவபெருமானை வணங்கினார். திருமாலை வழிபட்ட பின்னரே உணவு உட்கொள்வது அவரது வழக்கம். இங்கு திருமாலைத் தரிசிக்க முடியாமையால் உண்ணாமல் அமர்ந்திருந்த அப்பெரியவரிடம் சிவ பெருமான் தானே திருமாலாகக் காட்சியளிப்பதாகக் கூறினார். பின்னர் அவ்வாறே தரிசனம் தந்தார். இச்சம்பவத்திற்குப் பின்னரே இங்கு திருமாலின் உருவம் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

அருச்சுனன் கடுந்தவமியற்றி, வேடன் வேடத்தில் தோன்றிய சிவபெருமானுடன் போர்புரிந்து பாசுபதம் எனும் கணையைப் பெற்ற செய்தியை மகாபாரதம் தெரிவிக்கிறது. இச்சம்பவம் நடைபெற்ற இடம் பற்றி ஒருமிக்க கருத்து இல்லை. கதலி வனத்தில் இச்சம்பவம் நிகழ்ந்ததாக ஒரு ஐதிகம் உள்ளது.

சுமார் இரண்டு ஏக்கர் நிலப்பரப்பில் இக்கோயில் அமைந்துள்ளது. நுழைவு வாயிலில் ராஜகோபுரம் இல்லை. ஆயினும் சுவாமி, தாயார் ஆகிய இரு சந்நிதி களுக்கு மேலுள்ள அழகிய விமானங்கள் பொலிவான தோற்றத்தை அளிக்கின்றன. மூலவர் சந்நிதிக்கு முன்பு மகாமண்டபமும், ஒரு சிறிய வெளி மண்டபமும் உள்ளன. நுழைவு வாயிலில் பயிர் தந்த விநாயகரின் திருவுருவமும், கருடாழ்வாரின் உருவமும் இடம் பெற்றுள்ளன.

கருவறையின் முகப்பிலுள்ள இரு துவாரபாலர்களின் படிமங்களும் எழில்மிக்கன. மண்டபத் தூண்களில் சிவ பெருமான், திருமால் ஆகிய இருவரும் வெவ்வேறு கோலங்களில் காட்சி தருகின்றனர். ஆழ்வார்கள் பன்னிருவர் திருவுருவங்களை மகா மண்டபத்தில் காணலாம். உற்சவர்களின் உருவங்களுள் நவநீத கிருஷ்ணனின் உலோகப் படிமம் பேரெழில் உடையது. தனிச் சந்நிதியில், உற்சவருடன் தோற்றமளிக்கும் தாயாரின் திருநாமம் 'கமலவல்லி' ஆகும். இச்சந்நிதிக்கு முன்பு முருகப் பெருமானின் உருவம் அமைந்துள்ளது. வெளிப் பிரகாரத்திலுள்ள ஒரு சந்நிதியில் பைரவரும், மற்றொரு பகுதியில் நவகிரகங்களும் உள்ளன.

மூலவர் சந்நிதிக்கு முன்புள்ள மண்டபத்திலும், சந்நிதி மண்டபங்களிலும் கை கூப்பிய நிலையிலுள்ள சில உருவங்களைக் காணலாம். இக்கோயிலுக்குத் திருப்பணிகள் செய்த ஜமீந்தார்களின் உருவங்களாக அவை இருக்க வாய்ப்புண்டு. 1870ம் ஆண்டில் பொம்மச்சி நாயக்கர் என்பவர் இக்கோயிலின் புறச் சுவர்களைப் புதுப்பித்தார். 1910ம் ஆண்டில் அம்மன் கோயிலின் உட்புறச் சுற்றாலையும், மடப்பள்ளியும் கட்டப்பட்டன. 1928ம ஆண்டில் முன் மண்டபமும் எழுப்பப்பட்டது. 1958ம் ஆண்டில் ஆலயத்தில் மின்சார வசதி அளிக்கப்பட்டது.

இவ்வாலயத்தில் காலையிலும், மாலையிலும் இரு முறை பூஜைகள் நடைபெறுகின்றன. ஆலயத்திற்குச் சொந்தமாக நிலபுலன்கள் இருந்தும் போதிய வருமான மில்லை. சொற்ப ஊதியத்தைப் பெற்றுக் கொண்டு பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ள திரு. வெங்கட நாராயண குருக்களின் சேவை பாராட்டுக்குரியது. கிருஷ்ண ஜெயந்தி, ஆருத்ரா தரிசனம், நவராத்திரி போன்ற விழாக்கள் இங்கு கொண்டாடப்படுகின்றன. ஐயப்ப பக்தர்கள் விழாக் காலங்களில் இங்கு கூடி வழிபாடுகள் புரிகின்றனர்.

குதிரை, அன்னம், சிம்மம், கருடன், அனுமன், ஆதிசேடன் போன்ற பல வாகனங்களை மகா மண்டபத்தில் காணலாம். இவை அண்மையிலுள்ள மாரியம்மன் கோயில் மற்றும் கிராமக் கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களின் போது பயன்படுத்தப்படும்.

அரியும், அரனும் ஒரே சந்நிதியில் அருளாட்சி புரியும் அற்புதத் தன்மையைப் பெற்றுள்ள இந்த அபூர்வ ஆலயம் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளதால், இதனை அடைவது எளிது. பழனி செல்லும் பக்தர்கள் இக் கோயிலுக்கும் சென்று வழிபடலாம். இந்த அற்புத ஆலயத்திற்கு அதிக அளவில் பக்தர்கள் வருகை புரிந்து இக்கோயில் மேம்பாடு அடைய உதவலாம்.

அம்மைய நாயக்கனூர் வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராகவும் விளங்குகிறது. வரலாற்றில் திருப்புமுனையாக உள்ள ஒரு போர் 1736ம் ஆண்டு இங்கு நடைபெற்றது. இப்போர் நாயக்கர் ஆட்சிக்கு முடிவு கட்டியதுடன், சந்தாசாகிப்பின் வீழ்ச்சிக்கும் அடிகோலியது. இவ்வூர் ஒரு ஜமீனின் தலைநகராகவும் விளங்கியது. 1559ம் ஆண்டில் விசுவநாத நாயக்கருடன் உடன் வந்த மக்கம நாயக்கர் எனும் தளபதி இதன் முதல் பாளையக்காரர் ஆவார். இப்பகுதியை ஆண்டு வந்த ஒரு பாளையக்காரர் உயிர்நீத்தவுடன் அவரது மனைவி உடன் கட்டை ஏறினாள். ஊரார் அப்பத்தினிக்கு ஒரு கோயில் எழுப்பி அஞ்சலி செய்தனர்.

# 2. அன்னூர்

(கோயம்புத்தூர் மாவட்டம்)

## மன்னீஸ்வரர் திருக்கோயில்

நன்மை பெருகும் கொங்குவள
நாட்டின் பெருமை நாட்டுமியல்
மன்னூர் என்னூர் அருந்தவத்தாய்
மருவூர் கருவார் வாதனைதீர்
மன்னி ஈசர் வரம் அளித்தே
வாழும் செல்வ வளஞ்சேரூர்
(தவத்திரு சுந்தர சுவாமிகள்)

குளித்தலை, வெள்ளியங்கிரி, தலைமலை, பழனி ஆகிய நான்கு இடங்களும் எல்லைகளாக அமையப் பெற்ற நிலப்பகுதி கொங்கு நாடு எனப்படும். சங்க காலம் முதல் கொங்குநாடு தமிழக அரசியலில் முக்கிய பங்கு வகித்து வந்தது. பல புலவர்கள், வள்ளல்கள், சித்தர்கள், தனவந்தர்கள் போன்றோர் இப்பகுதியில் அதிக அளவில் தோன்றியுள்ளனர். இங்குள்ள ஏழு பாடல் பெற்ற சிவத்தலங்களைக் 'கொங்கேழ் தலங்கள்' என்று சிறப்பிப்பது உண்டு. அருணகிரிநாதர், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், சித்தர்கள் ஆகியோர் வழிபட்ட கந்தவேளின் ஆலயங்கள் இப்பகுதியில் ஏராளம். பல தேவார வைப்புத் தலங்களுள் இந்நாட்டில் உள்ளன. இங்குள்ள பழமையான ஆலயங்கள் பல சீர் கெட்டநிலையிலுள்ளன. அவ்வாறன்றி நல்லநிலையிலுள்ள பழம் பெரும் ஆலயங்களுள் அன்னூரும் ஒன்று. கோவை

நகரிலிருந்து 32 கி.மீ. தொலைவில் சத்திய மங்கலம் செல்லும் சாலையில் இவ்வூர் அமைந்துள்ளது. கோவை, சத்தியமங்கலம், அவிநாசி, மேட்டுப்பாளையம் ஆகிய இடங்களிலிருந்து பேருந்துகள் மூலம் அன்னூரை எளிதில் அடையலாம்.

இத்தலம் யுகம் யுகமாகப் பெரும் சிறப்புப் பெற்றி ருந்ததாகத் தல வரலாறு செப்புகிறது. கிருத யுகத்தில் இத்தலம் வன்னியூர் எனப்பட்டதாம். அப்போது இங்கு எழுந்தருளிய வன்னிலிங்கத்தை நான்முகன் பூசித்துப் பேறு பெற்றார். திரேதாயுகத்தில் இப்பகுதி வானியூர் எனவும், இங்கு தோன்றிய லிங்கம் வானிலிங்கம் எனவும் அழைக்கப் பெற்றன. வானிலிங்கத்தைப் பூசித்துப் பேறு பெற்றவர்களுள் வியாசமுனிவர் குறிப்பிடத் தக்கவர். துவாபர யுகத்தில் இவ்வூர் வள்ளியூர் எனப்பட்டது. இங்கு குடிகொண்டுள்ள வள்ளிலிங்கம் தன்னை உளமாற வழிபட்ட மார்க்கண்டேய முனிவருக்கு அருளியது.

கலியுகத்தில் இப்பதி அன்னியூர் எனப்படும். இன்று இவ்வூர் அன்னூர் என மருவியுள்ளது. இத்தலத்தில் வசித்து வந்த அன்னி என்ற வேட்டுவன் வள்ளிக் கிழங்கு எடுப்பதற்காக நிலத்தைத் தோண்டினான். அப்போது மரவள்ளிக் கிழங்கு வடிவில் அரனார் காட்சியளித்தா ராம். பின்னர் சிவலிங்க உருவில் தோன்றி வேட்டு வனுக்கு அருளியதுடன் அதே பதியில் கோயில் கொண்டார். செம்பியம் என்ற ஊரைத் தலை நகராகக் கொண்டு அரசாட்சி புரிந்த சேரமன்னன் அன்னியூரில் எழுந்தருளியிருந்த சுயம்புலிங்கத்திற்கு ஆலயம் எழுப்பினான். அம்மன்னனுக்குக் கஸ்தூரி ரங்கப்பன், சடையப்பன், கச்சியூர் சமயன் ஆகிய மூவரும் உறுதுணையாக இருந்தனர். இதுவே, அன்னியூர்த் தல புராணம் அளிக்கும் விவரங்கள்.

சுமார் ஒரு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள இச்சிவாலயம் ஊரின் மையப்பகுதியில், வியாபார

திலையங்களுக்கு அருகே உள்ளது. இராஜகோபுரம் இல்லாத போதிலும் சுவாமி, அம்மன் ஆகிய சந்நிதிகள் மீது அழகிய, உயர்ந்த விமானங்கள் உள்ளன. மூலவர் மன்னீஸ்வரர் லிங்க வடிவில் காட்சியளிக்கிறார் இந்த இலிங்கத்தின் இருபுறமும் சிறகுகள் இருப்பது இத்தலத் திற்கேயுரிய விசேடமாகும் மூலவரின் கருவறையின் வெளிச்சுவரில் தென்முகக் கடவுளின் உருவம் உள்ளது. இதே பகுதியில் நடராஜரின் சந்நிதியையும் காணலாம். கால பைரவர், சனீஸ்வரர், ஒன்பான் கோள்கள் ஆகிய வற்றிற்கு வெளிப் பிரகாரத்தில் இடமுண்டு. மூலவர் சந்நிதியின் நுழைவாயிலுக்கருகே முருகப் பெருமானின் திருமுன் உள்ளது. பிரதான கணபதி தட்சிணாமூர்த்திக் கருகிலும், கன்னி மூல கணபதி, நயிரதி கணபதி ஆகியோர் அம்மன் சந்நிதி நுழைவு வாயிலுக்கருகிலும் அமைந்துள்ளனர். அம்மனுக்கு அருந்தவச் செல்வி என்றும் தபோதக சௌந்தரி என்றும் பெயருண்டு. சுவாமி, அம்மன் ஆகியோரின் சந்நிதிகளுக்கு இடையே அலங்கார மண்டபம் உள்ளது. பிரதான நுழை வாயிலின் இருபுறமும் சூரிய, சந்திரர்களுக்கு இடமுண்டு. ஸ்ரீதேவி, பூதேவி சமேதரான வரதராஜப் பெருமானுக் கும் ஒரு சிறு ஆலயம் உண்டு.

மன்னீஸ்வரர் கோயில் பத்தாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி அல்லது பதினொன்றாம் நூற்றாண்டின் துவக்கத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும். புதுக் கோட்டை மாவட்டத்திலுள்ள நார்த்தாமலை விஜயாலய சோழீச்சுரம், தாராபுரம் வட்டத்திலுள்ள பிரமியம் என்ற ஊரிலுள்ள வலஞ்சுழி நாதர் கோயில் ஆகிய இரு கோயில்களும் கட்டிடக்கலையில் அன்னூர் ஆலயத்தை ஒத்திருக்கின்றனவாம். கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம், அதிஷ்டானங்கள் ஆகியவை பழமையின் சுவடுகளைப் பெற்றுள்ளன. ஜெகதி, குமுதம், பட்டி, யாளிவரி, கண்டம், கொடுங்கை, தளங்கள் ஆகிய பகுதி களை மூலவரின் கருவறை பெற்றுள்ளது. பாண்டிய

நாட்டிலுள்ளது போலவே தேவகோஷ்டங்களை இக் கோயிலிலும் அமைக்கவில்லை. பரிவார தேவதைகளுக் கான சிறு கோயில்கள் ஆதியில் கட்டப்பட்டுப் பின்னர் அழிந்திருக்கக் கூடும். தளங்கள் செங்கல், சுதை, ஆகிய பொருட்களால் அமைந்துள்ளன. சிற்பங்கள் பலவற்றால் அலங்கரிக்கப்பட்ட மூன்று தளங்களுடன் விமானம் எழிலாகக் காட்சியளிக்கிறது. அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியவற்றிலுள்ள தூண்களின் நடுப்பகுதியில் எட்டு பட்டைகளும், மேல்பகுதி, கீழ்ப்பகுதி ஆகியவற்றில் 4 பட்டைகளும் உள்ளன. கருவறைக்கும், அர்த்த மண்டபத்திற்கும் இடையே அந்தராளம் என்ற இடைக் கட்டு இல்லை. அண்மையில் எழுந்த முகமண்டபத்தை 32 தூண்கள் தாங்குகின்றன.

சோழர் காலத்தில் கட்டப்பட்ட திருக்காமக் கோட்ட நாச்சியார் அருந்தவச் செல்வி ஆலயம் அழிந் திருக்க வேண்டும். தற்போதுள்ள அம்மன் சந்நிதி 1977ம் ஆண்டில் நடைபெற்ற திருப்பணியின் போது புதுப்பித்துக் கட்டப்பட்டது ஆலயத்தில் முற்காலத்தில் பாவை விளக்கு, க்ஷேத்திரபாலர், ஊர்த்தலைவர், அடியார்கள் ஆகியோரின் திருவுருவங்கள் அமைக்கப் பட்டதாகக் கல்வெட்டுக்கள் செப்புகின்றன. இன்று இவ்வுருவங்கள் இல்லை. பதினொன்றாம் நூற்றாண்டில் வார்க்கப்பட்ட உலோகத் திருமேனிகளை உருக்கிப் புதிதாகச் செய்துள்ளனர். இக்கோயிலில் சிறு அளவில் சில சிற்பங்கள் உள்ளன. சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாளுடன் கயிலை செல்லும் காட்சி முழுமையாக வடிக்கப்பட்டுள்ளது. கயிலை மீது எழுந்தருளியுள்ள சிவபெருமான், உமையன்னை ஆகியோரையும், கானகத்தில் தவமியற்றும் முனிவர்கள், யானையின் மீது வீற்றிருக்கும் சுந்தரர், குதிரை மீதமர்ந்த சேரமான் ஆகியோரையும் இதில் காணலாம். சுந்தரர் முதலையுண்ட பாலகனை மீட்ட சம்பவத்தைக் குறிக்கும் சிற்பங்களும் கொடுங்கைகளில் இடம்

பெற்றுள்ளன. பள்ளி கொண்ட பெருமாள், விநாயகர், முருகர், குதிரை மீதமர்ந்த வீரர், போராடும் வீரர்கள், வேட்டுவர்கள் ஆகியோரைச் சித்தரிக்கும் சிறு சிற்பங்களை உட்பகுதிகளில் காணலாம்

இக்கோயிலில் 11ம் நூற்றாண்டு முதல் 14ம் நூற்றாண்டு வரை பொறிக்கப்பட்ட 50 கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் ஆறு கல்வெட்டுக்கள் வட்டெழுத்திலும், மற்றவை தமிழிலும் எழுதப்பட்டுள்ளன. இவற்றின் மூலம் அரிய வரலாற்று உண்மைகளையும், பல வகையான சமுதாயச் செய்திகளையும் அறிந்து கொள்ளலாம். இங்குள்ள மிகப் பழமையான கல்வெட்டு 11ம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக உள்ள போதிலும், அதற்கு இரு நூற்றாண்டுகளுக்கு முன்னரே இக்கோயில் தோன்றியிருக்கக் கூடும் சுமார் 1110ம் ஆண்டில் அரசாண்ட அபிமானச் சோழன் பற்றிய குறிப்பை ஒரு கல்வெட்டு அளிக்கிறது குலோத்துங்க சோழன் (1149-83) காலத்தைச் சேர்ந்த ஏழு கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன அம்மன்னனின் 4ம் ஆட்சியாண்டில் ஆண்டிகளுக்குத் திருஓடுகள் அளிக்கப்பட்டன. ஆலயத்தில் சந்தியாதீபம் ஏற்றப் பொருள் கொடுக்கப்பட்டது சிவபிராமணர், வணிகர், சாமந்தர் ஆகியோர் பற்றிய செய்திகளும் இவற்றில் உள்ளன. வீரசோழன் (118?-1206) வீரசோழ நல்லூர் என்ற ஊரை இக்கோயிலுக்குத் தானமாக அளித்தான். வீரராஜேந்திரன் (1206-52) அரசியான மல்லிகேசி என்பாள் விளக்கெரிக்க ஒரு கழஞ்சு பொன் அளித்தாள். விக்கிரம சோழன் (1255-56), கோனேரின்மை கொண்டான், வீர பாண்டியன் (1283-1303) ஆகிய அரசர்களின் காலத்தைச் சார்ந்த கல்வெட்டுக்களும் உள்ளன. வீர வல்லாளன் (1292-1345) காலத்திலிருந்த உள்நாட்டுக் குழப்பம், நிலையற்ற அரசியல் நிலை, கர்நாடக மன்னர் படையெடுப்பு போன்ற செய்திகளையும் கல்வெட்டுக்கள் வெளிப்படுத்துகின்றன. இம்மன்னன் காலத்திற்குப் பின்னர் எழுந்த கல்வெட்டு எதுவும் கிடைக்கவில்லை.

சோணாட்டான் கலிமூர்த்தி விக்கிரம சோழனின் முப்பதாம் ஆட்சியாண்டில் வாணராயன் என்பான் வாணராயநல்லூர் என்ற சிற்றூரைக் கொடையாக அளித்தான். புள்ளர் என்ற குலத்தைச் சேர்ந்த ஒருவன் அடியார் உருவங்களையும், பாவை விளக்குகளையும் அளித்தான். புல்லன் என்ற மற்றொரு குலத்தான் ஞாயிறுதோறும் இறைவன் வலம் வரும்போது கரியமுது படைக்கத் தானம் அளித்தான். எண்ணெய் வியாபாரி (செக்கர்) ஒருவன் விளக்கெரிக்கவும், குயவன் ஒருவன் அடியவர்களுக்கு 5 திருஓடுகள் அளிக்கவும் கொடை அளித்தனர். தேவரடியார், நட்டுவர், திருப்பதிகம் பாடுவோர், போன்ற ஆலய ஊழியர்களுக்கு ஊதியம் அளிக்க யாழ்வல்ல நல்லூர் என்ற சிற்றூர் தேவதான மாமக் கொடுக்கப் பட்டது. ஐப்பசி, கார்த்திகை ஆகிய இரு மாதங்களில் கோயிலில் திருவிளக்கு வழிபாடு நடைபெற 129 விளக்குகள் தானமாக அளிக்கப்பட்டன. இறைபுரவு, சிற்றாயம், எலவை, உகவை, தண்டனைக் குற்றம், சுமை சங்கம், சாரிகை, மன்றுபாடு போன்ற பல்வகையான வரிகள் பற்றிய குறிப்புகள் கல்வெட்டுக்களிலுள்ளன. கழஞ்சு அச்சு, வராகன், பணம், சியக்கி என்ற பெயருள்ள காசுகள் வழக்கிலிருந்தன. பழங்குடி மக்கள், சமயம் வளர்த்த சான்றோர்கள், பல்வகைத் தொழில்கள், அரசியல் அதிகாரிகள் போன்றவற்றின் பெயர்களும், அவை பற்றிய பல விவரங்களும் இக்கல்வெட்டுக்கள் மூலம் கிடைக்கின்றன. இருபதுக்கும் மேற்பட்ட ஊர்களின் பெயர்கள், அவ்வூரில் வாழ்ந்த மக்கள், புலம் பெயர்ந்து சென்ற மக்களின் பெயர்கள் ஆகிய செய்திகள் கொங்கு நாட்டின் சமுதாய வரலாற்றை அறிய உதவுகின்றன.

கோயில் அர்ச்சகர்கள், கோயில் அலுவல்களை மேற்பார்வையிடும் காணியாளர்களாகவும் செயலாற்றி வந்தனர். ஆலயத்தில் தானியங்களைச் சேமிக்கும் களஞ்சியமும், விலையுயர்ந்த பொருட்களைப் பாது

காக்கும் காப்பறைகளும் இருந்தன. அவற்றைக் காணியாளர்கள் மேற்பார்வையிட்டுக் கணக்குகளைக் கண்காணித்து வந்தனர். இந்தப் பணியில் தவறு செய்தவர்கள் தண்டிக்கப்பட்டனர். அர்ச்சகர்கள் மழைக் காலத்தில் உரிய நேரத்தில் உலராத பருத்தி ஆடைகளை விடுத்து என்றும் தூய்மையாகக் கருதப்படும் பட்டாடைகளை அணிந்து வந்தனர் போலும். எனவே கல்வெட்டுக்கள் அர்ச்சகர்களைப் பட்டுடை பஞ்சாசாரியார்கள் என்று குறிக்கின்றன. இறைவனை நீராடிப் பூசிக்கும் அர்ச்சகர்கள் நீரையும் சுமந்து சென்றதால் "குடங்கொண்டு கோயில் புகுவார்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

ஆலயத்தில் திருப்பள்ளியெழுச்சி பாடுவதற்கு நிவந்தம் ஏற்படுத்தப்பட்டது. அரிசி, இலைக்கறி, மரக்கறி முரியுறி, உப்பு, மிளகு ஆகியவற்றைக் கோயில் பண்டாரத்தில் சேர்க்கவும், அப்பொருளைக் கொண்டு திருஞானசம்பந்த நம்பி திருமடத்தில் அன்னதானம் செய்யவும் ஒரு வணிகன் ஏற்பாடு செய்திருந்தான். இக்கோயிலிலுள்ள வடுகப் பிள்ளையாருக்கு வடநாட்டு அந்தணர் ஒருவரும், மலைநாட்டு அந்தணர் ஒருவரும் அறங்கட்டளைகள் அமைத்திருந்தனர். கொங்கு நாட்டிலேயே அதிக அளவு நிலக்கொடைகளை மன்னியாண்டார் கோயிலே பெற்றிருந்ததாம். கொங்கு நாட்டிலுள்ள பிற கோயில்களிலுள்ளது போலவே இவ்வூரிலும் கால்நடைகள் கொடையாக அளிக்கப்படவில்லை.

பதினான்காம் நூற்றாண்டு வரை கிடைத்துள்ள கல்வெட்டுக்களிலும், சோழன் பூர்வ பட்டயம் என்ற நூலிலும் மன்னியூர் என்ற பெயர் கிடைத்துள்ளது. மன் என்ற சொல் நிலை பேறு, ஆக்கம் ஆகிய பொருட்களைக் குறிக்கிறது. வளம் பெற்ற ஊராகையால் மன்னியூர் எனப்பட்டது போலும். புதிய சோழன் பூர்வ பட்டயத்தில் அன்னியூர் என்ற பெயரே உள்ளது.

வன்னியூர் என்ற பெயரும் இவ்வூருக்கு இருந்தது. வன்னிமரம் நிறைந்துள்ள பகுதியாகையால் இப்பெயர் தோன்றியிருக்கலாம். இதற்கேற்ப வன்னி மரமே இங்கு தல விருட்சமாகும். வன்னி என்ற சொல் நெருப்பையும் குறிக்கும். லிங்கம் தோண்டியெடுக்கப்பட்டபோது அக்கினிப் பிழம்பு தோன்றியதால் இதனையே இவ்வூருடன் தொடர்பு படுத்திப் புதிய சோழன் பூர்வ பட்டயம் குறிப்பிடுகிறது. கல்வெட்டுக்களிலும், சோழன் பூர்வ பட்டயத்திலும் மன்னீசுவரர் கோயில், அருந்தவச் செல்வி ஆலயம் என்ற பெயர்களே காணப் படுகின்றன.

புகழ்பெற்ற ஊர்களின் பெயர்களை ஏற்றுப் பிற பகுதிகளில் பல ஊர்கள் தோன்றின. கோவை நகரின் ஒரு பகுதியான பேரூர் மேலைச் சிதம்பரம் என்று அழைக்கப்படுகிறது. அது போலவே சோழர் காலத்தில் பெருமை மிக்க ஊரான தஞ்சாவூரைப் பின்பற்றி 'மேற்றலைத் தஞ்சாவூர்' என மன்னியூரை வழங்கினர். பெருவழிப்பாதையில் வணிகம் புரியும் வியாபாரிகளுக்குப் பாதுகாவலராக வீரர்கள் தங்கியிருந்த அடிக்கீழ்த்தளம் என்ற படை வீடு இவ்வூரில் இருந்தது. நொய்யல் நதிக்கு வடக்கிலுள்ள பகுதி வடபரிசார நாடு, ஆறை நாடு என்றும் வழங்கப்பட்டது. அப்பகுதியில் அன்னூர் அமைந்திருந்தது. இவ்வாறு கல்வெட்டுக்கள் மூலம் பல அரிய தகவல்களைப் பெறலாம்.

மன்னீஸ்வரர் கோயிலில் நாள்தோறும் 5 கால வழிபாடுகள் முறையாக நடைபெறுகின்றன. காலை 6 முதல 7.30 மணி வரை திரு. கிருஷ்ணன் என்பவர் உபயத்தில் வைகறைக் கால வழிபாடும், 8.30 முதல் 9.30 மணி வரை கால சந்தியும், பன்னிரண்டு மணிக்கு உச்சி காலமும், மாலை ஆறரை முதல் ஏழரை வரை அந்திகால வழிபாடும், இரவு எட்டு மணிக்கு அர்த்தஜாம வழிபாடும் நடைபெறுகின்றன. கால சந்தி, உச்சிகாலம் ஆகிய காலங்களில் நான்கு பிரதான தெய்வங்களுக்கு

அபிஷேகம் உண்டு. அர்த்த ஜாமத்தின் போது மூலவருக்குப் பாலாபிஷேகமும் அதனையடுத்துப் பள்ளியறையில் பொன்னூசலும் நிகழும்.

இக்கோயிலில் பெரிய விழா எதுவும் நடைபெறுவதில்லை. கல்வெட்டுக்களிலும் வழிபாடு பற்றிய குறிப்புகள் மட்டுமே உள்ளன. ஒரு விழாவின் போது விளக்குகளை ஏந்திச் செல்ல வெளியூரிலிருந்து பணியாட்கள் வரவழைக்கப்பட்ட செய்தியை ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது நவராத்திரியின் இறுதியில் அசுரனை அம்மன் அழிக்கும் சம்பவம் அம்புசோலை என்ற பண்டிகையாகக் கொண்டாடப்படுகிறது. மக்களை நோய் நொடியிலிருந்து பாதுகாக்கவே இவ்விழா கொண்டாடப்படுகிறது. ஐப்பசி அன்னாபிஷேகம், கார்த்திகை தீபம், திருவாதிரை ஆகிய பண்டிகைகளும், விசேட நாட்களும் இங்கு செவ்வனே நடைபெறுகின்றன ஆலயத்திற்குச் சொந்தமாக விளை நிலங்கள் இல்லாத போதிலும் தோப்புகள், காலி மனைகள், கட்டிடங்கள் ஆகியவற்றிலிருந்து வருவாய் வருகிறது. தமிழக அரசின் இந்து அறநிலைய ஆட்சித் துறையினரின் மேற்பார்வையில் இவ்வாலயம் நன்கு செயல்பட்டு வருகிறது அன்னூர் குமாரப்பாளையம் சிவத்திரு கருப்பு கவுண்டர் தனது வாழ்நாள் முழுவதும் இக்கோயிலின் மேன்மைக்காகப் பாடுபட்டார்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோரால் பாடப் பெற்ற அன்னியூர் என்ற தலம் உள்ளது. தஞ்சை மாவட்டத்தில் திருவீழிமிழலைக்கு அருகேயுள்ள பொன்னூர் என்ற தலத்தையே இப்பாடல்கள் குறிப்பிடுவதாக அறிஞர்கள் கருதுகின்றனர் திரு நடேச கவுண்டர் போன்ற ஒரு சில அறிஞர்கள் மட்டும் கொங்கு நாட்டு அன்னூரையே அப்பாடல்கள் போற்றுவதாகக் கருத்து தெரிவித்துள்ளனர். சைவ சமயக் குரவர்களுள் சுந்தரர் மட்டுமே கொடுமுடிக்கு அப்பால் சென்று கொங்குத்தலங்களைப் பாடியுள்ளார் சம்பந்தர் கொங்கு நாட்டுத் தலங்களைப் பாடவில்லை. அப்பர் கொடுமுடி வரை மட்டுமே வந்துள்ளார். மேலும், மன்னீஸ்வரர் கோயிலில் பதினொன்றும் நூற்றாண்டுக்கு முற்பட்ட கல்வெட்டு எதுவும் கிடைக்கவில்லை. எனவே, அப்பர், சம்பந்தர் ஆகியோரின் பாடல் பெற்ற பதி கொங்கு நாட்டு அன்னியூராக இருக்க முடியாது.

# 3. ஆதனூர்

(தஞ்சாவூர் மாவட்டம்)

## ஆண்டளக்கும் ஐயன் திருக்கோயில்

ஆறறிவு படைத்த மானுடர் எவராயினும் நின்ற நிலை, இருந்த நிலை, கிடந்த நிலை, நடந்த நிலை, ஆகிய நான்கினுள் ஏதாவது ஒரு நிலையில்தான் இருந்தாக வேண்டும். எந்நிலையில் இருப்பினும் இறைவனின் நினைவை என்றும் பெற வேண்டும் என்ற நோக்கத்துடனே ஈசனை நின்ற, கிடந்த, இருந்த, நடந்த கோலங்களில் நாம் வழிபடுகிறோம். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள திருமாலுக்குரிய நூற்றெட்டு திவ்விய தேசங்களில் இத்தகைய கோலங்களில் அப்பெருமானைக் காணலாம். இவற்றுள் சுமார் எழுபது திருத்தலங்களில் நின்ற கோலத்திலும, சுமார் முப்பது பதிகளில் கிடந்த கோலத்திலும் காட்சியளிக்கும் கார்வண்ணன் இருந்த கோலத்தில் காட்சியளிப்பது ஒரு சில தலங்களில் மட்டுமே.

''உடுத்துக் களைத்த நின் பீதக ஆடை உடுத்து
கலந்தது உண்டு
தொடுத்த துழாய்மலர்-சூடிக் களைந்தன சூடும் இத்
தொண்டர்களோம்
விடுத்த திசைக்கருமம் திருத்தித் திருவோணத்
திருவிழாவில்
படுத்த பைந்நாகனைப் பள்ளிக் கொண்டானுக்கே
பல்லாண்டு கூறுதுமே

—பெரியாழ்வார்.

திருமால் ஆதிசேடன் மீதும், ஆலிலை மீதும் பள்ளி கொண்டதாகப் புராணங்கள் இயம்புகின்றன. இவ்வாறு பள்ளி கொண்ட பெருமாள் உறங்குவது போல் தோன்றினும் அவர் அவ்வாறு தூங்குவதில்லை. இதனை அறிதுயில், யோக நித்திரை, தூங்காத தூக்கம் என்றெல்லாம் குறிப்பிடுவார்கள். அவர் கண்ணயர்வது போலக் காட்சியளித்தாலும் உண்மையில் உலகு அனைத்தையும் கூர்ந்து கவனிக்கிறார். அவரிடத்தே உலகத்தின் தோற்றம், நிலை பெறுதல், நீங்குதல் ஆகிய செயல்கள் முடிவில்லாத விளையாட்டாக நடைபெறு கின்றன. இவ்வுலகைக் காக்கும் பொருட்டு எம்பெருமான் யோக நித்திரை செய்வதாகத் திருவாய்மொழி இயம்பு கிறது. ("உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை".) பெருமாளின் பிற கோலங்களை விட, பள்ளிகொண்ட நிலையை உயர்ந்ததாகக் கருதியதால் ஆழ்வார்கள் இராமனையும், கண்ணனையும் பள்ளி கொண்ட பெருமாளாகவே பாடியுள்ளனர். பள்ளி கொண்ட பெருமாளின் பலவிதமான திருவுருவங்களை 'சில்பரத்னம்' எனும் நூலில் காணலாம். அனந்த சயனம், புஜங்க சயனம், தர்ப்ப சயனம், வீர சயனம், தல சயனம், ஜல சயனம், யோக சயனம், வடபத்ர சயனம் என்று சயனக்கோலம் பல வகைப்படும். இவற்றுள் பெருமாள் புஜங்க சயனராகக் காட்சியளிக்கும் தலங்களுள் ஆதனூரும் ஒன்று

தஞ்சை மாவட்டம் சுவாமி மலையிலிருந்து சுமார் மூன்று கி.மீ. தொலைவில் இப்பதி அமைந்துள்ளது. கும்பகோணத்திலிருந்து சுவாமிமலை வழியாகத் திருவைகாவூர் செல்லும் நகரப் பேருந்துகளில் சென்றால் இவ்வூரை அடையலாம்.

நன்செய் நிலங்களும், புன்செய் நிலங்களும் கொஞ்சி விளையாடும் தஞ்சைத் தரணியில் அமைந்துள்ள இவ்வூரில் இயற்கையழகு மிகுந்துள்ளது. வயல்களும், தோப்புகளும், நீர் நிலைகளும் நிறைந்துள்ள இச்சிற்றூ

ரில், அமைதியான சூழலில் அமைந்துள்ள ஆலயத்தின் முகப்பில் அழகிய சிறுகோபுரம் அணி செய்கிறது. கருவறையில் திருமால் புஜங்க சயனராகப் பள்ளி கொண்டுள்ளார். கிழக்கே திருமுக மண்டலம் கொண்டுள்ள இப்பெருமானின் பாதாரவிந்தங்களில் காமதேனுவும், திருமங்கையாழ்வாரும் உள்ளனர். பெருமானின் திருமுகத்தருகே ஒரு மரக்கால் இடம் பெற்றுள்ளது. கையில் எழுத்தாணியை இப்பெருமான் கொண்டுள்ளார்.

பள்ளிகொண்ட பெருமானின் திருநாமம் ஆண்டளக்கும் ஐயன் என்பதாகும். வேதங்களில் கூறப்படுவது போலவே திருமால் சர்வகாலங்களையும் அளந்தபின் இங்கு சயனித்துள்ளதாக நம்பப்படுகிறது. கால தத்துவத்தைத் திருமால் தனது ஆட்சியில் கொண்டுள்ளதைக் குறிப்பதற்காகப் பெருமாளுக்கு அருகே மரக்கால் உள்ளதாகக் கூறுகின்றனர். வழிப்பறி செய்து பெற்ற செல்வத்தைக் கொண்டே ஆலிநாடன் எனும் திருமங்கை மன்னன் திருவரங்கத்தின் மதிலைக் கட்டினான். இறைவனுக்குத் திருப்பணி செய்தே தன் அனைத்துச் செல்வத்தையும் இழந்து விட்டதாக அம்மன்னன் வருத்தமுற்றான். அம்மன்னன் முன்பு தோன்றிய திருமாலும் "எனக்குத் தொண்டாற்றியவர்கள் அனைவரும் பொருள் அடைந்தனரேயன்றி எவரும் செல்வத்தை இழந்ததில்லை" என்று கூறியவராய் ஒரு மரக்காலைத் திருமங்கை மன்னரிடம் அளித்தாராம். கார்வண்ணன் அருளால் அதில் மண்ணை அளந்தாலும் அது பொன்னாக மாறியதாம். இதனால் 'ஆண்டளக்கும் ஐயன்' என்ற பெயர் இறைவனுக்கு ஏற்பட்டதாகவும் ஒரு கருத்து உள்ளது.

சிவபெருமானே மரக்கால் உருவில் திருமாலுக்கருகே இருப்பதாகவும் ஒரு ஐதீகம் இங்கு உண்டு. இப்பகுதியில் கடும் வறட்சி ஏற்பட்டு மக்கள் பசிப்பிணியால் தவித்த

போது சிவபெருமானே மாற்றுருவில் தோன்றி மக்களுக்கு நெல்லை மரக்காலால் அளந்து வழங்கினாராம்.

இங்குள்ள உற்சவரான ரங்கநாதன் பேரெழில் மிக்கவர் ஆலயத்தின் உட்புறத்தில் திருவேங்கடமுடையான், ஜீயர் சுவாமிகள் ஆகிய திருவுருவங்கள், வண்ண ஓவியங்களாகக் காட்சியளிக்கின்றன. மற்றொரு அற்புத ஓவியம் அமரர்கள் இருமருங்கும் சூழத் தோன்றும் லட்சுமி நாராயணனின் எழிலுருவத்தைச் சித்தரிக்கிறது.

ரங்கநாயகி எனும் திருநாமமுடைய தாயார் தனிச் சந்நிதியில் அருளாட்சி நடத்துகிறார். சிறந்த வரப் பிரசாதியான தயார் மீது சுவாமிதேசிகன் பாடல்களை இயற்றியுள்ளார் தாயாருக்கும், பெருமாளுக்கும் திருக் கல்யாண உற்சவம் நடத்தி வழிபடுவோருக்குத் திருமணம் விரைவில் நடைபெறும் என்று நம்பப்படுகிறது.

நினைத்த வண்ணம் செல்வத்தை வாரிவழங்கும் வல்லமை பெற்றிருந்த காமதேனுவை விதிவசத்தால் ஆணவம் பற்றியது. திருமால் இப்பதியில் காமதேனுவின் செருக்கை அடக்கி நல்லருள் புரிந்தார். இதற்கு ஏற்ப காமதேனுவும், அவளது சகோதரியான நந்தினியும் இக்கோயிலில் சிலா ரூபங்களாக இடம் பெற்றுள்ளனர். காமதேனுவாகிய பசு இங்கு நாராயணப் பெருமானை வழிபட்டுப்பேறு பெற்றதால் இவ்வூருக்கு ஆதனூர் என்ற பெயர் ஏற்பட்டதாம். (ஆ—(பசு)+தன்+ஊர்) இப்பகுதியில் அரசாண்டு வந்த ஆதன் எனும் குறுநில மன்னன் மகாவிஷ்ணுவின் அருளால் தனது எதிரிகளை முறியடித்தான். அம்மன்னனே நன்றிக் காணிக்கையாக இக்கோயிலை எழுப்பினார். ஆதன் பெயரால் இவ்வூர் ஆதனூர் என்று வழங்கப்பட்டதாக மற்றொரு கருத்தும் உண்டு.

ஆதனூர் பற்றிய குறிப்பு பிம்ரமாண்ட புராணத்தில் உள்ளதாம். இப்பதி பார்க்கவக்ஷேத்திரம் என்றும் குறிப்பிடப்படுகிறது. ஆதியில் பிருகுமுனிவர் இங்கு

இறைவனைப் பிரதிஷ்டை செய்து வழிபட்ட ராம். பூமாதேவியும் இத்தலத்தில் திருமாலைப் பூசித்துக் காரியசித்தி பெற்றாள். மூலவர் சந்நிதிக்கு மேலுள்ள விமானம் பிரணவ விமானம் என அழைக்கப்படுகிறது. பாடலி மரமே இங்கு தல விருட்சமாகவும், சூரிய புஷ்கர்ணியே இங்கு புண்ணிய தீர்த்தமாகவும் போற்றப் படுகின்றன. இத்தலம் பற்றிய சுவையான சம்பவம் ஒன்று உள்ளது.

சில நூற்றாண்டுகளுக்கு முன்பு இத்தலத்தில் திருமால் நின்ற கோலத்தில் இருந்தார் கடுமையான வறட்சியின் கோரப்பிடியில் இப்பகுதி சிக்கியதால் இங்கு வறுமை தாண்டவமாடியது. மக்கள் படும் இன்னலைக் கண்டு மனம் வருந்திய ஒரு அடியார் திருமாலிடம் அவர் களுக்கு வாழ்வளிக்குமாறு வேண்டிக்கொண்டார். அடியவரின் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்த திருமாலும் ஒரு செல்வந்தர் உருவில் தோன்றி அனை வருக்கும் மூன்று நாட்களுக்கு உணவு அளித்தார். அத்துடன் மேலும் இரண்டு வாரங்களுக்குத் தேவை யான அளவு நெல்லையும் வழங்கினார் அதன் பின்னர் பெருமழை பொழிந்து நீர் நிலைகள் நிரம்பின. இப் பகுதியில் வறட்சி நீங்கி சுபிட்சம் நிலவியது. அடியாரின் விருப்பத்திற்கிணங்க திருமால் நின்ற கோலத்தை விடுத்துக்கிடந்த கோலத்தில் காட்சியளித்தார். அன்று முதல் புஜங்க சயனராகவே அவர் அருள்பாலித்து வருகிறார்.

## பிரம்மாண்ட புராண மங்கள ஸ்லோகம்

''ஆதிரங்கேஸ்வரம் வந்தே பாடலீவன ஸம்ஸ்திதம்
ப்ருக்வந்தி காமதேனுப்யோ தத்தாபீதிம் தயாநிதிம்
விமானே ப்ரணவே ரங்கநாயக்யென ஸுஸமாஸ்ரிதம்
சூர்ய புஷ்கர்ணீ தீரே சேஷஸ்யோபரி ஸாயினம்''

பாடலிவனத்தில் அமைந்துள்ள சூர்யபுஷ்கர்ணியின் கரையில் ஏற்படுத்தப்பட்டுள்ள பிரணவ மேடையில்,

ஆதி சேடனின் மீது பள்ளி கொண்டுள்ளவரும், பிருகு, அக்னி, காமதேனு ஆகிய மூவருக்கும் அச்சத்திலிருந்து விடுதலை அளித்தவருமான ஆதிரங்கப் பெருமாளின் திருவடிகளை நமஸ்கரிக்கின்றேன்.

## பிரம்ம நாரதீய புராணம்

"தேவ; ஸ்ரீ பணிபுங்கவாங்க சயன;
ஸ்ரீ ரங்கஸாயக்ஸௌ திவ்யந்ச ப்ரணவாக்ய
மாதனபுரே
தத்வயோமயானோத்தமம்! தீர்த்தம் ஸுர்ய ஸஸ்
ஸுரேட்ய
ஸுரபி ஸாக்ஷ்ந்க்ருத; ப்ராங்முக; நித்யம்வஜ்ரி
புரோகமைஸ்
ஸுரகணைர் ஆராதி தோத்ருஸ்யதே"

சூர்ய புஷ்கர்ணியின் கரையில் ஸர்ப்பராஜனின் உடல் மீது கிழக்கு நோக்கிய கோலத்தில் பள்ளிகொண்டுள்ளவரும், வஜ்ஜிராயுதத்தை ஏந்தியுள்ள இந்திரனைத் தலைவனாகக் கொண்ட அமரர்களால் துதிக்கப்படுபவரும் ஆகிய ரங்கநாயகன் எனும் தேவன் இங்கு காணப்படுகிறார்.

திருமங்கை மன்னன் வழிப்பறி செய்து பெற்ற பொருளால் அரங்கநாதனின் ஆலய மதிலைக் கட்டியதாகக் கூறுவர். திருவரங்கத்தில் ஆயிரங்கால் மண்டபம் நிறுவும்போது திருப்பணி செய்தே அனைத்துச் செல்வத்தையும் இழந்து விட்டதாக எண்ணியவராய் ஈசனைப் பிரார்த்தித்தார் திருமங்கையாரின் கனவில் தோன்றிய திருமால் அவரைக் கொள்ளிடக்கரைக்கு வருமாறு ஆணையிட்டார். பரகாலரும் மறுநாள் காலையில் கொள்ளிடக் கரையில் காத்திருந்தபோது திருமால் ஒரு தனவந்தர் வடிவில் தோன்றினார். அவரது கரங்களில் ஒரு மரக்கால் இருந்தது. "யான் அரங்கநாதனுக்கு தாஸர்; என் பெயர் ஆண்டளக்கும் ஐயன்; தங்களுக்குத்

தேவையான பொருளை இம்மரக்காலால் அளந்து தருகிறேன். எம்பெருமானுக்குச் சுறுசுறுப்புடனும், பக்தியுடனும் கைங்கர்யம் புரிபவர்கள் இம்மரக்காலால் மண்ணை அளந்தாலும் அது பொன்னாக மாறும். மற்றவர்களுக்கு இது மண்ணாகவே தோன்றும்'', என்று இயம்பிய தனவந்தர் மண்ணை அளந்ததும் அது பொன்னாக மாறியது. இவ்வாறு எம்பெருமானின் உண்மையான தொண்டர்களுக்குப் பொருளை வாரி வழங்கினார். பொருள் கிடைக்காமல் ஏமாற்றமடைந்தவர்கள் தனவந்தரைத் துரத்தினர். தனவந்தரும் அவர்களுக்குப் போக்குக் காட்டியவாறு மறைந்து விட்டார்.

பாதிரி மலர்கள் நிறைந்திருந்த இத்தலத்தில் தான் தொண்டர்களுக்கு அளித்த கூலி பற்றிய கணக்குகளை எழுதிமுடித்த பின்னர் பொருளுதவி நாடி அடியார்கள் வருகிறார்களா என்று இறைவன் திரும்பிப்பார்த்த இடம் இன்று 'திரும்பூர்' என்று வழங்கப்படுகிறது. எழுத்தாணி கொண்டு ஓலையில் கணக்கு எழுதிய இடம் இன்று "ஓலையூர்" என்று அழைக்கப்படுகிறது. இவ்வாறு 'தனக்குத் தொண்டாற்றியவர்கள் பொருள் அடைந்தனரேயன்றி இழந்தாரில்லை' என்பதைத் திருமால் மெய்ப்பித்தார்.

இத்தலத்தில் அக்னிபகவான் சாபவிமோசனம் பெற்றார். இதற்கேற்ப ஐயனின் திருவடிகளுக்கருகே அக்னிபகவானின் உருவம் இடம்பெற்றுள்ளது. அக்னி பகவானுக்கு ஒரு மண்டலம் ஸகஸ்ரநாம அர்ச்சனை செய்தால் சகலதோஷங்களும் நீங்கும் என நம்பப்படுகிறது. ஸ்வாபி, ஸ்வதா எனும் இரு தலைகளையும், ஏழு நாக்குகளையும் கொண்டு இருகரங்களில் கொடி, சாமரம் ஆகியவற்றை ஏந்தியுள்ளார். மற்ற இருகரங்கள் அபயஹஸ்த, ஸ்வஸ்திகஹஸ்த முத்திரைகளைத் தாங்கியுள்ளன. அவருக்கு ஆகவனீயம், தட்சிணாக்கினி, கார்ஹபத்யம் ஆகியமூன்று திருவடிகள் உள்ளன. இவ்வாறு அக்னிபகவான் கோலம் கொண்டுள்ளதால்

அனைத்து தேவர்களும் இங்கு எழுந்தருளியிருப்பதாக ஐதீகம் உண்டு. (அக்னிர் வை ஸர்வ தேவதா) தைத்ரியப் பிராமணம்) (யாக்ஞபேதம்) திருவரங்கத்திற்கு இணையாக இவ்வாலயமும் உபய காவிரி தீரத்தில் அமைந்துள்ளது. திருவரங்கம் போலவே இங்கும் இராஜகோபுரத் திருப்பணிகளை ஸ்ரீஜீயர் சுவாமிகள் புரிந்துள்ளார்.

இப்படிப்பட்டவன் என்று சொல்ல முடியாத அளவு அழகும, கலியாண குணங்களும் பெற்று ஆதனூரில் பள்ளி கொண்டுள்ள பெருமான் காலத்தை நிர்வகித்து வருகிறார். நேற்று, இன்று, நாளை எனப்படும் முக்காலங்களையும் (சென்ற காலம், நிகழ் காலம், எதிர் காலம்) அவரே அளவுப்படுத்துகிறார். (காலம் ஸ பசதே தத்ர காலஸ் தத்ர வைப்ரபு – விஷ்ணு புராணம்)

ஆதனூரே ஆதியரங்கம் ஆகையால் ஆண்டளக்கும் ஐயனே மூத்தவராகவும், திருமலை திருவேங்கடவனும், தேரெழுந்தூர் ஆமருவியபபனும் இவரது இளைய சகோதரர்களாகவும் கருதப்படுகின்றனர். திருமங்கையாழ்வாருக்கு ஆண்டளக்கும் ஐயன் காட்சியளித்து அருளியதால் மூலவரின் திருவடிகளுக்கருகே ஆழ்வாரின் திருவுருவம் இடம் பெற்றுள்ளது. பன்னிரு ஆழ்வார்களுள் திருமங்கை ஆழ்வார் மட்டுமே இப்பெருமானை மங்களா சாசனம் செய்துள்ளார்.

"என்னை மனங்கவர்ந்த ஈசனை — வானவர்தம்
முன்னவனை மூழிக்களந்து விளக்கிதனை
அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை
நென்னலை யின்றினை நாளையை"

(பெரிய திருமடல் 2674-130)

ஆதனூரில் பள்ளி கொண்டுள்ள பெருமானின் திருவடிகளைப் போற்றும் அடியார்கள் தங்களது உடல் மீது சிறிதும் பற்று அற்றவர்களாகவும், காம மயக்கம், சிற்றின்ப ஆசை ஆகியவற்றில் ஈடுபடாதவர்களாகவும்

விளங்குவார்கள் என்று திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயம்புகிறார்.

"இடரான ஆக்கை இருக்க முயல்வார்
மடவார் மயக்கின் மயங்கார்—கடவுளர்க்கு
நாதனூர் ஆதரியார் நானென தென்னார் அமலர்
ஆதனூர் எந்தையடி யார்"

(நூற்றெட்டு திருப்பதி அந்தாதி)

திருநின்றவூர் அத்தங்கி தாதாரியார் தொண்டன் என்பவர் இயற்றிய 'நூற்றெட்டு திருப்பதி அந்தாதி' எனும் நூலில்,

"மேவித் தொழும்புவி மங்கைக் கருண்முகில் வெங்கதிரோன்
வாவிப் புனலிடை மூழ்கிப் பிரண மானந்தனிற்
ஆறிற்றிவரங் கத்தான் கிழக்கிற் பொருந்தத் துயில்
ஆவிக்கமுதந் தொல ஆதனூர் ஆண்டளப் பான்றன்னையே"

என்று இப்பதியைப் போற்றுகிறார்.

பல ஆண்டுகள் நிலச் சுவான்தார்களின் பொறுப்பில் இவ்வாலயம் இருந்து வந்தது. அகோபில மடத்தைச் சேர்ந்த 43வது ஜீயர் சுவாமிகளிடம் அச்செல்வந்தர்கள் ஆலயத்தின் பொறுப்பை ஒப்படைத்தனர் அகோபில மடத்தின் 44வது ஜீயரான அழகிய சிங்கர் என்பவரது முயற்சியால் சுதையுருவினராகிய இருந்த மூலவர் சிலாரூபியாக மாற்றப்பட்டார். மேலும் இவ்வாலயத்தின் உட்பகுதிகளைப் பழுதுபார்த்து, ஒரு சிறிய இராஜகோபுரத்தையும் அழகிய சிங்கரே கட்டி முடித்தார். இன்றும் அகோபில மடத்தின் மேற்பார்வையில் இவ்வாலயம் இயங்கி வருகிறது.

# 4. இலஞ்சி

(நெல்லை கட்டபொம்மன் மாவட்டம்)

## குமாரர் கோயில்

*புன்னையின் மலர்த்தேன் முப்பழத்தின்றேன்*
*பொலிந்து பாய்வதினாலே வளர்ந்திடுங்*
*கன்னெல் செந்நெல் தனில் விளைமுத்தமுங்*
*கழனி தன்னிற் சங்கீன்றிடு முத்தமும்*
*இன்ன பல்வகை முத்த மகளிர்க*
*ளெடுத்து நற்கழங்காடி மகிழ்வுறுந்*
*தென்னிலஞ்சியில் வாழ்குமார வந்தென்*
*சிந்தையிற்குடி கொண்டருள் தெய்வமே.*

(ஐ. எஸ். சுப்பிரமணிய பிள்ளையவர்கள் இயற்றிய
திருவிலஞ்சிக் குமரக் கடவுள் பதிகம்

நான்முகன், திருமால், பரமசிவன் ஆகிய மும்மூர்த்திகளின் அம்சங்களாகக் காசிபர், கபிலர், துருவாசர் ஆகிய மூவரும் உதித்தனர். தத்துவப் பொருட்களின் நுணுக்கங்களைப் பற்றி இம்மூவரும் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தபோது மும்மூர்த்திகளுள் ஆதிப் பரம்பொருள் யார் என்ற விவாதம் ஏற்பட்டது. தங்களுக்குள் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டை நீக்க முருகப்பெருமானின் துணையை துருவாசர் நாடினார். ஆடகப் பொன் போன்ற திருமேனியும், கரங்களில் வேலும் பொருந்த, இளமைக் கோலத்துடன் முருகப்பெருமான்

அம்மூவருக்கும் காட்சியளித்து அருளினார். "யாமே மும்மூர்த்திகளாகத் தோன்றிப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முச்செயல்களைப் புரிகிறோம். இவ்வுண்மையை உணர்த்தவே வேலும் சூலமும் தாங்கியுள்ளோம். வேல் ஞானசக்தியாக விளங்குகிறது. வள்ளி, தெய்வயானை ஆகிய இருவரும் முறையே இச்சா சக்தி, கிரியா சக்தி என விளங்குகின்றனர். யாமே முக்குண வேறுபாட்டையடைந்தவர் போல மும்மூர்த்திகளாய்த் தோன்றி மூவினைகளையும் செய்கிறோம். மும்மூர்த்திகளுள் பெரியவர், சிறியவர் என்ற பேதமை பாராட்டுவது அறிவீனம்." இவ்வாறுமொழிந்த பின் முனிவர்களின் விருப்பத்திற்கிணங்க அவ்விடத்திலேயே குமரரும் 'வரதராஜக் குமரர்' என்ற பெயருடன் கோயில் கொண்டார்.

திரிகூடா சலந்தீசான திக்கினி விலஞ்சியான
புரியினிற் கபிலராதி யோகியார் புகழ்ந்து கேட்ப
வரியமுத் தேவர் மூவராவது நாமே யென்று
சுருதியின் வரதராஜத் தொல் பெயர் சூட்டிக்
கொண்டான்.

(திருச்செந்தூர்ப் புராணம்.)

இச்சம்பவம் நடைபெற்ற இடமே இலஞ்சி. நெல்லை மாவட்டத்தில், குற்றாலத்திலிருந்து செங்கோட்டை செல்லும் சாலையில் சுமார் 1½ கல் தொலைவிலுள்ளது. இவ்வழியே அடிக்கடி பேருந்துகள் செல்கின்றன.

அன்று முதல் இன்றுவரை அழகு கொழிக்கும் நீர் நிலையைக் குறிக்கவே இலஞ்சி என்ற சொல் பயன் படுத்தப்பட்டதாக இலக்கியங்கள் வாயிலாக அறியலாம். நீர் வளமும், முருகப் பெருமான் திருவருள் வளமும், நிரம்பிய இடமாகையால் இப்பதி இலஞ்சி எனப்பட்டது போலும். இங்கு மகிழ மரம் தலவிருட்சமாக விளங்குகிறது. மகிழ மரத்திற்கு இலஞ்சி என்ற மற்றொரு பெயர் உள்ளதால் இவ்வூர் இலஞ்சி எனப்பெயர்

பெற்றதாக வேறு ஒரு கருத்தும் உண்டு. "பணிந்தார்க்கும், நினைத்தார்க்கும், புகழ்ந்தார்க்கும், நீரிலொரு துளியாக நனைந்தார்க்கும் கதிகொடுக்கும் சிற்றாறும்", (சித்ரா), வடக்காறும் (செங்கோட்டையாறு), ஐந்து தலையருவியாறும் பாய்ந்து செழிப்பூட்டும் பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளது. 'சோலை வனைந்து சாலி விளைந்து சூழும் இலஞ்சி' எனும் வாக்கிற்கு ஏற்ப நெற்பயிரும், பல்வேறு மரங்களும் நிரம்பிய சோலைகள் ஆலயத்தின் நான்கு புறங்களிலும் அமைந்துள்ளன. ஆலயத்தைச் சுற்றிலும் இயற்கையன்னை எழில் கோலம் பூண்டு பொலிவுடன் விளங்கக் காணலாம். ஆலயம் மிகவும் பெரியதும் அல்ல; மிகச் சிறியதும் அல்ல. சுமார் இரண்டு ஏக்கர், பதினொரு செண்ட் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. கிழக்குப் பார்த்தவாறு அமைந்துள்ள இந்த ஆலயத்திற்கு மேற்கிலும், கிழக்கிலும் இரு வாயில்கள் உள்ளன இவ்வாலயத்திற்கு இரு பிரகாரங்களும், அர்த்த மண்டபமும், மணி மண்டபமும், மகா மண்டபமும், மூன்று நிலை கோபுரமும் பொலிவூட்டுகின்றன. நாற்புறமும் தேர் வீதிகள் அமைந்துள்ளன.

மணமும், வண்ணமும் பொருந்திய மலர்ச் செடிகளும், உயர்ந்து நிற்கும் மரங்களும் நிறைந்த முதற் பிரகாரத்தில் தல விருட்சமான மகிழ மரம் உள்ளது. ஆலயத்தின் முகப்பில் விநாயகர், சுப்பிரமணியர் ஆகியோர் உள்ளனர். கீழ்ப் பிரகாரத்தில் சூரியனும், தெற்குப் பிரகாரத்தில் தென் முகக் கடவுள், சப்தமாதர், சுரதேவர், அறுபத்து மூவர் போன்றோரும் உள்ளனர். மேலப் பிரகாரத்தில் கன்னி விநாயகர், வேணு கோபாலர், காசி விசுவநாதர், விசாலாட்சி அம்மன், குற்றால நாதர். குழல் வாய் மொழியம்மை, அகத்தியர், ஆறுமுகர் ஆகியோரைக் காணலாம். வடக்குப் பிரகாரத்தில் சனீஸ்வரர், சண்டிகேசர், முதலியோர்களும் இடம் பெற்றுள்ளனர். முருகர், வள்ளி, தெய்வ

யானை ஆகியோர் உற்சவர் வடிவிலும் காட்சியளிக்கின்றனர்.

தென்புறத்தில் வள்ளி, தெய்வயானையுடன் குமரப் பெருமான் கோயில் கொண்டுள்ளார். கையிலே வேல் ஏந்திய முருகப் பெருமானின் கோலம் மிக்க எழிலுடன் விளங்குகிறது. வடக்கிலுள்ள சந்நிதியில் சிவபெருமான், 'இருவாலுக நாயகர்' என்ற பெயருடன் இலிங்க வடிவில் தோன்றுகிறார். அண்மையில் 'குழல்வாய் மொழியம்மையின்' சந்நிதி உள்ளது. முருகர் சந்நிதிக்கு முன் மயிலும், சிவபெருமான் சந்நிதிக்கு முன் நந்தியும் உள்ளன.

கயிலையில் உமையம்மையின் திருமணத்தின்போது அனைவரும் குழுமியதால் அப்பகுதி தாழ்ந்தது. உயர்ந்திருந்த தென்பகுதியைச் சமப்படுத்தும் பணி அகத்திய முனிவரிடம் ஒப்படைக்கப்பட்டது. திருக்குற்றாலத்திலுள்ள ஆலயத்திலிருந்த விஷ்ணுவின் திருவுருவை இலிங்கமாக மாற்றுமாறு அவருக்குக் கட்டளை இடப்பட்டிருந்தது. அகத்தியர் திருக்குற்றால ஆலயத்தினுள் செல்வதற்கு வைணவர்கள் அனுமதிக்கவில்லை. இலஞ்சியிலுள்ள குமரப் பெருமான் அகத்தியருக்குக் காட்சி கொடுத்தார். வைணவர் போல் உருத்தரித்து ஆலயத்தினுள் சென்று மூலவரை இலிங்க உருவினராக மாற்றுமாறு முருகப் பெருமான் அருளினார். குகனருள் பெற்ற கும்ப முனியும் சித்ரா நதிக் கரையிலுள்ள 'வாலுகம்' எனப்படும் வெண் மணலால் அன்று மாலைப் பொழுதில் ஒரு லிங்கமும், மறுநாள் காலையில் மற்றொரு லிங்கமும் செய்வித்தார். பின்னர் அவ்விரு லிங்கங்களும் ஒன்றாகச் சேர்க்கப்பட்டன. இருலிங்கங்கள் ஒன்றாக்கப்பட்டதால் அப்பெருமானுக்கு 'இருவாலுகநாதர்' என்ற பெயர் ஏற்பட்டது. மணலால் செய்யப்பட்டதால் அவருக்கு அபிஷேகம் இல்லை. இருவாலுகநாதருக்குச் செண்பக மலரால் அர்ச்சனை செய்வது சிறப்பு. அருகில்

'இருவாலுக ஈசர்க்கினியாள்' என்று பெயருடைய அம்மன் அருள் பாலிக்கிறாள்.

பழம் காலத்தில் தோன்றிய இக்கோயிலில் அவ்வப்போது திருப்பணிகள் நடைபெற்றன. கி. பி. 1409ம் ஆண்டில் அழகர் குலசேகரதேவன் என்ற மன்னன் காலத்தில் ஆலயத்தின் அஸ்திவாரம் முதல் விமானம் வரை அனைத்துப் பகுதிகளும் புதுப்பிக்கப்பட்டன. மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீ வல்லப தேவனின் காலத்தில் இக்கோயிலில் பணிபுரிந்து வந்த அர்ச்சகர் நெடுநாளாகப் பணிக்குச் செல்லாததால் அவரது நிலம் பங்கிடப்பட்டு மூன்று நபர்களுக்கு அளிக்கப்பட்டது. அதன் பின்னர் அந்த அர்ச்சகரின் குடும்பத்தினர் நிலத்தில் தங்களுக்கும் பங்கு உண்டு என்று வழக்காடினர். திருக்குற்றாலமுடைய நாயனாரின் ஆலயத்தில் இந்த வழக்கை மன்னன் விசாரித்தான். பின்னர் அர்ச்சகரின் குடும்பத்தினருக்கு நிலத்தின் மற்றொரு பகுதி அளிக்கப்பட்டது. இக்கல்வெட்டில் 'தென்வாரி நாட்டைச் சார்ந்த சுந்தரபாண்டிய நல்லூரிலுள்ள இருவர்க்கு ஈஸ்வரமுடைய நாயனார் கோயில்' என இக்கோயில் வழங்கப்படுகிறது. ஜடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டானின் பத்தாவது ஆட்சியாண்டில் திருப்பாகீசுவரமுடைய நாயனார் ஆலயத்தில் பணிபுரிவதற்காக மூன்று அர்ச்சகர்கள் நியமிக்கப்பட்டனர். 1483-85 ஆண்டுகளில் சொக்கப்பட்டி ஜமீந்தாரான காளத்தியப்ப பாண்டியன் என்பவர் ஏழாயிரம் பவுன் செலவில் சுற்றுப் பிரகாரங்களைக் கட்டி, சில பகுதிகளைப் பழுது பார்த்தார். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் சிற்சில அன்பர்களின் உதவியுடன் மேல்வாசல், படித்துறை மடம், பாலம் முதலியன கட்டப்பட்டு கி. பி. 1923-ல் குடமுழுக்கு நடைபெற்றது. பின்னர் நீர்க்குழாய்கள், மின் விளக்கு போன்ற வசதிகள் செய்யப்பட்டன. கோபுரம், விமானம் ஆகியவை புதுப்பிக்கப்பட்டு, வர்ணம் பூசப்

பட்டது. 14-7-1965 அன்று அஷ்டபந்தன மகா கும்பாபி ஷேகம் நடைபெற்றது.

இங்கு நாள்தோறும் மகுடாகமத்திற்கு ஏற்ப ஆறு கால பூஜைகள் நடைபெறுகின்றன. சித்திரையில் நடை பெறும் 10 நாள் விழாவின் போது நாள்தோறும் குமரப் பெருமானும், இருவாலுக நாதரும் பற்பல ஊர்திகளில் பவனி வருகின்றனர். ஐப்பசியில் விஷு திருவிழாவும் விமரிசையாக நடைபெறும். இந்த இரு விழாக்களின் போதும் முருகப் பெருமான் தேவியருடன் பத்து நாட்கள் பவனி வந்து, பின் தீர்த்தவாரியுடன் திரும்பு வார். வழியில் குற்றால நாதர் பட்டாடையும், பைம் பொன்னும் அளிப்பார். தை மாதத் தெப்ப உற்சவத்தின் போது முருகன் மயில் வாகனத்தில் காட்சியளிப்பார். ஐப்பசியில் நடைபெறும் கந்த சஷ்டியின் போது முருகப் பெருமான் முதல் நாள் பிரம்மனாகவும், இரண்டாம் நாள் திருமாலாகவும், மூன்றாம் நாள் சிவபெருமானாக வும், நான்காம் நாள் மகேஸ்வரனாகவும், ஐந்தாம் நாள் சதாசிவனாகவும் தோன்றுவார். ஆறாம் நாள் வெள்ளி மயிலில் ஏறிச் சூரனை வெல்லும் நிகழ்ச்சி மிகவும் சிறப்பாகச்சித்தரிக்கப்படும்.

ஆலயத்தில் வெள்ளியினால் செய்யப்பட்ட அருமையான வேலைப் பாடுகள் அமைந்த மயில் வாகனம், தேர் முதலியனவும் வெள்ளிப் பூங்கோயில் சப்பரமும் உள்ளன. திரு. பா. சிவஞானம் பிள்ளை என்ற அன்பரின் முயற்சியால் குமரருக்குத் தங்கமுலாம் பூசிய அங்கி செய்யப்பட்டது; பற்பல வாகனங்களும் புதுப்பிக்கப்பட்டன. 1980ம் ஆண்டு மதிப்பீட்டின்படி ஆலயத்திற்குத் தொண்ணூறாயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகள் உள்ளன. ஆலயத்திற்குச் சொந்தமாக 80 ஏக்கர் நன்செய், புன்செய் நிலங்களும், பிற சொத்துக் களும் உள்ளன.

இலஞ்சி பற்றிய குறிப்புகளைத் திருக்குற்றாலத் தலபுராணம், திருச்செந்தூர்த் தலபுராணம், இலஞ்சி முருகன் உலா ஆகியவற்றில் காணலாம். முற்காலத்தில் தொண்டைமான் பரம்பரையைச் சேர்ந்த அரசர்கள் இங்கு கோட்டை ஏற்படுத்தி அரசோச்சியதாகத் தெரிகிறது. இவ்வூருக்கருகிலுள்ள கோட்டைக் கிணறு, கோட்டை மாடன், தொண்டைமான் குளம் ஆகிய பெயர்கள் இச்செய்திக்குச் சான்றாகும். வெற்றிவேற் குமரன் விருப்பமுடன் இங்கு அமர்ந்த கோலத்தை,

"புரந்தரன் மகளை வெற்பின் புள்ளிமான் மகளை
வேட்டுப்
பரங்கிரி தணியன்மேவிப் பரவுகுன்றிடந் தோறாடி
வரங்கெழு கயிலை நண்ணிக் கந்தவெற்புறை
தன்மான
வரன்றிரி கூடம்பொற்றி இலஞ்சியிலர்ந்தான் ஐயன்"

எனத்திருக்குற்றாலத் தலபுராணம் விளம்புகிறது.

அருணகிரிநாதர் இலஞ்சிக் குமரன் மீது நான்கு திருப்புகழ்ப் பாடல்களைப் பாடியுள்ளார்.

"இலஞ்சியில் வந்த இலஞ்சிய மென்று
இலஞ்சியி லமர்ந்த பெருமாளே" என்றும்

"எண் புனமேவி இருந்தவள் மோகப்
பெண் திருவாளை மணந்தியலார் சொல்
கெஞ்சியளாவு மிலஞ்சி விசாகப் பெருமாளே" என்றும்

"இலங்கு தர தமிழ் விளங்க வருதிரு
இலஞ்சி மருவிய பெருமாளே" என்றும்

"சோலை வளைந்து சாலிவிளைந்து
சூழுமிலஞ்சி மகிழ்வோனே" என்றும்

அருணகிரிநாதரின் பாடல்கள் இலஞ்சியைப் போற்றுகின்றன. மேலகரம் மகாகவி திரிகூடராசப்பக் கவிராயரின் புதல்வனான பண்டாரகக் கவிராயர் என்பார்

சுமார் 225 ஆண்டுகளுக்கு முன்பு 'திரு இலஞ்சி முருகன் உலா' என்ற நூலை இயற்றினார். பாட்டுடைத் தலைவனான இலஞ்சிக் குமரன் பவனி வருமபோது ஏழு பருவத்து மகளிரும் முருகனின் எழிலைக் கண்டு மகிழ்ந்த காட்சிகள் இந்நூலில் சித்தரிக்கப்பட்டுள்ளன. முருகப் பெருமானின் அவதாரப் பெருமை, அறுபடை வீடுகளின் மகிமை, அகத்தியர் வருகை, திருக்குற்றாலத்தின் சிறப்பு, இருவாலுகர் பிரதிஷ்டை, திருவிழாக்கள், உலாச் செல்லும் காட்சி போன்ற விவரங்களை இந்த நூலில் படித்து அறியலாம். இச்சிற்றிலக்கிய நூலில் 460 கண்ணி கள் உள்ளன. நான்முகன், வானவர்கோன் போன்றோர் வழிபட்ட இலஞ்சி தலத்தின் பெருமையை ஒரு பாடல் போற்றுகிறது.

காமேவு கற்பக நாடாளி கருதியிணை மலர்த்தாள்
அற்பகலு நாடியருச்சித்துப் பொற்புடனே
போற்றாரை யெங்கோன் பொருது வெல்லப்
பொன்னாட்டை
மாற்றாதடி வணங்கி வாழ்ந்திருந்தான் — எற்றார் வாழ்
குற்றாலமிந்தக் குவலயத்துண் டாகு முன்னே
பற்றாயிருந்த பழைய பதி.
(திரு இலஞ்சி முருகனுலா)

இலஞ்சி புதுவீடு ஐ. எஸ். சுப்பிரமணிய பிள்ளையவர்கள் 'திரு இலஞ்சிச் செவ்வேள் கலிப்பாமாலை' என்ற நூலும் 'வண்ணம்', 'சிந்து' 'தெம்மாங்கு' போன்ற சந்தப் பாக்களும் இயற்றியுள்ளார்.

கங்கைதலைச் சுமந்து கண்டத் தரவமணிந்
தங்கை மழுவேந்தி யம்பலத்தி லாடிமைந்தா
இங்கிதமாய் நானுமுனை யெந்நாளும் போற்றவருள்
செங்கமலப் பொற்பாதா தென்னிலஞ்சிச் செவ்வேளே''

(திரு இலஞ்சிச் செவ்வேள் கலிப்பாமாலை)

காஞ்சிபுரம் சிதம்பரமுனிவர் என்பவர் சுப்பிர மணியக் கடவுள் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்

என்ற நூலை இயற்றியுள்ளார். திருவிலஞ்சிக் குமார சுவாமி பிள்ளைத் தமிழ் என்ற சிற்றிலக்கிய நூல் ஒன்றும் உள்ளது இலஞ்சி ஆலயம் பற்றிய உரை நடைத் தல வரலாற்று நூலை ஏ. நாறும்பூநாத தேசிகர் என்பவர் எழுதியுள்ளார். சில ஆண்டுகளாக ஆலயத்தின் உட்பகுதிகள் புதுப்பிக்கப்பட்டு 1,36,000 ரூபாய் மதிப்புடைய திருப்பணிகள் முடிவுற்றன. 15-9-1986 அன்று அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நிறைவுற்றது

இக்கோயிலில் திருமணம் செய்து கொள்ள நிரம்ப வசதிகள் இருப்பதால் இங்கு திருமணங்கள் அதிக அளவில் நடைபெறுகின்றன. 1982ம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் ஆதிதிராவிடர்களுக்கு எந்தக் கட்டணமும் இன்றித் திருமணங்கள் நடந்த அனுமதி வழங்கப் பட்டுள்ளது.

இலஞ்சியிலுள்ள துணைக் கோயிலில் குலசேகர நாதரும், குழல் வாய்மொழியம்மையும் அருள்புரிகின்ற னர். இலஞ்சிக்கு அருகேயுள்ள திருமலை என்ற திருத் தலத்திலும் முருகப் பெருமானின் பிரசித்தி பெற்ற ஆலயம் ஒன்று உள்ளது.

கொங்குகமழ் தென்கயிலை முன்றிமுல் நடந்துவரு
குழவி வாரணம் வருகவே
கும்பமுனி தஞ்சமென நம்புதெனிலஞ்சிவரு
குமரநாயகன் வருகவே.

(திருவிலஞ்சிக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்)

# 5. ஈரோடு

### (பெரியார் மாவட்டம்)

## ஆர்த்தர கபாலீஸ்வரர் கோயில்

ஒருவன் பலவானான் ஒளியின் ஒளியானான்
குருவும் குருகாட்டும் குறியும் அவனானான்
உருவன் உள்ளத்தான் ஈரோடுடையண்ணல்
அருவன் ஆனந்தன் அம்மான் என்போமே

(சுத்தானந்த பாரதியார்)

முன்னொரு காலத்தில் தாண்டவன் முதலியார் எனும் சிவநேயச் செல்வர் வாழ்ந்து வந்தார். நெசவுத் தொழில் புரிந்து, அதன்மூலம் பெறும் கூலியைக் கொண்டு எளிய வாழ்க்கையை அவர் நடத்தி வந்தார். சிவபெருமான் மீது அளவற்ற பக்தியுடைய அப் பெருமான் அண்மையிலுள்ள சிவாலயம் சென்று சர்வேஸ்வரனை வழிபடத் தவறுவதில்லை. சிவனடியார் களுக்குத் தன்னால் இயன்ற அளவு உதவி அளித்து வந்தார். ஒருநாள் வயது முதிர்ந்த சிவனடியார் ஒருவர் இருமுழத்துண்டு ஒன்றை அளிக்குமாறு தாண்டவரிடம் இறைஞ்சினார். நெசவுக் கூலியாகத் தனது முதலாளி யிடம் ஒரு துண்டைப் பெற்று அதனை வயோதிகரிடம் தாண்டவர் அளித்தார். அண்மையிலுள்ள சிவாலயத்தில் பணிபுரியும் அர்ச்சகர், ஆலயத்தின் கதவுகளை மறுநாள் காலையில் திறந்தபோது அவருக்குப் பேரதிர்ச்சி

காத்திருந்தது. தாண்டவராயர் நெய்த துண்டு ஈசனின் திருமேனியை அலங்கரித்துக் கொண்டிருந்தது. அனுமதியின்றி ஆலயத்தில் இரவு நேரத்தில் பிரவேசித்து ஈசனுக்குத் துண்டு அணிவித்ததாகத் தாண்டவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. ஊராரும் தீர விசாரிக்காமல் தாண்டவரை நையப்புடைத்தனர் அப்போது அசரீரி ஒன்று எழுந்து உண்மையைக் கூறியது. சுந்தரமூர்த்தி நாயனாரைத் தடுத்தாள வயோதிக வேடம் பூண்ட அரனார், தாண்டவரின் பக்தியை உலகறியச் செய்ய மறுமுறை வயோதிகக் கோலம் பூண்டதாக அறிந்த ஊராரும் தாண்டவரைப் போற்றித் துதித்தனர். இச் சம்பவத்தை ஒரு பாடல் சிறப்பிக்கிறது.

தாண்டவன் எனும் பெயரான் தனிநாதனை
வணங்கிவந்தான்
ஆண்டவன் ஆட்கொண்டார் இந்த அன்பினை யார்
பெறுவார்
நீண்டநாள் வாழ்கில்லீர் நெடுமாலொடு
அயன்வணங்கும்
ஈண்தரும் உறந்தைநகர் திருத்தொண்டீச்சுரத்
தானே

செ. இராசுப்புலவர் — ஈரோட்டுப்பதிகம்)

பெரியார் மாவட்டத்தின் தலைநகராகவும், தலை சிறந்த வியாபார மையமாகவும் திகழும் ஈரோடு நகரில் இச்சம்பவம் நடைபெற்றது.

தட்சயாகத்தில் பங்கேற்ற நான்முகனின் தலையைச் சிவனாரின் கட்டளையின் பேரில் காளியம்மன் உடைத் தெறிந்தபோது அது நான்கு துண்டுகளாகச் சிதறி விழுந்தது. அவற்றுள் ஈரமான பகுதி விழுந்த இடமே ஈரோடு என்று பெயர் பெற்றதாகத் தலவரலாறு குறிப்பிடுகிறது. பிற மூன்று சிதறல்களுள் சிறிய ஓடு விழுந்த இடம் சித்தோடு என்றும், பெரிய ஓடு விழுந்த இடம் பேரோடு என்றும் பெயர் பெற்றனவாம். இங்கு

சிதறிய ஈர ஓட்டைச் சிவபெருமான் தனது கரத்தில் ஏந்தியதால் அவருக்கு "ஆர்த்தர கபாலீஸ்வரர்" என்றும், இவ்வூருக்கு "ஆர்த்தர கபாலபுரி" என்றும் பெயர் உண்டாயின. பிச்சைக்காரன் ஓடை, பெரும் பள்ள ஓடை ஆகிய இரு ஓடைகள் இருபுறங்களில் ஓடுவதால் இவ்வூருக்கு ஈரோடு என்ற பெயரும், இங்கு எழுந்தருளியுள்ள ஈசருக்கு "ஈரோடையப்பர்" என்ற திருநாமமும் தோன்றியதாக மற்றொரு கருத்து உள்ளது. ஆயினும் இக்கருத்துக்குச் சான்று பகரும் ஆதாரங்கள் எதுவும் கிடைக்கவில்லை.

வானுலகத்தைச் சேர்ந்த பெருநல்லாள், சிறு நல்லாள் ஆகிய இரு தேவமாதர்கள் சாபவிமோசனம் பெறும்பொருட்டு இப்பதியிலுள்ள ஈஸ்வரரை வணங்கி வழிபட்டனர். அவர்களது சாபமும் தீர்ந்தது. இவர்களது பூஜையை மெச்சிய வானவர்கள் மலர் மாரி பொழிந்தன ராம். இச்சம்பவம் சென்னிமலைத் தல புராணத் திலுள்ள "புஷ்பகிரி மான்மியம்" என்ற பகுதியில் இடம் பெற்றுள்ளது.

"சிரிய செங்கம லாலயம் மேவும் திருவெழின்மிக்கு
ஆரிரு மங்கையர்க் காவயிராவதம் தன்னில் வந்து
போரியல் வேல்விழி இந்திராணி நாயகன்
பொன்னொடு பூ
மாரி பொழிந்ததும் ஈரோடு சூழ் கொங்கு
மண்டலமே"

என்று கொங்குமண்டல சதகம் இச்சம்பவத்தைப் போற்றுகிறது.

காளியால் தண்டிக்கப்பட்ட பிரமதேவர் தனது தவறையுணர்ந்து ஈசனை நோக்கித் தவம் புரிந்தார். தன்னையும் மறந்து பிரமன் தவமியற்றியதால் "மறந்தை" என்ற பெயர் இப்பதிக்கு ஏற்பட்டது. சோழர்களின் திருப்பணிகளைப் பெற்றதால் 'உறந்தை

என்ற பெயரும் உண்டு. இப்பதியின் பிற பெயர்களை இங்ஙனம் தல வரலாறு குறிப்பிடுகிறது.

தென்திசை நோக்கி வந்த அகத்தியருக்குச் சிவபெருமான் திருமணக் கோலம் காட்டிய தலங்களுள் இதுவும் ஒன்று. இக்காரணத்தால் அம்மன் வலப்புறமாகக் கோயில் கொண்டுள்ளதாக இயம்புவர். கயிலையில் சிவபெருமான் திவ்யமந்திரத்தை ஓதியபோது உமையன்னை அதில் கவனம் செலுத்தாமல், அரனாரின் கழுத்திலுள்ள நீலகண்டத்தையே கவனித்து வந்தார். இதனால் கருநீல நிறமுள்ள ஆண் மயிலாக அம்மன் பிறந்து ஈரோட்டில் தவமியற்றிச் சாபவிமோசனம் பெற்றார். இதனால் இவ்வூருக்கு 'மயிலாபுரி' என்ற பெயர் ஏற்பட்டது.

ஈரோடு நகரின் மையப்பகுதியில், கிழக்கு நோக்கியவாறு ஆலயம் அமைந்துள்ளது ஆர்த்தர கபாலீஸ்வரர் என்ற பெயர் மருவி 'ஆருத்ர கபாலீஸ்வரர் ஆலயம்' என்றே இதனை அழைக்கின்றனர். வண்ணச்சுதை உருவங்களைத் தன்னகத்தே கொண்டுள்ள ஐந்து நிலை கோபுரம் முகப்பில் உள்ளது. கொங்கு நாட்டிற்கே உரிய கருடக் கம்பம் இக்கோபுரத்திற்கு முன்பு காட்சியளிக்கிறது. திருக்கார்த்திகை நன்னாளில் இதன்மீது தீபம் ஏற்றுகின்றனர். சுமார் 800 ஆண்டுகளுக்கு முன்பு எழுந்த வெளிமண்டபத்தில் பேரம்பலமும், சிற்றம்பலமும் அமைந்துள்ளன. இம்மண்டபத்தின் தூண்களில் எதிரும், புதிருமாக ஊர்த்துவத்தாண்டவர், ஆலங்காட்டுக்காளி ஆகியோரின் எழில்மிகு உருவங்கள் உள்ளன இச்சிற்பங்கள் இந்த நூற்றாண்டில் உண்டானவை.

மூலவர் இரண்டு அடி உயரமுள்ள சுயம்புலிங்கமாகத் தோன்றுகிறார். ஆவுடையாரும், பீடமும் சுமார் ஒன்றரையடி உயரம் இருக்கும். அதற்கு மேல் லிங்கத்தின் உயரம் அரை அடி இருக்கும். இன்று இவர்

ஆர்த்தரகபாலீஸ்வரர், ஈரோடையப்பர், ஈரஓடை அப்பர் என்றெல்லாம் அறியப் பெறுகிறார். முற்காலத்தில் தொண்டீஸ்வர நாயனார், தொண்டர் நாயனார், தம்பிரானார். தொண்டியப்பர், வாரணி பங்காளன் என்ற பெயர்களே இவருக்கு வழங்கப்பட்டன. ஈரோட்டுத் தொண்ட நாயனார் எழுந்தருளியுள்ள இவ்வாலயத்திற்குத் திருத்தொண்டீச்சுரம் என்ற பெயரே கல்வெட்டுக்களில் காணப்படுகிறது.

*சீரேறு சிவபுரத்தென் செல்வன் றன்னை*
*செம்பொன்னார் மேனியனாத் திகழ்ந்தான் றன்னை*
*நீரேறு செஞ்சடைமேல் நிலாவோ டொக்க*
*நிறைமணம் வீசுங்கொன்றை நிறைவித்தானைக்*
*காரேறு கண்டமுடைக் காளை தன்னைக்*
*காமனைக்காய் கண்ணுதலைக் கதிரோன் றன்னைப்*
*பேரேறும் ஈரோடைப் பெரியோன்றன்னைப்*
*பேசாத நாளெல்லாம் பிறவா நாளே*

—கவிஞர் ஆ. அரங்கநாதன்.
(ஈரோடை திருத்தொண்டீஸ்வரர் திருத்தாண்டகம்)

வண்டார் பூங்குழல் நங்காய் அத்தமுள் வாழ்வாய்
ஆகாய
வன்தேவர் கடுயர் சென்றேயே கிட வாழ்நாளே தாரும்
பண்டேயாகிய என் தாய் தந்தையேபாராய் தேரனை
பாவலரே பெரும் நாவலர் போற்றும் பண்பாம்
அன்பாளே
கண்ட இத்தரை சித்தர்கள் நத்திய கண்ணே மண்ணாளே
காலனை விழ்த்தியதேவன் மகிழ்ந்தனைகாரே பேறாளே
கொண்டல் அணைபொழில் அண்டை ஈரோடையிற்
கொட்டு சப்பாணி
குறைதவிர் ஆரணமுறை தவறாதவள் கொட்டுசப்பாணி

—வித்துவான் ஆ. அரங்கநாதன்.
(ஈரோடைவாரணங்குமுலையம்மையார்பிள்ளைத்தமிழ்)

தனிச்சந்நிதியில் கோலம் கொண்டுள்ள அம்மனின் திருநாமம் வாரணியம்மை ஆகும். வடமொழியில்

குஜமஸ்த குணமஸ்தன அம்பிகை (தர்ப்பையினாலான கச்சையணிந்த அம்பிகை) என இவரை அழைக்கின்றனர். வனப்புமிக்க இந்த அம்மனின் உருவம் நான்கடி உயரம் இருக்கும். நான்கு கரங்களும், சாந்தம் துலங்கும் முகமும், கருணை பொழியும் கண்களும், அழகிய வதனமும் கொண்ட இவ்வன்னை வழிபடுவோரை மெய்சிலிர்க்கச் செய்கிறார் பேரூர் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் திரு. வையாபுரி என்பவர் இவ்வம்மையின் திருக்கலியாண குணங்களை "வாரணியம்மைப் பதிகத்தில்" சித்தரித்துள்ளார்.

ஐவழிந்து கண்மறைந்து செவிதூர்ந்து உணர்வழிந்து
ஆக்கைமாயும்
செவ்வியதில் பொருள்போசம் மனைமக்கள் என உணர்வு
செல்லா வண்ணம்
எவ்வுயிர்க்கும் தாயான வாரண் நீ தொண்டசருடனாய்
வந்து
உய்வகையான் எனது நினைவெல்லாம் நின்
திருவடியிலுய்த்துக் காப்பாய்,

வித்துவான் அரங்கநாதன் இயற்றிய வாரணங்கு முலையம்மையார் பிள்ளைத்தமிழ் என்ற நூலும் அம்மனுக்கு அணிவிக்கப்பட்ட ஒரு முத்தாரமாகும்.

சுவாமி சந்நிதியின் உட்பிரகாரத்தில் பரிவார தேவதைகள் இடம் பெற்றுள்ளன. நால்வர், நம்பியாண்டார் நம்பி, பொல்லாப் பிள்ளையார், சேக்கிழார், அறுபத்து மூவர் ஆகிய உருவங்கள் அழகாக வடிக்கப் பட்டுள்ளன. அறுபத்து மூவரின் உருவங்களுக்கு மேல் அவர்களது குலம், காலம், பிறந்த ஊர், பிறந்த நட்சத்திரம் ஆகிய விவரங்களைத் தெளிவுடன் குறிப் பிட்டுள்ளனர். கருவறையின் வெளிப்புறங்களிலுள்ள கோஷ்டங்களில் தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர். பிரமன், துர்க்கை ஆகியோரைக் காணலாம் வள்ளி, தெய்வயானை சமேதரான முருகப்பெருமானுக்குத் தனி சந்நிதி உண்டு. பஞ்சபூதத் தலங்களைச் சேர்ந்த லிங்கம்

களும், அப்பதிகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை விளக்கும் சிற்பங்களும் இடம் பெற்றிருப்பது ஒரு அபூர்வ மான அம்சமாகும் திருக்காளத்தி மலையில் கண்ணப்பர் பூசித்தல், ஈசனின் அடியையும், முடியையும் காண இயலாத பிரம்மனும், திருமாலும் திருவண்ணாமலையில் அருள் பெறுதல், மாணிக்க வாசகரின் திருவெம்பாவை தோன்றிய சம்பவம் ஆகியவற்றை வண்ணச் சிற்பங் களாக அமைத்துள்ளனர். ஜுரஹரேஸ்வரர், 108 சிவலிங்கங்கள், நடராஜர் பைரவர், சூரிய சந்திரர், நவகிரகங்கள், சித்தி விநாயகர் ஆகியோரையும் இங்கு தரிசிக்கலாம். இங்குள்ள கொற்றவை, முருகன் போன்ற சில சிற்பங்கள் சோழர் காலத்திற்கும் முற்பட்டனவாக இருக்கலாம் என்று வரலாற்று அறிஞர்கள் கருது கின்றனர். வன்னி மரத்தடியிலுள்ள பழைய அம்மனின் சிற்பம் வேலைப்பாடு மிக்கது மயிலையில் சம்பந்தர் அங்கம் பூம்பாவையை உயிர்ப்பித்தல், அப்பர் அப்பூதி யடிகளைச் சந்தித்தல், அவிநாசியில் முதலையுண்ட பிள்ளையைச் சுந்தரர்மீட்டுத் தருதல், மாணிக்கவாசகர் ஈசரிடம அருள் பெறுதல், தாண்டவ முதலியாருக்கு ஈசர் அருளல் ஆகிய சம்பவங்களை அழகிய சிற்பங்களாக மண்டபங்களின் முகப்பில் அமைத்துள்ளனர்.

கல்வெட்டுக்கள் : 1981ம் ஆண்டு இக்கோயிலிலுள்ள நான்கு கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன. கொங்குச் சோழனான வீர ராஜேந்திரன், ஹொய்சாள வம்ச அரசர்கள், விஜயநகர வேந்தர்கள், கேரள மன்னர்கள் ஆகியோர் காலத்தில் இக்கல்வெட்டுக்கள் தோன்றின. விசயநகர அரசப் பிரதிநிதியான வீரசிக்கராயன் காலத்தில் ஒரே நிலத்திலிருந்து வரும் பொருளைத் திருக் தொண்டீச்சுரம் திருமால் ஆலயம் ஆகிய இரு கோயில் களுக்கும் சமமாகப் பங்கிடுவதாகப் பழுந்துறை நாட்டுச் சபையோர் முடிவு செய்தனர். விஜயநகர அரசர் வீரவேங்கடராயர் காலத்தில் (1579ம் ஆண்டு) சித்திரை ஒன்பதாம் நாள், பூர்வ, பஞ்சமி, மூல நட்சத்திரம்,

வெள்ளிக்கிழமையன்று தொண்டீஸ்வர முடையார், பள்ளிகொண்ட பெருமாள் ஆகியோருக்கு நிலக்கொடை அளிக்கப்பட்டது. இக்கல்வெட்டுக்கள் இந்நாட்டவரின் சமய ஒற்றுமைக்குச் சான்று பகரும்.

இரவி கோதையான கோக்கலி முக்கன் எனும் சேர மன்னனின் 4ம் ஆட்சியாண்டில் விக்கிரம சோமரையன் என்பான் தன் மகனுக்குப் பெயரிட்ட சம்பவத்தின் நினைவாக ஆலயத்திற்கு நிலதானம் அளித்தான். ஹொய்சாள மன்னன் வீரவல்லாள தேவன் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டின் மூலம் (கி. பி. 1342) ஆவணி மாதம் 16ம் நாள் ஞாயிற்றுக் கிழமையன்று திண்டல் என்ற ஊரை ஆலயத்திற்கு நன்கொடையாகச் சில வேளாளர் அளித்தனர். கி. பி. 1410ம் ஆண்டில் மகர சங்கராந்தி நன்னாளில் ஆதியப்ப கவுண்டர் என்பார் நிலக்கொடை அளித்தார்.

இக்கல்வெட்டுக்கள் மூலம் அரசர், அதிகாரிகள், பொதுமக்கள் ஆகியோர் திருநாட்களன்று, திருவீதியுலா அவிப்பலி, அர்ச்சனை, பூசைக் கட்டளை, போன்ற வற்றிற்காகத் தானம் வழங்கியதாக அறியலாம். ஆலயத்தில் பொருள் தட்டுப்பாடு ஏற்பட்ட காலத்தில் குடிவரி என்ற பெயரால் ஆலயத்திற்கு மக்கள் பொருள் வழங்கினர். அளித்த மானியங்களை நிறைவேற்றவும், கண்காணிக்கவும், குழுக்கள், அதிகாரிகள், சபையோர் போன்றவர்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது அக் காலத்தில் வசூலிக்கப்பட்ட வரிகள், புழக்கத்திலிருந்த நாணயங்கள், அளவை முறைகள், பல ஊர்களின் பெயர், அதிகாரிகளின் பெயர் போன்ற செய்திகளை இக்கல் வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

முற்காலத்தில் இக்கோயில் ஒரு அழகிய கோட்டைக் குள் அமைந்திருந்தது. அதனைச் சுற்றி ஒரு அகழியும் இருந்தது. 1628ம் ஆண்டில் திருமலை நாயக்கர் அக் கோட்டையைச் செப்பனிட்டு இராணுவ முகாமாக

மாற்றினார். 1800ம் ஆண்டில் இங்கு ஒரு மண்கோட்டை இருந்ததாகப் புக்கானன் கூறுகிறார். பஞ்ச நிவாரண வேலைகளுக்காக 1873ம் ஆண்டில் ஆங்கிலேயர்கள் அதனைத் தகர்த்ததாக ஸ்வார்ட்ஸ் பாதிரியின் கையேடு குறிக்கிறது.

இத்தலத்தின் மீது வசன நடையிலுள்ள ஒரு பழைய தலபுராணம் உண்டு. ஆலயத்திலுள்ள சிதைந்த கல்வெட்டு ஒரு பழைய பாடலைக் குறிப்பிடுகிறது. ஈரோடு மீது சுத்தானந்த பாரதியார், புலவர் வெ. ரா. தெய்வசிகாமணி கவுண்டர் ஆகியோர் இரு பதிகங்களைப் பாடியுள்ளனர். அந்தியூர் அரங்கநாதனார் பாடிய வாரணியம்மை பிள்ளைத் தமிழ் ஒரு அழகிய இலக்கியப் பொக்கிஷம். ஈரோடு முத்துக் கருப்பன் புலவர் இயற்றிய ஐயனாரப்பன் பள்ளு, வாலசுப்பக் கவிராயரின் கொங்கு மண்டல சதகம், கம்பநாத சுவாமிகள் இயற்றிய சதகம், ஆகிய நூல்களில் ஈரோடு நகரின் பெருமை குறிப்பிடப் பட்டுள்ளது.

பூந்துறை நாட்டிலுள்ள 32 ஊர்களுள் ஈரோடு இடம் பெற்றுள்ளது. கல்வெட்டில் இவ்வூர் ஈரோடு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஈரஓடை என்ற பெயர் அவற்றிலே இல்லை. "ஈரோடான மூவேந்த சோழச் சதுர்வேதி மங்கலம்", என்று ஒரு கல்வெட்டில் குறிப்பு உள்ளது. இலக்கியங்களில் 'சாலிநிறை ஈரோடு" 'பெரும்புனல் பீடுற ஓங்கப் பிறங்கும் ஈரோடு எனும் பதி' 'உருவளர் கதலி கன்னமும் கமுகும் ஓங்கு செஞ்சாலியும் மலியும்' 'திருவளர் மயிலை புரிநகர்' என்றெல்லாம் இவ்வூர் போற்றப்பட்டுள்ளது. இங்குள்ள மகளிர் பக்தி நெறியில் சிறந்து விளங்குவதாக ஒரு பாடல் செப்புகிறது.

இராசராசபுரம் எனும் தாராபுரத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட கொங்கு சோழன் கரிகாலன் 1146ம் ஆண்டில் இக்கோயிலைக் கட்டியதாகக்

கூறுவர். 1500 ஆண்டுகளுக்கு முன்பு சூரம்பட்டியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட இலட்சுமிகாந்தன் என்ற அரசனின் ஆட்சிக்காலத்தில் அரண்மனைக்குப் பால் கொணர்ந்த இடையர்கள் கால் இடறித் தடுக்கி விழுந்த இடத்தில் தோண்டியபோது அங்கு திருத்தொண்டீஸ்வரராகிய மூலலிங்கம் இருந்ததாகத் தல வரலாறு இயம்பும் இக்கோவிலின் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகிய பகுதிகள் முதலில் தோன்றின. சுற்றுக்கோயில்கள், வெளிமண்டபங்கள் ஆகியன சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் தோன்றின. 1660ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் இரண்டாம் நாள் இராஜகோபுரம் கட்டி முடிக்கப்பட்டுப் பெருஞ்சாந்தி விழா நடைபெற்றது. ஈரோடிலுள்ள அருள்நெறிக் கழகத்தின் பெருமுயற்சியால் படிப்படியாகத் திருப்பணிகள் நடைபெற்று 30-4-1979 (சித்தார்த்தி ஆண்டு சித்திரைத் திங்கள் 17ம் நாள்) அன்று குடமுழுக்கு நிறைவுற்றது. இத்திருப்பணிகள் ஆறு இலட்ச ரூபாய் செலவில் நடந்தேறின. இராஜஸ்தானிலிருந்து கொணரப்பட்ட சலவைக் கற்களால் உட்பகுதிகள் முழுமையும் அலங்கரிக்கப்பட்டன. பெங்களூரிலிருந்து வந்த சிவப்புக்கற்களின் உதவியால் ரூ. 40, 000/— செலவில் நடராஜரின் இரத்தின சபை அமைக்கப்பட்டது. அறுபத்து மூவர் சந்நிதிகளுக்கு மேல் தனித்தனி கலசங்களுடன் கூடிய விமானம் கட்டப்பட்டது.

ஆலயத்திலுள் அமைந்துள்ள கபால தீர்த்தத்தின் நீர் ஈசனின் வழிபாட்டிற்குப் பயன்படுகிறது. இத்தலத்தில் இருந்த கமலபுஷ்கர்ணி என்ற தீர்த்தம் தூர்ந்து விட்டது. தலவிருட்சமான வன்னிமரம் வெளிப் பிரகாரத்தில் உள்ளது. மாசி மாதம் 25, 26, 27 ஆகிய நாட்களில் சூரியன் கபாலீஸ்வரர் மீது தனது ஒளிக்கதிர்களை வீசிப் பூஜை புரிகிறான். இங்கு ஆகம முறைப்படி ஆறுகால பூஜை சிறப்பாக நடைபெறுகிறது. பூஜைக்கான ஒரு சில கட்டளைகள் அமுலில் உள்ளன. அர்த்தஜாம வழிபாடு,

பள்ளியறை பூஜை, ஆகியன இங்கு சிறப்பாக நடைபெறும். ஆனித் திருமஞ்சனம், அறுபத்து மூவர் விழா, விநாயக சதுர்த்தி, பிட்டுத் திருவிழா, நவராத்திரி, கந்த சஷ்டி, ஆருத்ரா தரிசனம், தைப்பொங்கல், தைப்பூசம், மகாசிவராத்திரி, பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் இக்கோயிலில் கொண்டாடப்படுகின்றன. ஆலயத்திற்குச் சொந்தமாகக் காலிமனைகள், நந்தவனம், வாகனங்கள் ஆகியன உள்ளன. நன்கு வளர்ச்சியுற்றுச் செல்வச் செழிப்பு மிக்க நகரின் மையப்பகுதியில் அமைந்துள்ளதால் இக்கோயிலுக்கு ஏராளமான பக்தர்கள் வருகை தந்து ஈசனின் அருளைப் பெறுகின்றனர். இன்று இக்கோயில் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது.

நம்பும் அன்பர்க்கு நடனச் சிலம்பானான்
வம்பர் இடந்தீர்க்க வாய்ப்பூட்டவனானான்
இம்பர் ஈரோடின் இறைவன் இணையில்லான்
உம்பர் உயர்வானான் ஊனுள்ளுணர்வானான்

(சுத்தானந்த பாரதியார்)

# 6. கல்லங் குறிச்சி

(திருச்சி மாவட்டம்)

## கலிவரதராஜர் ஆலயம்

கல்லங்குறிச்சியுறை கம்பப் பெருமாள் தன்
நல்லடியைப் போற்றுவார் தாம் நாடோறும்
— செல்வந்தான்
பெற்றிடுவர் சீர்மிகுந்தே பேருலகில் வாழ்ந்தினிதா
யுற்றிடுவ ரென்றே யுணர்.

முந்தைய யுகங்களில் பற்பல அவதாரங்களை யெடுத்த மகாவிஷ்ணு, கலியுகத்தில் நன்மையை நிலை நிறுத்தி, அன்பர்களுக்கு அருள்புரியப் பற்பல சமயங்களில் தனது திருவுருவத்தை வெளிப்படுத்திக் கோயில் கொள்கிறார். ஆழ்வார்கள், ஆசாரியார்கள், சான்றோர் ஆகியோர் போற்றிய தலங்கள் விசேடமாகக் கருதப்படுகின்றன. பிற்காலத்தில் எழுந்த தலங்களும் இறையருள் கிடைக்க வழிகாட்டுவதால் அவற்றையும் பெரிதும் பேணுகின்றனர். அத்தகைய தலங்களுள் கல்லங்குறிச்சியும் ஒன்று. அரியலூரிலிருந்து சுமார் மூன்று கி.மீ. தொலைவில் இப்பதி உள்ளது. விசேட காலங்களில் அதிக அளவிலும், பிற நேரங்களில் சொற்ப அளவிலும் இவ்வூருக்குப் பேருந்துகள் விடப்பட்டுள்ளன. நின்ற, இருந்த, கிடந்த நிலைகளில் காட்சியளிக்கும் திருமால் இங்கு கம்பம் வடிவில் கலிவரதராஜர் என்ற

பெயருடன் அருள்புரிவது ஒரு அபூர்வமான காட்சி யாகும்.

திருச்சி மாவட்டத்தின் ஒரு பகுதியான உடையார் பாளையத்தைச் சேர்ந்த சிதளவாடி யென்ற சிற்றூரில் சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு வன்னிய குலத்தைச் சார்ந்த கோபாலன் படையாட்சி என்றொரு வர் வாழ்ந்து வந்தார் கடுமையாக உழைப்பதில் பெரு விருப்பு கொண்ட கோபாலன் தனது உறைவிடத்திற்கு அருகேயுள்ள காடுகளை வெட்டி விளைநிலமாக மாற்றி உழவுத் தொழில் மேற்கொண்டார். அவரது நிலத்தில் பணிபுரியும் பணியாட்கள் தங்குவதற்கும் பல சிறிய வீடு களை அப்பகுதியில் கட்டிக் கொடுத்தார். கோபாலனும் அவரைச் சேர்ந்தவர்களும் வசித்துவந்த பகுதி 'கோபாலன் குடிக்காடு'' என வழங்கப்பட்டது. இன்று இப்பகுதியை ''கோப்பிலிங்கங்குடிக்காடு'' என்று அழைக்கின்றனர். கோபாலனின் குலத்தவர்களே இன்று இங்கு வசித்து வருகின்றனர்.

கோபாலன் படையாட்சிக்கு மங்கான் எனும் மகன் பிறந்தான். இளம் பிராயத்திலிருந்தே தெய்வபக்தி, கடமையுணர்வு, உயிர்களிடம் பரிவு, ஆகிய உயர் குணங்கள் மங்கானிடம் குடிகொண்டிருந்தன. உரிய பருவம் வந்ததும் மங்கான் இல்லறவாழ்வில் ஈடுபட்டார். இவரது குலத்திற்குரிய பசுமந்தைகளைப் பேணும் பொறுப்பும் மங்கானை அடைந்தது. ஒருநாள் பசு மந்தைகள் வழக்கம் போல் கானகத்தில் மேயச் சென்று திரும்பின. அவற்றுள் அழகு நிறைந்த உயர்ந்த பசு ஒன்று கருவுற்றிருந்தது. அன்று அப்பசு பிற பசுக்களுடன் வீடு திரும்பவில்லை. தன் உயிரைவிட அதிக பற்றுக் கொண்டிருந்த பசுவைக் காணாத மங்கான் பரிதவித்துப் போனார். இடைவிடாமல் மூன்று நாட்கள் எல்லா இடங்களிலும் தேடியும் அப்பசு கிடைக்காமையால் மங்கான் துயரக் கடலில் மூழ்கினார். மூன்றாம் நாள்

சோர்வு மிகுதியால் தன்னையும் அறியாமல் கானகத்தில் ஒரு மரத்தடியில் உறங்கிவிட்டார்.

அன்று இரவு கடையாமத்தில் தேஜஸும், தவச் சிறப்பும் நிறைந்த ஒரு சித்தர் மங்கானின் கனவில் தோன்றி, ஆறுதல் மொழிகள் பல கூறினார். மேற்புற முள்ள வனத்தில் போராலம், மாவிலிங்கம் ஆகிய இரு மரங்களுக்கு இடையிலுள்ள சங்கம் புதரில் மங்கானின் பசு கன்று ஒன்றை ஈன்று விட்டுத் தங்கியுள்ளதாகவும் அச்சித்தர் அருளினார். சித்தர் குறிப்பிட்ட இடத்தைக் கண்டுபிடிக்க இயலாமல் மூன்று தினங்களாக மங்கானும் அவரது பணியாட்களும் அலைந்தனர். இறுதியில் அவ்விடத்தைக் கண்டுபிடித்த போது புதரில் மறைந் திருந்த பசு தனது கன்றுடன் வெளிப்பட்டு மங்கான் மீது தனது அன்பைச் சொரிந்தது. மங்கானும் தனது பேரன்பிற்குரிய பசுவைக் கண்டு பேருவகை அடைந்தார்.

சில நேரத்தில் ஒரு அற்புத நிகழ்ச்சி நடைபெற்றது. சிறிது தூரத்தில் ஒரு புதருக்கு அருகே, பூமியில் பாதி புதைந்தவாறும், பாதி வெளிப்பட்டவாறும், ஒரு கம்பம் இருந்தது. அக்கம்பத்தைக் கண்டவுடன் பசு தனது கன்றையும் மறந்து அதன்மீது பாலைச் சொரிந்தது. மங்கான் அக்கம்பத்தைக் கண்ட போது அதனைச் சுற்றிலும் பால் உறைந்து கிடந்தது அந்த அரிய சம்பவத்தின் மகிமையை உணராத மங்கான் அக்கம் பத்தை மும்முறை வலம் வந்தபின் தனது இருப்பிடத் திற்குத் திரும்பினார்.

இறையருளால் பசு, கன்று ஆகியவற்றைத் திரும்பப் பெற்றதால் பெருமகிழ்ச்சியடைந்த மங்கான் அவ்விடத் தில் தோன்றிய அற்புத சக்தியை உணரவில்லை தனது பரம்பரையினர் வாழும் நாள் அளவும் பெரும்புகழை அளித்து, பிறவிப் பெருங்கடலைக் கடக்க உற்ற துணை யாக இருக்க வல்ல அப்பரம் பொருளின் மகத்துவத்தை அவர் அறியவில்லை. பசு கிடைக்கப்பெற்ற நாளுக்கு

ஏழு நாட்கள் கடந்ததும் மங்கானின் கனவில் சித்தர் மீண்டும் தோன்றினார். "அறியாச் சிறுவனே! கோடிக் கணக்கான ஆண்டுகள் தவமியற்றி வழிபடும் தவசி களுக்கும் கிடைக்காத பேறு உனக்குக் கிடைத்த போதிலும் அதன் மகிமையை அறியாத பேதையே! இது போன்ற சம்பவத்தைப் பற்றி நீ கேள்வியுற்றதுண்டோ? ஒரு பசு பெற்ற பாக்கியத்தைக் கூட நீ அடைய வில்லையே! உன் கைப்பொருள் கிடைத்தவுடன் பரம் பொருளை மறந்துவிட்டாயே!" என்று அசசித்தர் கடிந்து கொண்டார். தன்னை நல்வழிப்படுத்த முனைந்த அச்சித்தர் யாரென அறிந்து கொள்ள மங்கான் விரும்பினார். சித்தரும் தனது சரிதையையும், அவ் விடத்தில் இறைவன் தோன்றிய வரலாற்றையும் எடுத் துரைத்தார்.

சிதளவாடியில் வசித்து வந்த மங்கானின் முன்னோர் கள் மகாவிஷ்ணுவை நாள்தோறும் வழிபடும் குலத்தில் உதித்தவர்கள் திருமாலுக்கு ஒரு ஆலயம் எழுப்ப அவர்கள் முயற்சி செய்தனர். ஒரு கம்பத்தை வண்டியி லேற்றி மேற்கு நோக்கிச் சென்றபோது வண்டியின் அச்சு முறிவுற்றதால் அக்கம்பம் கீழே விழுந்து அதன் முனை முறிவுற்றது இதனை அபசகுனம் என்று கருதிய அம்மக்கள் கம்பத்தை அவ்விடத்திலேயே விட்டு விட்டுச் சென்றனர் இக்கம்பத்தின் பெருமையை அறிந்த தவசி கள், அந்தணாகள் போன்றோர் மட்டும் அதனை மனதார வழிபட்டுத் துதித்தனர். இந்த அரும்பெரும் சுடரை வழிபடும் பேறுபெற்ற ஒரு சிலருள் சித்தரும் ஒருவர் அவர் இவ்வூருக்கு அருகேயுள்ள 'மேலை மணவேலி' என்ற கிராமத்திற்குக் கிழக்கேயுள்ளி கல்வோடையின் மேற்கரையிலுள்ள 'இலிங்கத் தடி மேடு' என்ற இடத்தில் சமாதியடைந்தார். உடைந்து கிடந்த கம்பத்தை ஆலயத்தில் நிறுவி வழிபாடு, விழா ஆகியவற்றிற்கு வழிவகுக்கும் அரிய வாய்ப்பு, மங்கானுக் குக் கிடைத்துள்ளது. அது நன்கு நிறைவேற்றப்பட வேண்டும். இவையே சித்தர் அளித்த அறிவுரைகள்.

மங்கான் படையாட்சி தனது அறிவீனத்தை எண்ணி வெட்கியபோதிலும் தான் பெற்ற பேற்றை எண்ணிப் பேரின்ப வெள்ளத்தில் மிதந்தார். விடிந்தவுடன் கானகத்திற்குச் சென்று கம்பத்தைக் கட்டித் தழுவினார். உடல் மயிர்க் கூச்சம் அடைந்தது. நா தழு தழுத்தது; உள்ளம் பரவச நிலையை அடைந்தது. சிறிது நேரம் மூர்ச்சையடைந்த பின்னரே நினைவு அடைந்தார். திருமாலின் பெருமைகளைப் போற்றித் துதித்தார். பின்னர் கம்பத்தை நிலையாக நிறுத்த முயன்றார். பல நூற்றாண்டுகளாகப் புதைந்திருந்த போதிலும் அன்பரின் பக்திக்குக் கட்டுப்பட்ட அதன் இறையுருவம் பூமியிலிருந்து எளிதில் அசைந்து கொடுத்தது.

கானகத்தின் ஒரு பகுதியை அழித்துத் தூய்மைப் படுத்தியவுடன் கம்பப் பெருமாளுக்கு மூலமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கட்டினார். கம்பத்தின் மேல் பகுதியில் காட்சியளிக்கும் அனுமனின் உருவம் பதிக்கப்பெற்ற கொடிச்சேலை ஒன்றை உருவாக்கி, அதனைத் தனது இல்லத்தில் பூஜை அறையில் நிறுத்தி வழிபட்டு வந்தார். சனிக்கிழமையன்றும், பிற விசேட நாட்களிலும் இக்கொடிச் சேலையை ஆலயத்திற்கு எடுத்துச்சென்று பூசித்த பின்னர் இல்லத்திற்கு எடுத்துச் செல்வதுண்டு. இப்பழக்கம் வழி வழியாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இதுவே கம்பப் பெருமாள் கோயிலில் அமர்ந்த வரலாறு. இத்திருப்பணியை முடித்த பின்னர் மங்கான் படையாட்சி திருமாலின் பாதாரவிந்தங்களையடைந்தார்.

கல்லங்குறிச்சி ஆலயத்திற்கு மங்கான் படையாட்சியின் குடும்பத்தினர் பல சிறப்புக்களைச் செய்தனர். அவரது திருக்குமாரரான நாராயண படையாட்சி அன்பர்களின் பொருளுதவியுடன் மகாமண்டபம், சபாமண்டபம், சுற்று மதில் ஆகியவற்றைக் கட்டினார். அவரை அடுத்துப் பொறுப்பேற்ற இராமப் படையாட்சி பின் மாளிகை, திருக்குளம் ஆகியவற்றை அமைத்தார்.

உற்சவ விக்கிரகங்கள் பலவற்றை ஆலயத்தில் இடம் பெறச் செய்தார். உற்சவ மூர்த்திகள் விழாக்காலங்களில் பவனி வருவதற்கு ஏற்ப இரு திருத்தேர்களை உண்டாக்கினார்.

இராமசாமிப் படையாட்சி என்பார் அலங்கார மண்டபம், வாகன மண்டபம், திருமடைப்பள்ளி, நான்கு கால் மண்டபம் ஆகியவற்றைக் கட்டுவித்ததுடன், திருமதிலைச் செப்பனிட உதவினார். இராமசாமி படையாட்சியின் மகனான கோவிந்த படையாட்சி காலத்தில் கோயில் பெரும் வளர்ச்சியடைந்தது. கோவிந்த படையாட்சி கம்பப் பெருமாளுடன் நேரடியாகவே பேசி வந்ததாகவும், பெருமானின் அருள்மொழி கேட்டே அவருக்குரிய திருப்பணிகளைப் புரிந்ததாகவும் கூறுகின்றனர். தசாவதார மண்டபம், யாக மண்டபம், களஞ்சியம், இருப்புக் கொட்டாரம் ஆகிய புதிய பகுதிகள் கட்டப்பட்டு ஆலயம் விரிவுற்றது. மடைப்பள்ளியின் வெளிமதில் தோன்றியது வெளிப் பிரகாரத்தில் தளவரிசைகள் அமைக்கப்பட்டன. மாட்டுக் கொட்டிலும், பயணிகள் தங்கும் சத்திரமும் எழுந்தன. கிணறு, நந்தவனம், தண்ணீர்ப்பந்தல் ஆகியனவும் அமைக்கப்பட்டன. இந்திர தீர்த்தம், கமல தீர்த்தம், பிரம்ம தீர்த்தம் ஆகிய புனல்களும் உருவாயின. அடர்ந்த தோப்புகள் மானியமாக அளிக்கப்பட்டன. ஆலயத்தைச் சுற்றிலும் சாலைகள் ஏற்படுத்தப்பட்டன. கோபுர வாயிலில் ஒலி எழுப்ப ஒரு அழகிய மணி கட்டப்பட்டது. வெள்ளி முலாம் பூசப்பட்ட கருடன், குதிரை, ஆகிய வாகனங்களும், முத்து விமானம், முத்து மஞ்சம், பெரிய திருவாக்ஷி, 108 திருத்தேர் விளக்கு போன்ற பொருட்களும், பல திருவாபரணங்களும் கோயிலுக்கு நன்கொடையாக வழங்கப்பட்டன. ஆலயம் வளமும், சிறப்பும் பெற்று விளங்கியதால் வெளியூரிலிருந்து ஏராளமான பக்தர்கள் இங்கு வழிபாடு புரிந்து அருள் பெற்றனர்.

கோவிந்த படையாட்சியின் புத்திரர்கள் இளம் பிராயத்தினராக இருந்ததால் இவர்களது மாமனான பழனிமுத்துப் படையாட்சி என்பார் ஆலயத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றார். பிரகாரத்தின் கீழ்த் தளவரிசை சீர்படுத்தப்பட்டது. தெற்கு வாயிலருகே பல வண்ண ஓவியங்கள் தீட்டப்பட்டன. முன்கோபுர வாயிலில் வலிமை மிக்க கதவுகள் எழுந்தன. யாத்திரிகர்கள் தங்குவதற்குப்பெரிய விடுதி ஒன்றும், அதன் அருகே தகரக் கொட்டகை, நாடகசாலை ஆகியனவும் தோன்றின. இறைவன் வீதியுலாவிற்காக வெள்ளி யானை வாகனமும் அளிக்கப்பட்டது ஏழைகளுக்குக் கல்வி வசதியும், உணவும் அளிக்க ஏற்பாடுகள் செய்யப் பட்டன. சிறுவனாக இருந்த இராமசாமி படையாட்சி உரிய வயதை அடைந்தவுடன் பொறுப்பை அவரிடம் அளித்துவிட்டுப் பழனிமுத்து விலகிக் கொண்டார்.

ஆலயம் பழைய பாணியில் கட்டப்பட்டிருந்ததால் உள்ளே போதிய ஒளியும், காற்றும் இல்லாமல் இருந்தது. ஆலயத்தின் முகப்பில் பல சாளரங்கள் ஏற்படுத்தப்பட்டு, ஒளியும், காற்றும் உள்ளே செல்ல வழி அமைக்கப் பட்டது. உட்பகுதிகளில் பொருட்களைச்சேமிக்கும் கிடங்கும், விளக்குகள் பொருத்த அறையும் கட்டப் பட்டன. முற்பகுதியில் ஒரு மணி மண்டபம் தோன்றியது. அங்கு ஒரு பெரிய கண்டாமணி கட்டப்பட்டது. உற்சவ மூர்த்திக்கு ஒரு தனி சந்நிதி உண்டாயிற்று. வெள்ளிச் சிவிகை, வெள்ளி விமானம் போன்ற வாகனங்கள், வெள்ளிப் பாத்திரங்களுடன், நவமணிகள் பதித்த பதக்கங்கள், அழகிய வேலைப்பாடு மிக்க இரத்தினக் கம்பளம், பட்டுச்சரிகை விரிப்பு, பலவிதமான விளக்குகள் ஆபரணங்கள் போன்ற விலை மதிப்பு மிக்க பொருட்கள் அன்பளிப்பாக அளிக்கப்பட்டன. யாத்திரிகர்கள் வசதிக்காகத் தங்கும் விடுதிகள், தண்ணீர்ப் பந்தல், முடியிறக்கும் மண்டபம், புத்தக சாலை, மருத்துவ சாலை போன்றன தோன்றின. இவையே அன்னைக்

காலத்தில் மேற்கொள்ளப்பட்ட திருப்பணிகள். இவ்வாறு மங்கான் படையாட்சி காலத்தில் எழுந்த ஆலயம் பிற்காலத்தில் பற்பல வளர்ச்சிகளைப் பெற்று இன்று நல்ல நிலையில் உள்ளது.

இன்று சுமார் ஒரு ஏக்கர் நிலப்பரப்பில் ஆலயம் பொலிவான தோற்றத்தைப் பெற்றுள்ளது. முகப்பில் இராஜகோபுரம் இல்லாத போதிலும் நான்கு பக்கங் களிலும் படிகளுடன் கூடிய வாயில்களும், அவற்றின் மீது மொட்டை கோபுரங்களும் உள்ளன. நான்கு பக்கங்களிலும் 16½ அடி உயரமுள்ள வலிமையான மதிற் சுவர்கள் அமைந்துள்ளன. நான்கு வெளிப் பிரகாரங் களிலும் வெள்ளைப் பாவு கற்கள் பரப்பப்பட்டுள்ளன. கருடாழ்வார் சந்நிதி,கொடிமரம் ஆகியவற்றைக் கடந்து உட்புறம் செல்லலாம். கருங்கல் பணிகளைப் பெற்றுள்ள தசாவதார மண்டபத்தின் தூண்களில் திருமாலின் பத்து அவதாரங்களையும் சிற்பங்களாகச் செதுக்கியுள்ளனர். கருவறையில் மூலவர் கம்ப வடிவில் காட்சியளிக்கிறார். இவர் மண்டபத்திற்கு மேல் மூன்று அடிஉயர்ந்து காணப்படுகிறார். இக்கம்பத்தின் மேல் முனை உடைந்துள்ளது. கம்பத்தின் உச்சியில் உயிருள்ள தேரை இருந்ததால் அதன் உச்சிமுனை உடைந்து, சிதறிவிட்டதாகக் கூறுவர். மண்டபத்தின் மீது நான்கு வாயில்களையுடைய விதான கோபுரமும், அதன் மீது கலசமும் உள்ளன. விசேட காலங்களில் படிகள் மீது ஏறி இளநீர், பால், சந்தனம் ஆகியவற்றால் கம்பப் பெருமானுக்கு அபிஷேகம் செய்வதுண்டு. இந்த மூலவரைச் சங்கவனப் பெருமாள், திருக்கம்பப் பெருமாள், பசு காத்த பெருமாள், பால் குளித்த பெருமாள், 'திருமவுன கம்பப் பெருமாள்,' 'திருவெழுச்சி கம்பப் பெருமாள்,' 'யோக கம்பப் பெருமாள்,' 'நந்தியடி காத்த பெருமாள்,' போன்ற பற்பல, திருநாமங்களால் அழைக்கின்றனர். ஆயினும் கலிவரதராஜப் பெருமாள் என்றே பெயரே அதிகமாக வழக்கிலுள்ளது.

"கருமைபொலி திருவுருவொ டடியேங்கள்வாழ்வுறக்
கல்லங்குறிச்சி நகரிற்
கம்பத் திருந்த கலியுக வரத நலமெலாங்க
கருணை மலியப் பொழிதியே"

பெருமாளுக்கு அருகேயுள்ள தேவியை 'அலர்மேல் மங்கை தாயார்,' 'கலியாண சுந்தரி,' 'வரலக்ஷ்மியம்மன்,' 'இராச லக்ஷ்மியம்மன்,' 'சந்தான லக்ஷ்மியம்மன்' ஆகிய பெயர்களால் அழைப்பர். இந்திர தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், கமல தீர்த்தம், நந்தியடிகள் தீர்த்தம், கருட தீர்த்தம், அனுமந்த தீர்த்தம், தருமதேவதை தீர்த்தம், பாபநாச தீர்த்தம், குபேர தீர்த்தம், முனிவர் தீர்த்தம் ஆகிய புனிதப் புனல்கள் இங்கு இருப்பதாகக் கூறுவர்.

மகாலிங்க மரமே இங்கு தலவிருட்சமாகும்.

ஆலயத்திலுள்ள கருவறையின் அருகே மங்கான் படையாட்சி தன் குடும்பத்தினருடன் பெருமாளை வணங்கும் கோலத்தில் சிற்ப வடிவில் காட்சியளிக்கிறார். தசாவதார மண்டபத்தில் ஓவிய வடிவில் இவர்களைக் காணலாம். இவருக்குப் பின் பொறுப்பு வகித்த பரம்பரை தருமகர்த்தாக்களின் உருவங்களை உட்பகுதிகளில் காணலாம். மூலவரின் வலதுபுறத்தில் அனுமார் படத்துடன் கூடிய கொடி உள்ளது. மூலவருக்கு வழிபாடு நடைபெறும்போது, இக்கொடிக்கும், மங்கான் படையாட்சியின் உருவத்திற்கும் ஆராதனை நடைபெறும். பெருமாளின் கம்பத்தில் அனுமன் படம் பொறித்து வடக்கு முகமாக உள்ளதால் அதற்கு அபார சக்தி உள்ளதாகக் கூறுவர்.

இப்போது கோயிலில் நாற்தோறும் 6 கால வழிபாடு நடைபெறுகிறது. ஆலயம் காலை 7 முதல் 12½ வரையிலும், மாலை 3½முதல் 8 வரையிலும் திறந்திருக்கும். பங்குனி மாதத்தில் பத்து நாட்களுக்கு இராமநவமி விழா விமரிசையாகக் கொண்டாடப்படும். ஏழாம் நாளன்று

திருக்கலியாண உற்சவமும், ஒன்பதாம் நாள தேரோட்டமும், பத்தாம் நாள் ஏகாந்த சேவையும் உண்டு. சித்திரை முதல் பங்குனி வரை உட்சய திருதியை, விசாகம், உறியடி, நவராத்திரி, திருவோணம், கார்த்திகை தீபம், வைகுண்ட ஏகாதசி, அனுமன் ஜெயந்தி, தைப்பூசம், மாசிமகம் போன்ற பண்டிகைகள் கொண்டாடப்படுகின்றன. கலிவரதருக்காக ஒரு பெரிய தேரும், ஆஞ்சநேயருக்கான ஒரு சிறிய தேரும், பற்பல வாகனங்களும் உள்ளன.

சிறந்த வரப்பிரசாதியான கலியுக வரதர் இந்த வட்டாரத்தில் மிகவும் பிரசித்தி பெற்று விளங்குகிறார். சனிக்கிழமைகளில் அதிக அளவில் பக்தர்கள் வருகை புரிகின்றனர். புரட்டாசி சனிக்கிழமைகளில் கணக்கற்ற பக்தர்கள் கோயிலுக்கு வருகை புரிந்து, தங்களது நிலத்தில் விளைந்த தானியங்களைக் களஞ்சியத்தில் காணிக்கையாக அளிக்கின்றனர். எல்லா வகையான விளை பொருட்களுக்கும் தனித்தனி களஞ்சியங்கள் உள்ளன. ஆலயத்திற்குச் சொந்தமாக நிலபுலன்கள், தோப்புகள், நந்தவனம், கடைகள் போன்றன இருப்பதால் கோயில் மிகவும் நல்லமுறையில் இயங்கிவருகிறது 1979ம் ஆண்டில் சிறந்த பராமரிப்புக்கான சுழல் கோப்பை இக்கோயிலுக்குக் கிடைத்தது.

அரியென்று ரைக்கும் சுருதிமுடி
அரனுமயனு மவனென்னும்
விரியும் பெரிய வுலகமெலாம்
விரிந்த வுயிரும் அவனென்றும்
தெரியும் தெளிவும் அவனென்னும்
தெரியா மருளு மதுவென்னும்
கரி முன்னழைத்த மூலத்தைக்
கம்பத் திருந்த கடவுளையே.

# 7. கழுகுமலை

(சிதம்பரனார் மாவட்டம்)

## கந்தஸ்வாமி திருக்கோயில்

"எட்டுத் திசையும் புகழ் எட்டு வெங்கடேசன்
எட்டயாபுரம் வாழ்குபேரன் ஈடில்லாத
ரூபலா வண்ணியன்...
கந்தசாமி கழுகும லைக்கு நாம்
நேராய்க் கந்த னைக் காணப் போவோம்
வாரீர் சிராய்"

(எம் ஆர். கோவிந்த சாமி)

பாண்டியநாட்டிலுள்ள 'பழங்கோட்டை' என்ற பகுதியைத் தலைநகரமாகக் கொண்டு அதிமதுர பாண்டியன் என்ற அரசன் ஆண்டு வந்தான். மன்னனின் அரண்மனையிலிருந்து சற்று தொலைவில் உவனவனம் என்ற கானகம் இருந்தது. அவ்வனத்தில் 300 அடி உயரத்தில் உவனகிரி என்ற மலை கம்பீரமாகக் காட்சியளித்தது. ஒருமுறை அதிமதுரபாண்டியன் வேட்டையாடக் கானகம் சென்றான். வேட்டையாடிய பின் மிகவும் களைப்பு மேலிட்டதனால் உவனவனத்திலுள்ள ஒரு வேங்கை மரத்தடியில் அமர்ந்து சற்று ஓய்வு எடுத்துக் கொண்டான். சிறிது நேரத்தில் ஒரு அற்புதமான காட்சி அவன் கண் முன் தோன்றியது. கானகத்தில் மேய்ந்து கொண்டிருந்த பசு ஒன்று ஒரு பாறை மீது பால் சுரந்தது. அதே நேரத்தில் பூஜைக் காலத்தில்

எழுப்பப்படும் மணியோசை அங்கு ஒலித்தது. இச்சம்பவத்தால் வியப்புற்ற பாண்டியன் பாறையை நோக்கி விரைந்தான். மன்னனின் வரவைக் கண்ணுற்ற பசு அவ்விடத்தை விட்டகன்றது. மணியோசையும் அதே நேரத்தில் நின்றது. குழம்பிய மனதுடன் பாண்டிய அரசன் தன் அரண்மனையை அடைந்தான்.

அன்று இரவு இரு முருகனடியார்களின் கனவில் முருகப்பெருமான் தோன்றி உவனவனத்தில் நடைபெற்ற சம்பவத்தை எடுத்துரைத்தார். அதிமதுர பாண்டியனைச் சந்தித்துப் பசு பால் சுரந்த இடத்தில் ஒரு கோயில் எழுப்புமாறு தான் விரும்புவதாகத் தெரிவிக்குமாறு கட்டளையிட்ட பின் கந்தவேள் மறைந்தார். அடியார்களும் முருகரின் கட்டளையை மன்னனிடம் தெரிவித்தனர். பாண்டிய மன்னன் தன் அதிகாரிகளுடன் உவனவனம் சென்று பசு பால் சொரிந்த பாறையைத் தோண்டினான். அவ்விடத்தில் ஒரு குகை புதைந்து கிடந்தது. அக்குகையில் மயில் வாகனத்தின் மீதமர்ந்த குமரப் பெருமானின் திருவுருவம் கிடைத்தது. இறைவனின் திருவிளையாடலை எண்ணி அரசன் மனம் மகிழ்ச்சியடைந்தான். உவனவனத்தைத் திருத்தி நகரமாக மாற்றினான். உவனவனம் என்ற பெயரை மாற்றிக் கழுகுமலை என்று பெயரிட்டான். முருகப் பெருமானுக்கு ஒரு அழகிய கோயிலெழுப்பி, அதில் குகையில் கிடைத்த உருவத்தைப் பிரதிஷ்டை செய்தான். கழுகுமலையிலுள்ள முருகப் பெருமானின் ஆலயம் தோன்றியது பற்றிய கர்ணபரம்பரைக் கதை இதுவேயாகும். இவ்வாறு குமரன் கோயில் கொண்டுள்ள கழுகுமலை என்ற பதி சிதம்பரனார் மாவட்டத்தில், கோவில்பட்டியிலிருந்து 22 கி. மீ. தொலைவில், தென் மேற்கில் அமைந்துள்ளது. சங்கரன் கோயிலிலிருந்து இப்பகுதி 20 கி. மீ. தூரத்தில் உள்ளது. இவ்வூருக்கு அடிக்கடி பேருந்துகள் செல்வதால் கோயிலை அடைவது எளிது.

சீதையைத் தூக்கிச் சென்ற இராவணனுடன் தீரமாகப் போராடிய ஜடாயு எனும் புள்ளரசன் தன் இன்னுயிரைத் தியாகம் என்ற வேள்வியில் விடுத்து விண்ணுலகை அடைந்தான். தனது தந்தை போல் பரிவு காட்டிய ஜடாயுவின் முடிவைக் கண்ட இராமர் துயர வெள்ளத்தில் மூழ்கினார். பின் ஜடாயுவுக்குரிய ஈமக் கடன்களை நிறைவேற்றினார். இச்சம்பவங்களை வானரர்கள் மூலம் ஜடாயுவின் சகோதரனான சம்பாதி அறிந்து வருந்தினான். பின்னர் சம்பாதி இராமரைச் சந்தித்துத் தனது சகோதரனுக்கு ஈமக்கிரியைகளைக் கூடச் செய்ய முடியாமல் போனதால் தன்னைச் சண்டாளத்துவம் வந்தடைந்ததாகக் கூறினான். தனது பழைய நிலையையடைய வழிகாட்டுமாறு இராமரிடம் வேண்டினான். தெற்கேயுள்ள கஜமுக பர்வதத்திற்கு அருகிலுள்ள ஆம்பல் நதியில் நீராடி, அம்மலையில் குடி கொண்டுள்ள முருகப் பெருமானைப் பூசித்தால் சண்டாளத்துவம் விலகும்என இராமபிரான் அருளினார். அங்ஙனமே ஆம்பல் நதியில் மூழ்கி முருகப்பெருமானைச் சம்பாதி பூசித்தான். அவனைப் பற்றியிருந்த சண்டாளத் துவம் நீங்கியது. சம்பாதிக்கு மோட்ச வாழ்வும் கிடைத்தது. சம்பாதி என்ற கழுகரசன் தவம்புரிந்த இடமானதால் இத்தலம் கழுகுமலை என்ற பெயர் பெற்றது.

இராமபிரான் வானரர்களுடன் இலங்கை நோக்கிச் சென்றபோது வழியில் கழுகுமலைக்கு அருகேயுள்ள வானரம்பட்டி என்ற ஊரில் தங்கினாராம். அந்த நிகழ்ச்சியின் நினைவாகவே கழுகுமலைக்கு அருகே சாயமலைக்குன்று என்ற இடத்திலுள்ள ஒரு மலைக் கோயிலில் இராமர் எழுந்தருளியுள்ளார். இவ்விடத்தில் மாறன் சடையன், திருநெல்வேலி பாண்டியன் சீவலவர குண குலசேகரன், ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் ஆகி யோரின் கல்வெட்டுக்கள் உள்ளன.

பரமசிவன் - பார்வதி திருமணத்தின் போது அனைத்துலகோரும் கயிலையில் கூடியதால் வடபுலம் தாழ்ந்து, தென்புலம் உயர்ந்தது. இதனைச் சீராக்கும் பொருட்டுக் குறுமுனியான அகத்தியர் பொதிகைமலை நோக்கி அனுப்பப்பட்டார். பொதிகைமலை செல்லும் வழியில் அகத்தியர் கழுகுமலையில் தங்கிப் பூசித்தாரென்றும், அவருக்கு முருகப்பெருமான் உபதேசம் செய்தார் என்றும் நம்புகின்றனர். இதற்கேற்ப முருகப் பெருமான் அகத்தியரின் இருப்பிடமான பொதிகைமலை நோக்கித் தென் மேற்காக அமர்ந்துள்ளதாகக் கூறுவர்.

இத்தலத்திற்குத் தென்பழனி, சம்பாதி க்ஷேத்திரம், கஜமுகபர்வதம், கழுகாசலம், உவணகிரி ஆகிய பிற பெயர்களும் உள்ளன. பழநியில் உள்ளது போலவே முருகப்பெருமானின் சந்நிதி இங்கும் மேற்குமுகமாக விளங்குவதால் இதனைத் தென்பழனி என்று அழைக்கின்றனர். புத்த துறவிகள் சில காலம் வாழ்ந்த நிஜ்ஜ கூடம் என்ற பகுதி கழுகுமலை எனப்பட்டது என்றும் ஒரு கருத்து உண்டு (நிஜ்ஜம் - கழுகு) சமணர்கள் இப்பகுதியில் கழுவேற்றப்பட்டதால் கழுமலை எனப்பட்டுப் பிற் காலத்தில் கழுகுமலையாக மாறியதாகவும் கூறுவர். கழுகுகள் இங்கு நிறைந்திருந்ததால் அப்பெயர் வந்ததாகவும், கழுகு உருவத்தில் மலையின் மேற்பகுதி அமைந்துள்ளதால் கழுகுமலை என்ற பெயர் நிலைத்ததாகவும் சிலர் கருதுகின்றனர். உள்ளத் தூய்மையுடன் பூசித்து வழிபடுவோரின் தீய நினைவுகளை முருகன் கழுவுவதால் கழுவுமலை எனப்பட்டு, பின்னர் கழுகுமலையாக மாறியிருக்கலாம். இத்தனை காரணங்களுக்குள் எது உண்மை என்று கண்டுபிடிக்க முடியாது.

கழுகுமலையிலுள்ள கற்பாறையைக் குடைந்து குகைக்குள் மூர்த்தி அமைக்கப்பட்டிருப்பதால் இது குடைவரைக் கோயிலாகும். இக்கோயிலுக்கு விமானமோ, சுற்றுப் பிரகாரமோ இல்லை. சுமார் 300 அடி உயரமும், 36 அடி நீளமும் உள்ள மலையைச் சுற்றிக்

கிரிவலம் மட்டுமே வரமுடியும். மலையைக் குடைந்து கருவறையும், அர்த்த மண்டபமும், மகாமண்டபமும் அமைக்கப்பட்டுள்ளன.

கருவறையில் அருள்வெள்ளத்தை அளிக்கும் கந்தப் பெருமான் கழுகாசல மூர்த்தி எனப்படுவார் இத் திருவுருவம் ஒரே கல்லினால் உருவாக்கப்பட்டது ஒரு தலையுடனும், ஆறு கரங்களுடனும் அபூர்வமாகத் தோற்றம் கொண்டுள்ள இப்பெருமான் மயிலுடன் தோன்றுகிறார். பின் இடக்கைகள் இரண்டில் கேடயம், வச்சிரம் ஆகிய ஆயுதங்கள் மிளிர்கின்றன. பின் வலக் கரங்கள் இரண்டில் சக்தியாயுதமும், கத்தியும் உள்ளன. முன் வலக்கரம் ஒன்று அபய முத்திரையையும், பின் இடது கரம் ஒன்று வரதமுத்திரையையும் அளிக்கின்றன. செந்தில் நாதனின் பிரதிபிம்பமோ என்று வியப்புறும் அளவு கழுகாசலரின் எழில்மிகு தோற்றம் உள்ளது. திருச்செந்தூரிலுள்ளது போலவே இங்கும் இலை விபூதி பிரசாதம் கொடுக்கப்படுகிறதாம். முருகப் பெருமானின் அருகே வள்ளி, தெய்வயானை ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். முருகனின் வாகனமான மயில் வலது புறத்தில் காணப்படாமல், இடது பக்கத்தில் தோற்ற மளிப்பது இங்குள்ள விசேடமான அம்சமாகும். தாருகா சுரனை வதம் புரிவதற்காகவே குமரப் பெருமான் இங்ஙனம் தோன்றியுள்ளதாகக் கூறுவர் ஆதியில் கந்தவேள் இங்கு தனியாகவே கோயில் கொண்டிருந்த தாகவும், அவரது உக்கிரத்தைக் குறைக்கவே தேவியர்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகவும் கூறுகின்றனர். இங்கு முருகப்பெருமான் என்றுமே ராஜகோலத்தில் காட்சியளிப்பது அபூர்வமான அம்சமாகும். முருகப் பெருமான் மேற்குமுகமாகக் காட்சியளிக்கும் சந்நிதியை யுடைய மலை சிவன் ரூபம் என்றும், கிழக்கு முகமாகக் கோலம் கொண்டுள்ள சந்நிதியையுடைய மலை சக்தி ரூபம் என்றும் வேதாகம நூல்கள் உரைக்கின்றன. கச்சியப்ப சிவாச்சாரியார் கந்த புராணத்தில் குன்றில்

எழுந்தருளும் கந்தப் பெருமான் மேற்கு முகமாகத் தோன்றும் தலங்கள் மூன்றினைக் குறிப்பிடுகிறார். அவற்றுள் இராஜபோகமாக முருகன் காட்சி கொடுக்கும் தலம் கழுகுமலையாகும். இக்கோயிலின் மற்றொரு பகுதியில் ஜம்புநாதர், அகிலாண்டேஸ்வரி ஆகியோர் எழுந்தருளியுள்ளனர்.

மலையோரமாக அமைந்துள்ள தடாகம் ஆம்பல் நதி எனப்படும் புண்ணிய தீர்த்தமாகும். இதனைக் கந்த புராணம் போற்றுகிறது. இதனருகேயுள்ள 'வள்ளி சுனை' என்ற நீர் ஊற்றில் நீர் வற்றுவதே இல்லை என்று கூறுவர். கோயிலுக்கு அருகே 'குமார தெப்பம்' என்ற பெயருடைய அழகிய தெப்பம் உண்டு. நான்கு புறங் களிலும் அடிக்கற்களால் சீராக அமைக்கப் பட்டுப் பேரழகிய தோற்றத்தை அளிக்கிறது. இக்குளத்திலுள்ள நீர் மக்களின் தேவைகளை நிறைவேற்றி வருகிறது. அப்ரேக் என்ற உலோக சக்தி உள்ளதால் இந்நீர் மருத்துவத் தன்மை பெற்றுள்ளது. மகாமண்டபத்தின் இரு புறங்களிலும் கலையழகு மிக்க துவாரபாலகர்கள் உள்ளனர். ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ள வாலி சுக்ரீவன் யுத்தக் காட்சி காணத்தக்கது. இராமர், கோபாலகிருஷ்ணர் ஆகிய திருவுருவங்களும் வேலைப் பாடு மிக்கன.

அருணகிரிநாதரின் திருப்புகழில் கழுகாசல மூர்த்தி பற்றிய பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

"கலைமதி அப்புத் தரித்த வேணியர்
உதவிய வெற்றித் திருக்கை வேலவா
கழுகும லைக்குள் சிறக்க மேவிய பெருமாளே"

என்றும்

"கதலி கமுகு சூழ் வயற்கு ளேயளி
யிசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகுமலை மா நகர்க்குள் மேவிய பெருமாளே"

எனவும்

"ஓங்கலனைய பெரிய சோங்கு தகரபகர
மோங்கு நதியின் முழுகும் பொருளும்
ஒய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்
ஊர்ந்து மயிலது லவுந் தனிவேலா" என்றும்

அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

சங்கீத மும்மணிகளுள் ஒருவரான முத்துசாமி தீட்சிதர் சுத்த தன்னியாசி ராகத்திலமைத்துள்ள 'கங்கை சல' (கங்கம் — கழுகு, சைலம் — மலை) என்ற கீர்த்தனையை இயற்றியுள்ளார்.

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் என்பவர் தனது நோயைப் போக்குமாறு வேண்டி "கழுகாசல மூர்த்தி காவடிச் சிந்து" ஒன்றை இயற்றினார். காவடி யாடும் போது கால்மாறியாடும் தன்மைக்கு ஏற்றவாறு இசையமைத்துத் தமிழில் சந்தம் பாடுவது எளிதான காரியம் அன்று. அப்பணியை நன்கு முடித்த அண்ணாமலையார் பாராட்டுக்கு உரியவர்.

"சென்னி குள நகர் வாசன் தமிழ்
தேறும் அண்ணாமலை தாசன் செப்புஞ்
செகமேச்சிய மதுரக்கவியதனைப்
புயவரையிற்புனை
தீரன் அயில் வீரன் வண்ணமயில் முருகேசன்குற
வள்ளி பதம்பணி நேசன் உயர்
வரமேதரு கழுகாசல பதி கோவிலின் வளி நான்மற
வாதே சொல்வேன் மாதே" (காவடிச் சிந்து)

சுப்பராம தீக்ஷிதரின் 'வில்லிபரதம்' என்ற நூலில் கழுகுமலை கந்தனைத் துதிக்கும் பதங்கள் பல உள்ளன. வரகவி சுப்பம்மாளின் குமாரகீதம், சுவாமி விருதை சிவஞான யோகிகள் யாத்த 'கழுகுமலைக் குமரன் பதிகம்', துவாத்திரிம் தசாவதாரம் சரவணப் பெருமாள் புனைந்த 'கழுகுமலை ஒரெழுத்தந்தாதி', சு. முத்து சாமிப் பிள்ளை இயற்றிய 'திருக்கழுகுமலை சிவக்

கொழுந்து மாலை', இரட்டை மணிமாலை, முகலூர் மீனாட்சி சுந்தரக் கவிராயரின் கழுகுமலை திரிபந்தாதி, 'கழுகுமலைப் பதிகம்', ஸ்ரீகாளிச் சுவாமிகள் எழுதிய கழுகுமலைப் பிள்ளைத் தமிழ், மு. ரா. கந்தசாமிக் கவிராயரின் 'கழுகு மலையாண்டவர் துதி', சந்தச் சரப சங்கீத சாகித்ய சமத்கார ராஜசிங்கராஜா எம். ஆர். கோவிந்தசாமி இயற்றிய வழிநடைச் சிந்து ஆகிய சிற்றிலக்கிய நூல்கள் கழுகுமலையானுக்குச் சூட்டப் பட்ட முத்தாரங்கள் ஆகும். எட்டயபுரத்து அரசர்கள் தமிழ், தெலுங்கு, வடமொழி ஆகியவற்றில் பாடியுள்ள கீர்த்தனைகள கழுகு மலையானைப் போற்றுகின்றன.

ஜெகவீரராமகுமார எட்டப்ப நாயக்கர் வடமொழி யில் இயற்றிய சூர்ணிகைகள், தண்டிகைகள், சுலோகங் கள், கீர்த்தனைகள் ஆகியவற்றில் கழுகுமலையாண்ட வரின் புகழ் பரவப்பட்டுள்ளது. மகாகவி சுப்ரமணிய பாரதியாரின்,

''முருகா முருகா வருவாய் மயில் மீதினிலே
தருவாய் சுகமும் தனமும் கனமும்''

என்ற பாடல் கழுகுமலையானையே குறிப்பதாகக் கருதுவர்.

தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளும் 'வள்ளி திருமணம்' என்ற நாடகத்தின் முடிவில் கழுகுமலை யானின் திருமணக் கோலத்தைப் பாராட்டித் துதிப் பாராம்.

கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் விஜயநகர அரசனாக விளங்கிய சம்புராஜா என்பவரிடம் சோமன் என்ற மல்லன் இருந்தான். தன்னுடன் மல்யுத்தம் புரிந்து வெற்றி பெற்றவர்கள் மட்டுமே அரசனைக் காணலாம் என்றும், வல்லமை அற்றோர் தனது காலி லுள்ள பொற்சங்கிலிக்குக் கீழ் நுழைந்து செல்ல வேண்டும்,என்றும் அம்மல்லன் ஏற்பாடு செய்திருந்தான்.

சந்திரகிரியை ஆண்ட நல்வம நாயக்கர் (1304-47) என்ப வர் இந்த மல்லனை மற்போரில் வென்று உயிரிழக்கச் செய்தார். அம்மல்லனுடன் வாழ்ந்து வந்த எட்டு சகோதரர்களைத் தந்தை போலப் பேணினார். இதனால் எட்டப்பன் என்ற பெயர் அவருக்கு ஏற்பட் டது. இந்த மரபில் வந்த ஜெகவீரராமகுமார எட்டப்ப நாயக்கர் என்பார் 1557ம் ஆண்டில் எட்டயபுர நகரத்தை நிறுவினார். மதுரையை ஆண்ட கிருஷ்ணப்ப நாயக்கரின் வேண்டுகோளை ஏற்று ஜெகவீரர் மலையாள நாட்டிலுள்ள இரணியல் என்ற இடத்தில் நடைபெற்ற போரில் பங்கேற்று வெற்றி கண்டார். வரும்வழியில் ஊத்துமலை என்ற இடத்தில் ஒரு கோழை மறைந் திருந்து அம்பு எய்தி அவரைக் கொன்றான். வருத்தமுற்ற கிருஷ்ணப்ப நாயக்கர் எட்டயபுர மன்னரின் பரம்பரைக்கு இரத்த மானியமாகக் கழுகுமலைச் சீமையை வழங்கினார். அன்றுமுதல் அப்பரம்பரை யினரே கழுகுமலை ஆலயத்தைப் பேணி வருகிறார்கள்.

ஜெகவீரராம வெங்கடேஸ்வர எட்டப்பன் (1814-37) காலத்தில் ரூபாய் 20, 000/- செலவில் ஒரு கல் மண்டபம் எழுந்தது. ரூபாய் இருபதாயிரம் பெறு மானமுள்ள நகைகளும், பல்லக்கும் அளிக்கப்பட்டன. ஜெகவீரராம குமார எட்டப்ப நாயக்கர் (1838-50) காலத்தில் உபயமாக ஆயக்கட்டுமானியமும், ஆண்டுக்கு ரூபாய் 7600/- வருமானம் அளிக்கக்கூடிய கழுகுமலை வணிதம் 15 கிராமங்களும், பங்குவழி நிலங்களும் அளிக்கப்பட்டன. இம்மன்னரே கோயிலின் மகா மண்டபத்தையும், கருவறையையும் கட்ட ஏற்பாடு செய்தார். குறட்டுக்குத் தங்கமுலாம் பூசியதுடன் ரூபாய் 70, 000/- பெறுமானமுள்ள நவரத்தின கிரீடமும், தங்கத் தாமரைப் பூமாலையையும் வழங்கினார். முத்து சாமி ஜெகவீரராம வெங்கடேஸ்வர எட்டப்ப நாயக்கர் (1856-69) வெள்ளித் தகடு பொதிந்த யானைவாகனம்,

இ—5

ரூபாய் பத்தாயிரம் பெறுமானமுள்ள வைரத்தேர் ஆகியவற்றை அளித்தார்.

இக்கோயில் காலை 6 முதல் 12 வரையிலும், மாலை 4 முதல் 8 வரையிலும் தரிசனத்திற்காகத் திறந்திருக்கும். இங்கு ஆறுகால வழிபாடு சிறப்பாக நடைபெறுகிறது. ஐப்பசி கந்தசஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரம், வைகாசி விசாகம் ஆகிய விழாக்கள் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றன. தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகியவற்றை ஒட்டி இங்கு கூடும் மாட்டுத்தாவணி தென்னிந்தியாவிலேயே புகழ் பெற்றது. விநாயகர், சோமாஸ்கந்தர், அகிலாண்டேஸ்வரி, அஸ்திரதேவர், பிட்சாடனர், கங்காளநாதர் (மான், குண்டோதரன் உட்பட) வீரபாகு, சண்டேஸ்வரர், சிவிலி நாயகர், அம்பாள், பள்ளியறை சுவாமி, அம்பாள், நடராஜர், சிவகாமி, மாணிக்கவாசகர், முதலியோருடன் சண்முகர், தேவியருடன் சுப்பிரமணியர் போன்ற பல உற்சவத் திருமேனிகள் கோயிலில் உள்ளன. இங்குள்ள வெள்ளி வாகனங்களுள் ரிஷபம், மயில், ஆட்டுக்கடா, பெருச்சாளி, அன்னம், குதிரை, யானை, கைலாச பர்வதம், ஆகியனவும், பித்தளை வாகனங்களுள் ரிஷபம், பூதம், காமதேனு, மயில், குதிரை போன்றனவும், தந்த வாகனங்களுள் மூன்று பல்லக்குகளும், இரு தேர்களும் குறிப்பிடத்தக்கன.

காவடி எடுத்தல், முடி இறக்குதல், திருமணம் புரிதல் ஆகிய காரியங்கள் இங்கு அதிக அளவில் நடைபெறுகின்றன. கழுகுமலைக் கந்தனைக் காணாத கண்கள் என்ன கண்கள் என்று கூறுமளவு பெருமை மிக்க கந்தனை அளவற்ற பக்தர்கள் வழிபட்டுப் பலன் பெறுகிறார்கள்.

வெகுகாலமாக எட்டயபுர அரசர்கள் இக்கோயிலை நிர்வகித்து வந்தனர். சென்னை உயர்நீதிமன்ற எஸ். ஏ. 462/51 ஆர்டர்படி எட்டயபுரத்தரசர் பரம்பரை அறங் காவலராக் ஏற்றுக் கொள்ளப்பட்டார். அன்றாட

நிர்வாகத்தினைக் கண்காணிக்க இந்து சமய அற நிலையத் துறையைச் சேர்ந்த நிர்வாக அதிகாரி நியமிக்கப்பட்டார். ஜெகவீரராமகுமாரவெங்கடேஸ்வர எட்டயப்ப நாயக்கர் தலைமையில் 13-11-1959 அன்று கும்பாபிஷேகம் நடைபெற்றது.

**வெட்டுவான் கோயில் :**

முருகன் கோயிலுக்குப் பின்புறத்தில் மலையின் ஒரு பகுதியைத் தனியாகப் பிரித்து. அங்கு கற்கோயில் ஒன்றை எழுப்பியுள்ளனர். இக்கோயிலின் கருவறை யிலுள்ள விநாயகரின் உருவம் பிற்காலத்தில் தோன்றி யிருக்கலாம். கருவறை மீது எழில்மிகு விமானம் எட்டுப் பட்டைகளுடன் கூடியது. இதன் கீழ்ப்பகுதியிலுள்ள அம்மையப்பர் திருவுருவங்கள் வனப்புடன் தோன்று கின்றன. சிரீவத்தின் தென்பகுதியிலுள்ள கோஷ்டத் தில் தட்சிணாமூர்த்தியின் சிற்பத்தைக் காணலாம். சடை ஏந்திய தலை; மழுவைப் பிடித்துள்ள வலக்கை; குழையும், தோடும் அணிந்த காதுகள்; இவையே அவரது உருவமைப்பு; மாலை, கேயூரம், கடகம், உதரபந்தனம் ஆகிய அணிகள் கழுத்து, தோள், கை, வயிறு ஆகிய பகுதிகளை அலங்கரிக்கின்றன. சுகாசன கோலத்தில் அமர்ந்துள்ளதால் இவரது இடக்கால் தொங்கிய நிலை யிலும், வலது கால் மடங்கியும் உள்ளன; இவற்றிற்கு இடையே மிருதங்கம் ஒன்று காட்சியளிக்கிறது. உடலமைப்பும், அணிகலன்களும் மிகத் தத்ரூபமாக விளங்கும் இவ்வுருவம் சிதைந்து விட்டதைக் கண்டால் வருத்தமே உண்டாகும். மிருதங்கத்துடன் தோன்றும் தட்சிணாமூர்த்தி ஒரு அரிய படைப்பு. நான்முகன், நரசிம்மர் ஆகிய சிற்பங்களும் இங்குள்ளன. நந்தியின் உருவங்கள் விமானத்தின் நான்கு மூலைகளிலும் உள்ளன. கந்தர்வர்கள், தேவர்கள், பூதகணங்கள் ஆகியோரைக் குறிக்கும் சிற்பங்களுக்கும் பஞ்சமே இல்லை.

இராஷ்டிரகூடர்கள் காலத்தில் எல்லோராவில் தோன்றிய கயிலாய நாதர் கோயிலை வெட்டுவான் கோயில் பல அம்சங்களில் ஒத்து காணப்படுகிறது. வெட்டுவான் கோயில் மாமல்லபுரம் குடைவரைக் கோயில்களை விட சுமார் 50ஆண்டுகள் பிந்தியதாக இருக்கலாம். ஆனால், மாமல்லபுரம் குகைக் கோயில்கள் தனியாக உள்ள குன்றுகளிலுள்ள பாறைகளை வெட்டி அமைக்கப்பட்டவை. வெட்டுவான் கோயில் மலையின் ஒரு பகுதியைத் தனியாகப்பிரித்துக் கட்டப்பட்டது. இது முதலாம் அரசைச் சேர்ந்த பாண்டியர்களின் காலத்திலுள்ள சிற்பியின் கைத்திறனுக்குச் சான்று. (சுமார் 8ம் நூற்றாண்டு) வெட்டுவான் கோயிலின் மேல் பகுதி முழுமையாகக் கட்டப்பட்டுள்ளது. அதன் கீழ்ப் பகுதி முற்றுப் பெறாமல் இருப்பது துரதிருஷ்டமே. இதற்கான காரணத்தைக் குறிக்கும் கதை ஒன்று வழக்கி லுள்ளது. ஒரு சிற்பியின் ஒரே புதல்வன் ஒரு விழா விற்குச் சென்றிருந்த போது காணாமற் போய் விடுகிறான் மகனைப் பிரிந்த துயரத்தில் அச்சிற்பி கலையில் முழு கவனத்தைச் செலுத்துகிறான். பல ஆண்டுகளுக்குப் பின் அச்சிற்பி கழுகுமலையில் சிற்பம் வடித்துக் கொண்டிருந்த போது இளைஞன் ஒருவன் வெட்டுவான் கோயிலைச் செதுக்கிக் கொண்டிருந்தான். சிற்பக் கலையில் அச்சிறுவன் பெரிய சிற்பியையே மிஞ்சி விடுவான் போலத் தோன்றியது. அழுக்காறு கொண்ட சிற்பி ஒருநாள் அச்சிறுவன் மீது உளியை எறிந்தான். இளையவனின் தலை துண்டித்து எறியப்பட்டது. பின்னரே அச்சிறுவன் வெட்டிய கோயிலைச் சிற்பி கண்டான். திருவிழாவில் தொலைந்து போன தனது மகனே தன்னால் கொல்லப்பட்ட இறந்த சிற்பி என்பதையறிந்த சிற்பி துயர வெள்ளத்தில் ஆழ்ந்தான். இச்சம்பவத்தின் பின்னரே இக்கோயில் வெட்டுவான் கோயில் எனப்பட்டது.

வெட்டுவான் கோயிலுக்குச் சற்று தொலைவில் பல சமண மதத்துறவிகளின் சிற்பங்களைக் காணலாம்.

நேமிநாதர், பார்சவநாதர், பஹுபாலி மற்றும் பல தீர்த்தங்கரர்களின் சிற்பங்களும், யக்ஷியின் உருவங்களும் இங்கு அருமையாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவ்வுருவங்களை அமைத்த சிற்பிகளின் பெயர்களைத் தாங்கிய வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள் இச்சிற்பங்களின் அடிப்பகுதியில் காணப்படுகின்றன. இவை கி. பி, 8ம் நூற்றாண்டில் சமணம் வலிமை குன்றுவதற்கு முன்னர் தோன்றியிருக்கலாம். கழுகுமலை வெட்டுவான் கோயில் தமிழர்களின் கலைத் திறத்திற்கு ஒரு அற்புதமான சான்றாகும். கழுகுமலையிலுள்ள ஒரு கல்வெட்டு மூலம் திருச்சாரநாத மலையில் ஒரு சமணப் பல்கலைக் கழகம் இருந்ததாகவும், அதில் சமணக் கோட்பாடுகளைக் கற்றறிந்த மாணவர் பலர் வேறிடங்களுக்குச் சென்று அக்கோட்பாடுகளைப் பரப்பியதாகவும் தெரிகிறது. இங்குள்ள கல்வெட்டு எழுத்துக்கள் சித்ரால் என்ற இடத்திலுள்ள கல்லெழுத்துக்களை ஒத்திருப்பதாக இராபர்ட் சூவெல் (பழைய ஏட்டுச் சுவடியின் பட்டியலில்) கருதுகிறார். இராஜேந்திர சோழனின் (1011—44) பாண்டிய நாட்டுப் பிரதிநிதியாக சடாவர்மன் சுந்தர பாண்டியன் என்பான் பணியாற்றிய செய்தியை ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. இவ்வூரிலுள்ள குசவர்குடித் தெருவிலுள்ள கல்வெட்டில் தொண்டை நாட்டுப் படையெடுப்பு பற்றிய குறிப்பு உள்ளது. கி. பி 842ல் அரசாட்சி ஏற்ற வரகுணவர்மனின் காலத்தில் இது எழுதப்பட்டது.

1895ம் ஆண்டு தேர்த்திருவிழாவின் போது இவ்வூரிலுள்ள நாடார்கள் பெரிய கலவரம் ஒன்றை நடத்தினர். பேட்துரையின் திருநெல்வேலி கெஜட்டியரிலும், பல நாடோடிப் பாடல்களிலும் இக்கலவரம் பற்றிய குறிப்புகள் உள்ளன.

# 8. கோயிலூர்

(பசும்பொன் திருமகனார் மாவட்டம்)

## கொற்றவாளீஸ்வரர் திருக்கோயில்

'மாமேவு கோகனக மரும் பன்மலருதல்குவிதன்
மருவத் தோயாத்
தூமேவு புரிதியெனத் தன்முனர்முத் தொழிடைப்பத்
தோயா தான்றோர்
பாமேவு மிடங்கொள் வன்னியிரண்டல முன்றெவைமரர்
பரவமேவுங்
கோமேவு வன்னிவனக் கொற்றவா ளிசர்பதங் குறித்து
வாழ்வாம்.

(தலபுராணம்)

பாண்டிய நாட்டிலுள்ள காளையார் கோயில் எனும் புண்ணியத்தலத்தில் வீரபாண்டியன் எனும் மன்னன் ஆண்டு வந்தான். காளையார் கோயிலில் எழுந்தருளியுள்ள காளீசர் அருளால் இராட்சசகடகம் எனும் வலிமை மிக்க வாளை அம்மன்னன் பெற்றிருந்தான். ஒருநாள் வேட்டையாடச் சென்ற அம்மன்னன் ஒரு சுந்தர மானைப் பிடிக்கச் செல்லுகையில் தனது பரிவாரங்களை விட்டு விலகிக் கானகத்தின் வேறுபகுதிக்குச் சென்றான். மான் தப்பிச் சென்று விட்டதால் அங்கிருந்த மதுபுஷ்கர்ணி எனும் தீர்த்தத்தில் நீராடியபின் வீரபாண்டியன் மரத்தடியில் உறங்கினான். அங்கு

எழும்பிய பேரொலி அவனது உறக்கத்தைக் கலைத்தது. ஒரு கொடிய வேங்கை ஒரு தவசியின் மீது பாய்ந்து அவரைக் கொல்ல முயற்சிப்பதை மன்னன் கண்டான். அவனது இடையிலிருந்த இராட்சசகடகம் எனும் வாள் வேட்டையாடும்போது எங்கோ தவறி விழுந்துவிட்டது. நிராயுதபாணியாக இருந்த போதிலும் தன்னுயிரையும் பொருட்படுத்தாது வீரபாண்டியன் அந்தணனைக் காக்க முயற்சித்தான். மன்னனின் உறுதியைப் பரிசோதிக்க அரனார் ஏற்படுத்திய மாயையே அக்காட்சியாகும். புலியும், தவசியும் உடனே மறைந்தனர்.

இதற்கிடையில் அங்கு வந்து சேர்ந்த அரசனின் பரிவாரங்கள் காணாமல் போன வாளைத் தேடமுற்பட்டன. வன்னிமரத்தடியில் ஒரு அழகிய இலிங்கத்தினருகே வாள் இருப்பதாக அறிந்த அரசனும் அங்கு சென்று இலிங்கத்தைப் பூசித்தான். சிவபெருமான் வீரபாண்டியனுக்குக் காட்சியளித்து. அம்மன்னன் எழுப்பிய கோயிலில் குடிகொண்டார். 'இராட்சச கடக பரமேஸ்வரர்' என்றும், கொற்றவாளீஸ்வரர் (கொற்றவன் — அரசன்) என்றும் ஈசருக்குத் திருநாமங்கள் ஏற்பட்டன. கொற்றவாளீஸ்வரர் எழுந்தருளியுள்ள இத்தலம் இன்று கோயிலூர் என்று வழங்கப் படுகிறது. பசும்பொன் முத்துராமலிங்கர் மாவட்டத்தில் காரைக்குடி - திருப்பத்தூர் நெடுஞ்சாலையை ஒட்டி இக்கோயில் அமைந்துள்ளது.

ஆலயத்திற்கு வெளியே அமைந்துள்ள மது புஷ்கர்ணி எனும் வற்றாத திருக்குளமும், ஆலயத்தின் மூன்று வாயில்களிலும் அமைந்துள்ள இராஜகோபுரங்களும், ஆலயத்திற்குப் பொலிவான தோற்றத்தை அளிக்கின்றன. சுமார் 1.52 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள இக்கோயிலில் ஒரு பிரகாரமும், ஒரு அர்த்த மண்டபமும், ஒரு மகா மண்டபமும், ஒரு அலங்கார மண்டபமும் நான்கு கருவறைகளும் உள்ளன. ஆலயத்தின் வட

பகுதியில் கொற்றவாளீஸ்வரரின் சந்நிதி உள்ளது. தெற்குப்பகுதியில் அம்மனின் தனி சந்நிதி உள்ளது. இங்கு அருளாட்சி புரியும் அம்மனின் திருநாமம் நெல்லை நாயகி அம்மன் ஆகும். கொற்றவாளீஸ்வரர், நெல்லை நாயகி ஆகியோரின் சந்நிதிகளுக்கு இடையே கைலாச நாதர் இலிங்க வடிவில் எழுந்தருளியுள்ளார். நித்ய கல்யாணி அம்மனும், அருகே காட்சியளிக்கிறார். இவ்விருவருக்கும் இடையே உள்ள சந்நிதியில் காசி விசுவநாதர், விசாலாட்சி ஆகியோரையும் கண்டு வணங்கலாம். ஆலயத்தின் இதர பகுதிகளில் வள்ளி, தெய்வயானை சமேதரான சுப்பிரமணியர், நவகிரகங்கள், வன்னி விநாயகர், பைரவர், சனீஸ்வரர், சண்டேசர், சந்திரன், சூரியன், கணபதி ஆகியோருக்கும் இடம் உள்ளது. கருவறைக் கோஷ்டங்களில் தட்சிணாமூர்த்தி, இலிங்கோத்பவர் ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். இவ்வாலயத்திலுள்ள உற்சவ விக்கிரகங்களுள் சோமாஸ்கந்தர், சிவகாமியன்னையுடன் கூடிய நடராஜர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்.

அம்மன் சந்நிதிக்கு முன்புள்ள மண்டபம் ஒரு அற்புதமான சிற்பக் கூடமாகத் தோன்றுகிறது. அம்மண்டபத் தூண்களில் விநாயகர், சுப்பிரமணியர், கங்காளநாதர், சாரதாம்பாள், மார்க்கண்டேயர், வீரபத்திரர், ஊர்த்துவத்தாண்டவர், ரிஷபாருடர், சரஸ்வதி, வீரசேகர பாண்டியன், முத்து ஞானதேசிகர், ஆகியோரின் திருவுருவங்களை அற்புதமான சிற்பங்களாக வடித்துள்ளனர். மீனாட்சியம்மனின் திக் விஜயம், மீனாட்சி திருக்கல்யாணம் ஆகிய காட்சிகளும் இவ்வாறே சிற்பவடிவில் காட்சியளிக்கின்றன. ஒரே கல்லினால் அமைக்கப்பட்ட இந்த அற்புத, கம்பீர சிற்பங்களைக் காணவே இக்கோயிலுக்கு ஒரு முறை செல்ல வேண்டும்.

"தேசங்களிற் பாண்டி சிறப்பதிற் சமிவனம்
வாசயோக்கிய மென்றுகிரி வாசரும் பிரகாசமானா
ரெல்லாம்

மதுப்பிரியருக்காதி வரங்கொடுத்த படிக்கித்
துதிப்பிரிய ராஜகட்கத்தோடு விளையாடுகிறாரெல்லாம்
செயல் சிவகுப்தனருள் திருரெத்னவல்லிக்காக
வயல்காத்த தினாற் சாலிவாடீசுவரியென்றுரைத்
தாரெல்லாம்
சுதன்மை தயிர்ச்சாதந் துப்பதரத்திற் காட்டிக்
கதிரிரு காதிலேயுங் காட்டினார் வணிகருக்கு எல்லாம்
கயிலாசநாதர் நித்திய கல்யாண மத்தியிலே
செயல்வளர் விசுவேசர் தேவியோடிருப்பதைப்
பாரெல்லாம்

— காரைக்குடி அருள்வாக்கு சுப்பராம பாரதி
(கோயிலூ ரலங்காரக் கண்ணி)

கோயிலூர்த் தலபுராணம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் பாடப்பெற்றது. அந்த நூல் 894 பாடல்களையும் 12 படலங்களையும் உள்ளடக்கிஉள்ளது. வடமொழியில் ஸ்கந்த புராணத்தில் இடம் பெற்றுள்ள இவ்வரலாற்றைப் பிச்சு சாஸ்திரிய சுவாமிகள் முதலில் தமிழில் மொழி பெயர்த்தார். சமீவன க்ஷேத்திரம் என்றும், வன்னிவன க்ஷேத்திரம் என்றும் இத்தலம் அழைக்கப்படுகிறது. சாலிவாடி, திருவல்லபம் ஆகிய பெயர்களும் இப்பதிக்கு உள்ளன. கலியுகத்தில் நான்கு வேதங்களையும் மக்கள் எளிதில் புரிந்து கொள்ளுமாறு எளிமையாகத் தொகுத்த வியாச முனிவர் அவற்றைத் தமது சீடர்களுக்கு உபதேசித்தார். அவரது சீடர்களுள் ஜைமினி என்பார் யாகங்களைப் புரிந்து சித்த சுத்தியடையவில்லை. இதற்கான வழியை அம்முனிவர் அகத்தியரிடம் கேட்டார். அகத்தியரும் சமீவன க்ஷேத்திரத்தின் சிறப்புக்களை அவரிடம் எடுத்துக் கூறினார். சமீவன க்ஷேத்திரத்தின் மகிமைகளையறிந்த ஜைமினிமுனிவர் அங்கு வழிபட்டுக் காரியசித்தியடைந் தார்.

இத்தலத்தில் வேறு சில அற்புதச் சம்பவங்களும் நடைபெற்றுள்ளன. அண்டசராசரங்கள் தோன்றி

இயங்குவதற்குக் காரணகர்த்தாவான சக்தியை அறிய விரும்பிய மதுப்பிரியர் எனும் தவசி இங்கு கடுந்தவமியற்றினார். அவரது தவத்தைக் கலைக்க வானவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் வீணாயின. மும்மூர்த்திகளும் மதுப்பிரியர் முன் காட்சியளித்துத் தங்களது முத்தொழில்களையும் பற்றி எடுத்துரைத்தனர். மூவருக்கும் முதல்வரான பரம்பொருளை அறிய விரும்பிய மதுப்பிரியர் கடுந்தவத்தை மறுபடியும் புரிந்தார். பரம்பொருளை அறிவதற்கான பிரமவித்தையை நான்முகன் உபதேசித்தார். மதுப்பிரியரின் தவத்தால் மகிழ்வுற்ற சிவபிரான் "திரிபுவனேஸ்வரர்" என்ற பெயருடன் அவருக்குக் காட்சியளித்து அருளினார்.

முற்காலத்தில் இப்பகுதியில் சுவேதன் எனும் மன்னன் நீதிவழுவாமல் ஆட்சிபுரிந்து வந்தான். தனக்கு ஆயுள் குறைவு என்பதை அம்மன்னன் அறிந்தான். ஆட்சியை மகனிடம் ஒப்புவித்துவிட்டுக் கானகம் சென்று தவமியற்றினான். தவத்திற்குப் பலனாக அவன் மேலுலகம் செல்லும் பேறு பெற்றான்.

ஏழைகளுக்கு அன்னதானம் செய்வதால் வரும் பலன்கள் பற்றி இத்தலத்தில் அகத்தியர் சுவேதனுக்கு எடுத்தியம்பினார். இத்தலத்தில் வாழ்ந்து வந்த சிவகுப்தன் எனும் வணிகன் தான தர்மங்கள் பல செய்தவன். சிவபெருமானிடமும் அவன் பேரன்பு கொண்டிருந்தான். அவனுக்குப் பண்பு நிறைந்த சுதர்மை எனும் இல்லத்தரசியும், இரத்தினவல்லி எனும் மகளும் இருந்தனர். சுதர்மையின் குணங்களைக் கண்டு மெச்சிய உமாதேவி தானே இரத்தினவல்லி உருவில் ஒரு முறை தோன்றி அவளிடம் உணவு உண்டாள். இவ்வாறு அம்பிகையின் அருள் அவளுக்குக் கிடைத்தது.

சாகலபுரத்து இளவரசன் கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டான் அவனது நோயின் தன்மைபற்றி அறிந்தும் அவனையே சுயம்வரத்தில் மணாளனாகத்

தேர்ந்தெடுத்தான் அனங்கபுர இளவரசி. இருவரும் புனித யாத்திரை செல்லும்போது சமீவன க்ஷேத்திரத்திலுள்ள மதுபுஷ்கர்ணியில் இளவரசன் நீராடினான். சிவபெருமான் அருளால் அவனது நோய் நீங்கிற்று. கணவனும், மனைவியும் சமீவன க்ஷேத்திரத்திலுள்ள சிவனாரை வழிபட்டனர்.

பாண்டிய மன்னனான வீரசேனன் வேட்டையாடும் போது கண்ணுவ மகரிஷியின் ஆசிரமத்தைச் சேர்ந்த மானைக் கொன்றுவிட்டான். கானகத்தில் வேடனாகத் திரியுமாறு முனிவர் சபித்தார். வனத்தில் திரிந்து கொண்டிருந்த இவ்வேடன் சமீவனத்திலுள்ள மது தீர்த்தத்தில் நீராடியவுடன் அவனது சாபம் விலகியது. இதனால் இத்தீர்த்தத்திற்குச் 'சாபவிமோசன தீர்த்தம்' என்று பெயர் உண்டாயிற்று.

ஆதியில் இக்கோயிலை வீரபாண்டியன் நிர்மாணித்தான். கோயிலின் மண்டபங்கள், உட்பகுதிகள், கோபுரங்கள், திருக்குளம் ஆகியவை இந்நூற்றாண்டின் துவக்கத்தில் புதுப்பிக்கப்பட்டு விரிவாக்கப்பட்டன. கோயிலூர் மடத்தைச் சேர்ந்த ஆண்டவர் முத்துராமலிங்க ஞானதேசிகர் இத்திருப்பணியைத் துவக்கினார். கோயிலூர் மடத்தின் ஐந்தாவது மடாதிபதியான வீரப்ப ஞான தேசிகர் இப்பணியை நிறைவடையச் செய்தார். இன்று இக்கோயில் சிவகங்கை தேவஸ்தானத்தினரின் பொறுப்பில் இயங்கி வருகிறது. இங்கு நாள்தோறும் நான்கு கால பூஜை முறைப்படி நடைபெறுகிறது. ஆலயத்திற்குச் சொந்தமாக நிலபுலன்களும், தென்னை, மரங்களும் உள்ளன. ஆலயத்தில் ஒரு தேர், ஒரு பல்லக்கு, 9 மரவாகனங்கள், இரு வெள்ளி ரிஷபங்கள், ஒரு கேடயம் ஆகியன இருந்தன. இங்கு ஆடிப்பூர விழா பதினொன்று நாட்களுக்கு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வந்தது. நவராத்திரி, திருவாதிரை போன்ற பிறபண்டிகைகளும் இங்கு கொண்டாடப்படுகின்றன.

கல்வெட்டுக்களில் இவ்வூர் கழனிவாசல் என்றும், ஸ்ரீ வல்லபுரம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது இங்குள்ள கல்வெட்டுக்கள் சில சுவையாக செய்திகளை அளிக்கின்றன. 1582ம் ஆண்டில் விசய நகர மன்னர்கள் ஆட்சியில் திருமணத்திற்கு அளிக்கப்படும் பொருட்கள் பற்றிய ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது பிராமணர்களுள் நல்ல மணப் பெண்களைப் பெறுவதற்காகச் சிலர் அதிக அளவில் பொருட்களை அளித்து வந்தனராம். இதனால் சமுதாயத்தில் சில தொல்லைகள் ஏற்பட்டன. எனவே பல அக்ரஹாரங்களிலிருந்தும், அண்மையிலிருந்த கிராமங்களிலிருந்தும் மக்களை ஒரு மன்றத்தில் கூடுமாறு மன்னன் கட்டளையிட்டான் பிராமணர்களிடையே திருமணம் நடைபெறும்போது மணமகன் மணபெண்ணிற்கு எட்டு கழஞ்சு பொன்னும், எட்டு கழஞ்சு வெள்ளியும் மட்டுமே அளிக்க வேண்டும் என ஒப்பந்தம் ஆகியது. இதனை மீறுபவர்கள் குலத்திலிருந்து நீக்கப்பெறுவர் இவ்வொப்பந்தத்தைக் காணத் தட்டார்களும் அழைக்கப்பட்டனர்.

பதினாறாம் நூற்றாண்டில் சதாசிவராயரின் ஆட்சியில் பெத்தப்ப விஜயாலய தேவர் எனும் தனவந்தர் இக்கோயிலுக்கும், இவ்வூரிலுள்ள திருவெள்ளைக் காவலன் திருமடத்திற்கும் மடப்புற இறையிலியாக நிலம் அளித்தார். 1550-ம் ஆண்டில் பெத்தப்ப விஜயாலய தேவர் இக்கோயிலிலுள்ள முருகப்பெருமான் சந்நிதியில் விளக்கு எரிக்கவும் வழிபாடு நடைபெறவும் நில தானம் வழங்கினார் 1539-ல் மாத்தூரைச் சார்ந்த நகரத்தார் குழு இக்கோயிலைப் புதுப்பித்ததுடன், கார்த்திகையில் இங்கு திருவிழா நடைபெறவும் ஏற்பாடு செய்தனர்.

இங்குள்ள கோயிலூர் மடம் சிறப்பு வாய்ந்தது. சிதம்பரம், பொருள்வைத்தசேரி, திருக்களர், திருவண்ணாமலை ஆகிய ஊர்களில் அதன் கிளைகள் உள்ளன. நாட்டுக் கோட்டை செட்டியார் குலத்தைச் சேர்ந்த ஆண்டவர் முத்துராமலிங்க ஞானதேசிகர் இதனைப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோற்று

வித்தார். கோவிலூரில் எழுந்தருளியுள்ள அம்மன் அவரது கனவில் அந்தணச் சிறுமியாகப் பலமுறை தோன்றி அருளியுள்ளாராம். பல ஆலயங்களில் திருப் பணிகள் புரிந்த பெருமை அவருக்கு உரியது வேதங்கள், தமிழ் இலக்கியங்கள் ஆகியவற்றை இம்மடங்களில் மாணாக்கர்களுக்குக் கற்றுக் கொடுத்துவந்தனர்.

வடமொழியிலுள்ள வேதாந்த, சித்தாந்த உண்மை களை வடமொழிப் பயிற்சியில்லாத் தமிழ் மக்களும் உணருமாறு "நாநாஜீவ வாதக்கட்டளை" தொடங்கி 'ஞாநவாசிட்டம் ஈறாக 16 நூல்களை சிரமப்பாடமாக வகுத்தது, இத்திருமடாலயத்தின் சிறப்பான பணியாகும்.

கோயிலூர் திருமடத்தின் அதிபதிகள் கொற்ற வாளீஸ்வரர் கோயிலின் வளர்ச்சியில் பெரும் ஈடுபாடு கொண்டிருந்தனர். நகரத்தாரின் உதவியுடன் கருங்கற் திருப்பணிகள் நடத்தி வைத்த பெருமை ஸ்ரீ முத்துராம லிங்க ஞான தேசிகருக்கே உரியது. கருணாநிதி சுவாமி கள் முயற்சியால் (1890)மைய மண்டபத்துடன் திருக்குளத் திருப்பணி ரூபாய் எழுபதாயிரம் செலவில் நிறை வேறியது. இராமசாமி ஞானதேசிகர் காலத்தில் அஷ்ட லக்ஷ்மி மண்டபம் கட்டப்பட்டது. திருக்களர் ஆண்டவன் என்ற வீரப்பஞான தேசிகர் காலத்தில் திருக்கோயில் பொலிவையடைந்தது. சொற்கேட்டான் மண்டபம், உற்சவ மண்டபம், அம்பலவாணரின் சபாமண்டபம், தீர்த்த மண்டபம் ஆகியன எழுந்தன. அம்மனின் கருவறை கருங்கல்லால் உருவாக்கப்பட்டது. பிரகாரங்கள், விமானங்கள் ஆகியன சீர்ப்படுத்தப்பட்டன. ஏராள மான ஆபரணங்கள், பாத்திரங்கள் போன்றன அளிக்கப்பட்டன. மறை ஓதுதல், ஆராதனை செய்தல், வாத்தியங்கள் ஒலித்தல் ஆகியவற்றிற்கு முறை வகுக்கப் பட்டன. ஆலயத்தில் 1908, 1978 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு நடைபெற்றது.

இலங்கு புகழ் வன்னிவனம் வாழ்க வெளனிர்
கொற்றவாளீசர் வாழ்க
நலங்குதநீர்த் தெனையாண்ட நெல்லை நாயகி பெரிய
கருணை வாழ்க
மலங்குதலி லத்தலத்து மன்னிவளர் மாதவர்கள் வாழ்க
வாழ்க
நலங்குலவு மணிமன்று ளடநவில வெடுத்த
பொற்றணாளும் வாழ்க.

(தலபுராணம்)

# 9. சின்னமனூர்

(மதுரை மாவட்டம்)

## பூலாநந்தீஸ்வரர் திருக்கோயில்

தட்சன் சிவபெருமானை நிந்தித்துச் செய்த யாகத்தில் பங்கேற்ற அனைத்து வானவர்களும் வீரபத்திரரால் தண்டிக்கப் பெற்றனர். தெய்வீகப் பசுவான காமதேனுவும், கேட்கும் பொருளை அளிக்கவல்ல கற்பகத்தருவும் இங்ஙனம் தண்டனை பெற்றன. இருப்பினும் இந்திரனின் கட்டளைப்படியே அவை செயல்பட்டதால் அவர்கள் அதிகக் கடுமையற்ற தண்டனையைப் பெற்றனர். கற்பகத் தரு தென் தமிழ்நாட்டில் முட்பூலா மரமாகத் தோன்றியது. திருமலைக்கு வடக்கேயும், வராக மலைக்குத் தெற்கேயும், சுரபி நதிக்குக் கிழக்கேயும், உள்ள ஆரணியத்தில் சுயம்புலிங்கமாகச் சிவபெருமான் தோன்றியிருந்தார். முட்பூலாமரமாகத் தோன்றிய கற்பகத் தரு, தன்னைச்சுற்றிப் பல பூலா மரங்களை வளரச் செய்து லிங்கத்திற்கு நிழல் அளித்து வந்தது

பாண்டிய நாட்டின் மேற்பகுதியான அளநாட்டை இராசசிங்கன் எனும் பாண்டிய மன்னன் ஆண்டு வந்தான். ஒருமுறை வேட்டையாடச் சென்ற அம்மன்னன் இப்பூலாவனம் இருந்த பகுதியில் சிலகாலம் தங்கியிருந்தான். அங்குள்ள ஆயர் பாடியிலிருந்து மன்னனுக்கு நாள்தோறும் ஒரு குடம் பால் எடுத்துச் செல்லப் பட்டது. அவ்வாறு பால் எடுத்துவரும் வழியில் இடைய

னின் கால் பூலாமரவேரில் இடறியதால் பால் சிந்தி, பூலா மரத்தடியில் இருந்த லிங்கத்தின் மேல் சொரிந்தது. மறுநாளும் இதே சம்பவம் நடைபெற்றது. இதனால் வெகுண்ட இடையன் பூலாமரத்தின் வேரையும், அதன் அருகிலுள்ள புதரையும் வெட்டினான். அரிவாள் சுயம்பு லிங்கத்தின் முடியில் பட்டுச் செங்குருதி வெள்ளம் பெருகியது. அதே நேரத்தில் கற்பகத் தரு சாப விமோசனம் அடைந்து விண்ணுலகம் சென்றது. அரசன் இச்சம்பவத்தையறிந்தான். அவ்விடத்தை அடைந்து சிவலிங்கத்தை உளமாரத் துதித்தான். சிவலிங்கத்தின் மீதிருந்த குருதி மறைந்தது ஈசன் ஆகாயத்தைத் தொடும் அளவு உயர்ந்த சோதி மலையாகக் காட்சியளித்தார் இக்கோலத்தில் இறைவனைப் பூசிப்பது கடினமாகை யால் சிறியஉருவமாக மாறுமாறு அரசன் வேண்டினான். இறைவனும் பாண்டியன் விரும்பியவாறே அளவில் குறைந்து குறுகி நின்றார். இவ்வுருவைக் கண்ட அரசன் ஆனந்தப் பரவசம் அடைந்து லிங்கத்தை மார்புடன் தழுவிக் கட்டியணைத்தான். அரசனின் முகமண்டலம், மார்பிலணிந்த ஆரம், கைகளிலுள்ள கடகங்கள் ஆகியன லிங்க உருவில் பதிந்து அடையாளச் சின்னங்களையுண்டு பண்ணின. மன்னன் இறைவனைப் பாடித் துதித்தான்.

"பூண்டாய் பூண்டார் மாண்டவ ரென்பும் பூண்டாயே
நீண்டாய் நீண்டாய் நீண்டவன் முன்னே நீண்டாயே
யாண்டா யாண்டாய் நாயடியேனை யாண்டாயே
வேண்டா வேண்டா நீண்டது வேண்டா வேண்டாவே"

(தலபுராணம்)

இராசசிம்மன் வழிபட்டுப் பூசித்த லிங்கத்திற்கு இராச சிம்மேஸ்வரர் என்ற பெயர் ஏற்பட்டது. இவ்வாறு இராச சிம்மனுக்கு அருள்புரிந்த ஈசர் கோயில் கொண்டருளிய தலம் இன்று சின்னமனூர் என்று வழங்கப்படுகிறது இவ்வூர் மதுரையிலிருந்து கம்பம் செல்லும் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. மதுரையி

லிருந்து 96 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. பேருந்து நிலையத்திற்கு எதிரிலுள்ள ஒரு கிளைச் சாலையில் சிறிது தூரம் சென்றால் திருக்கோயிலைக் காணலாம்.

நீண்டுயர்ந்த ஏழுநிலை இராஜகோபுரம் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. இக்கோபுரம் வெகு அண்மைக் காலத்தில் கட்டி முடிக்கப்பட்டது. இது போன்ற மற்றொரு கோபுரத்தை அம்மன் சந்நிதிக்கு எதிராகக் கட்டி முடிக்கத் திட்டமிட்டுள்ளனர். இக்கோயிலில் மூன்று கருவறைகள், இரண்டு பிரகாரங்கள், ஒரு திருக்கலியாண மண்டபம், ஒரு வாகன மண்டபம், ஒரு பதினாறு கால் மண்டபம், ஆகியன உள்ளன. முதற்பிரகார நுழைவு வாயிலின் இருபுறங்களிலும் கணபதி, தண்டபாணி ஆகியோரைக் கண்டு துதிக்கலாம். அறுபத்து மூவரின் திருவுருவங்கள் பெரியபுராணத்தில் அமைந்தது போலவே சருக்கவாரியாக அதே வரிசையில் இடம் பெற்றுள்ளன. அவர்கள் பிறந்த ஊர், குலம், காலம், பிறந்த நட்சத்திரம் ஆகிய விவரங்கள் தெளிவுடன் எழுதப்பட்டுள்ளன. சமயக்குரவர் நால்வர், சேக்கிழார், மெய்கண்டார் ஆகிய திருவுருவங்கள் இச்சான்றோர்களுக்கு அருகே உள்ளன. சிவன், உமாதேவி, சித்திரகுப்தர், கணநாதர், சப்தமாதர், வீரபத்திரர், தில்லைக்காளி, சரஸ்வதி, கன்னி விநாயகர் ஆகிய பரிவார தெய்வங்கள் உட்பகுதிகளில் இடம் பெற்றுள்ளனர். கருவறையின் புறச்சுவர்களிலுள்ள கோஷ்டங்களில் விநாயகர், தென்முகக் கடவுள், லிங்கோத்பவர், துர்க்கை, நான்முகன் ஆகியோரைக் காணலாம். வெளிப்பிரகாரத்தில், லட்சுமி, பைரவர், நவகிரகங்கள், சந்திரசூரியர் ஆகிய உருவங்களுக்கு இடம் உள்ளது. அம்மன் சந்நிதிக்கு அருகே அஷ்டபுஜங்களுடன் அருள்புரியும் துர்க்கையின் திருவுருவம் ஒரு அரிய படைப்பு; சபையில் அம்பலவாணர், சிவகாமி அம்மன் ஆகியோரின் வனப்புமிக்க உருவங்கள்

கல்லினால் செய்யப்பட்டுள்ளன. நடராஜர் மற்றும் பல உற்சவ விக்கிரகங்களும் ஆலயத்தின் உட்பகுதிகளில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன.

கருவறையில் பூலா நந்தீஸ்வரர் என்ற திருநாமமுடைய மூலவர் லிங்க வடிவில் அருள்புரிகிறார். புதரிலிருந்து கண்டெடுக்கப்பட்டதால் இப்பெயர் அவருக்கு ஏற்பட்டது. முட்பூலா மரங்கள் நிறைந்த கானகத்தில் குடிகொண்டிருந்ததால் பூலாவனேசர், பூலாந்தநாதர் ஆகிய பெயர்களையும் அவர் பெற்றார். வானளாவ உயர்ந்து நின்ற ஜோதிப் பிழம்பான உருவம் இராஜசிம்ம பாண்டியனின் வேண்டுகோளுக்கு ஏற்ப சிறிய உருவத்துடன் தோன்றியதால் 'அளவுக்களவானவர்' என்று பெயர் பெற்றார். மன்னன் லிங்கத்தை மார்புடன் தழுவியபோது குழைந்ததால் 'தழுவக்குழைந்தார்' என்றும், இடையனின் பாற்குடம் இடறி விழுந்து சிந்திய பாலை ஏற்றுக் கொண்டதால் 'பாலுண்ட நாதர்' என்றும், பல பெயர்களும் அவரை அடைந்தன. அவரது திருமேனியில் இடையனின் வாள், மன்னனின் முத்தாரம் ஆகியவை உண்டாக்கிய தழும்புகளைத் தாங்கியுள்ளதாகக் கூறுவர். ஆதியில் தோன்றிய சுயம்புலிங்கம் சிதைவுற்றதால் அதனைச் சில விஷமிகள் கிணற்றில் எறிந்து விட்டனராம். இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் ஆலய அலுவலகர்களால் புதிதாக நிறுவப்பட்ட லிங்கமே இன்று மூலஸ்தானத்தில் காட்சியளிப்பதாகவும் கூறுவர். எத்துணை உயரம் அல்லது பள்ளத்திலிருந்து நோக்கினாலும் காண்பவரின் தலையின் மட்டத்திற்குச் சமமாகத் தோன்றும் அதிசய சிவலிங்கமாக இதனைக் கருதுவர்.

"மூலமா யரிபரவ வொருபூவின் மூலத்து முளைத்து ஞானக்
கோலமாய் முடித்தழும்பு கொண்டு பாண்டியன் றழுவக் குழைந்து மேலாம்
ஞாலமேல் வெண்ணீற்றை நீத்தொழிந்தோ ரடர்போதி னதியால் வென்ற
சூலபாணியனை நதி மதி சுமந்த வேணியனைத் துதித்து வாழ்வாம்

(தலபுராணம் — பாயிரம்)

தனி சந்நிதியில் மீனாட்சியம்மன் என்றும், சிவகாமி அம்மன் என்றும் திருநாமம் கொண்ட அம்மன் பேரெழில் மிக்க வடிவுடன் அருளாட்சி நடத்துகிறாள். அம்மன், துர்க்கை ஆகிய இருவரையும் எண்ணற்ற மகளிர் விசேட நாட்களில் ஆழ்ந்த பக்தியுடன் பூசிக்கின்றனர்.

"கொங்கையினாற் றுடியிடையாற் குழையிணையாற்
குழை பொருதுங் கொடுங்கணோக்கா
லங்கையினாற்றொடியணியாற் கடிகமழ் பூங்குழலாலான
னத்தானாளும்
பங்கயனா ரணனறியாப் பரஞ்சுடரை மில்விளைத்துப்
பாகந்தோய்ந்த
செங்கனிவாய் வென்முறுவற் சிவகாம சுந்தரி தாள்
சென்னி சேர்ப்பாம்.

(தலபுராணம் — பாயிரம்)

இக்கோயிலிலுள்ள வேறு இரு சந்நிதிகளும் தல புராணத்துடன் தொடர்புடையன. முதலாவது சந்நிதியில் சுரதேவர் குடியமர்ந்துள்ளார். இராசசிம்ம பாண்டியன் ஆட்சியில் நாட்டில் குளிர்ச்சுரம் பரவியதால் மக்கள் பெரிதும் அவதியுற்றனர். ஆலய ஊழியர்களும் இந்த நோயால் பீடிக்கப்பட்டதால் கோயில் பூசைகள் முறைப்படி நடைபெறுவது கடினமாக இருந்தது. மன்னன் பூலா நந்தீஸ்வரரைப் பிரார்த்தனை செய்தான். பூலா நந்தீஸ்வரர் அருளியவாறு சுரதேவரின் திருவுருவத்தை ஆலயத்தில் பிரதிஷ்டை செய்து முறைப்படி வழிபாடுகள் நடத்தினான். அன்று முதல் குளிர்ச்சுரம் நாட்டை விட்டகன்றது.

மற்றொரு சந்நிதியில் கன்னி ஈஸ்வரர் எனும் சிவலிங்கம் உள்ளது. இராஜசிம்மபாண்டியன் மகப்பேறின்றி வருந்தினான். சில ஆண்டுகளில் இறையருளால் அவனது பட்டத்தரசி பெண்மகவு ஒன்றை ஈன்றாள். உருவ அழகும், உயர்ந்த குணங்களும் பெற்றிருந்த அப்பெண் உரிய காலத்தில் ருதுவாகாமல் அழகு இழக்கத் தொடங்கினாள். பூலாநந்தீஸ்வரரின்

கட்டளையின்படி ஒரு சிவலிங்கத்தை அக்கன்னியைக் கொண்டு வேதாகம முறைப்படிப் பிரதிஷ்டை செய்ய மன்னன் ஏற்பாடு செய்தான். அம்மங்கையும் ருதுவாகிப், பேரழகு பெற்று, உரிய மணவாளனையடைந்து வாழலானாள். கன்னியால் நிறுவப்பட்ட அந்தலிங்கமே கன்னீஸ்வரர் என்ற திருநாமத்துடன் பூலா நந்தீஸ்வரருக்குத் தென்மேற்கே இடம் பிடித்துக் கொண்டுள்ளார். இக்கோயிலின் தென்கிழக்கு மூலையில் இராசசிம்மனின் மகளின் திருவுருவம் இருந்ததாகச் சொல்லப்படுகிறது.

இராசசிம்மன் தென்பாண்டி நாட்டை ஆண்டு வந்த போது வடபுலத்திலிருந்து யவனகுலவேந்தன் ஒருவன் தென்திசை நோக்கிப் படையெடுத்துவந்தான். மதவெறி பூண்ட யவன மன்னன் வழியிலுள்ள ஆலயங்களை அழித்தும், பொருட்களைச் சூறையாடியும் சைவ, வைணவ பக்தர்களைக் கொடுமைக்கு உள்ளாக்கியும் பல தீய செயல்களைப் புரிந்தான். தென்பாண்டி நாட்டிலுள்ள பூலாநந்தீஸ்வரர் ஆலயத்தையும் அழிக்கும் நோக்கத்துடன் அக்கோயிலைச் சுற்றிப் படைவீடுகளை அமைத்துத் தங்கினான். இதனையறிந்த பாண்டியன் ஆலயத்திற்கு ஊறு ஏற்படாமல் காப்பாற்றுமாறு ஈசனைப் பூசித்தான். அன்று மாலையில் யவன மன்னனின் அமைச்சர் யானை மீது அமர்ந்தவாறு ஆலயத்தை இடிக்க ஆணை பிறப்பித்தான். திடீரென இடியால் தாக்குண்டவர் போல் அமைச்சனும், யானையும் இறந்து வீழ்ந்தன. மற்றொரு யானை மீது அமர்ந்திருந்த யவன மன்னனும் கண் பார்வை இழந்தான். பூலா நந்தீஸ்வரரின் கட்டளையை ஏற்ற வருணன் அன்று இரவு கடும் மழை பொழிவித்து யவனப் படைகளை மூழ்கடித்தான். ஆலயமும் யவனரின் தாக்குதலிருந்து தப்பியது.

காசி மாநகரில் தவம் புரிந்து கொண்டிருந்த ஒரு அந்தணனின் தவத்திற்கு ஒரு கந்தர்வன் பங்கம்

விளைவித்தான். அந்தணன் அளித்த சாபத்தால் கந்தர்வன் புலியுருவம் அடைந்து தென்புலத்திலுள்ள கானகத்தில் திரிந்து வந்தான். வீரபத்திரரின் சாபத்தால் காட்டுப்பசுவான காமதேனுவும் அதே கானகத்தில் திரிந்து வந்தது. புலி பசுவை இரையாக உண்ண முயற் சித்தது. அப்போது சிவபெருமான் புலி, பசு ஆகிய இரு உயிரினங்களுக்கும் சாப விமோசனம் அளித்தார். சிவபெருமானின் சடையிலுள்ள கங்கையிலிருந்து சிந்திய நீர்த்துளிகள் சுரபியெனும் நதியாகப் பெருக்கெடுத்து ஓடின. சிவகாமி அம்மையார் ஆலயத்திற்கு வடபால் சிவகாமிக் கூபம் என்ற தீர்த்தம் உண்டு. சிவபெருமான் சந்நிதியில் இறைவனால் நிறுவப்பெற்ற சிவகங்கைத் தீர்த்தம் உள்ளது. சுரபி நதி, சிவகாமி கூபம், சிவகங்கைத் தீர்த்தம் ஆகிய இம்மூன்று தீர்த்தங்களும் இத்தலத்திலுள்ள புனித நீர் நிலைகளாகும்.

இக்கோயிலில் நாள்தோறும் காமிக ஆகம முறைப் படி ஆறு கால வழிபாடு நடைபெற்று வருகிறது. இங்கு பணியாற்றும் சிவாச்சாரியார்கள் முறைப்படி சிவதீட்சை யும், ஆசாரிய அபிஷேகமும் பெற்றவர்களாம். ஆலயம் காலை ஆறு மணி முதல் பத்து மணி வரையிலும், மாலை ஐந்து மணி முதல் எட்டு மணி வரையிலும் தரிசனத்திற் காக திறந்திருக்கும். இங்குநடைபெறும் திருவிழாக்களுள் சித்திரைத் திருவிழா பிரசித்தி பெற்றது. திருவிளை யாடல் புராணத்தில் இடம் பெற்றுள்ள பிட்டுக்கு மண் சுமந்த சம்பவமும், விறகு விற்ற நிகழ்ச்சியும் இக் கோயிலில் விழாவாகக் கொண்டாடப்பட்டு வந்தன. நவராத்திரி, கந்த சஷ்டி, கிருஷ்ண ஜெயந்தி போன்ற விழாக்களும் இங்கு கொண்டாடப்படுகின்றன. ஆலயத் திற்குச் சொந்தமாகச் சில ஏக்கர்கள் நன்செய், புன்செய் நிலங்களும், ஆபரணங்களும், மரத்தேரும், சில வாகனங் களும் உள்ளன. இந்த வட்டாரத்தில் அமைந்துள்ள மிகப்பெரிய ஆலயம் இது ஒன்றேயாகும்.

தலபுராணத்தில் இவ்வூர் அரிகேசரிநல்லூர் என்றே வழங்கப்படுகிறது. திருமால் (அரி), நான்முகன் (க) உருத்திரன் (ஈசன்) இந்திரன் (அரி). ஆகிய நால்வரும் இங்கு சிவபெருமானைப் பூசித்து அருள் பெற்றதால் இப் பெயர் ஏற்பட்டதாகத் தலபுராணம் விளம்பும். (அரி+க+ஈசர்+அரி=அரிகேசரி) இவ்வூர் இன்று சின்னமனூர் என்றே வழங்கப்படுகிறது. இராணி மங்கம்மாள் ஆட்சிக் காலத்தில் சின்னமநாயக்கர் என்ற அரசியல் அதிகாரியே இவ்வூரை உருவாக்கியதால் சின்னமனூர் என்று பெயர் மாற்றம் ஏற்பட்டதாக மதுரை மாவட்ட கெஜட்டியர் கூறுகிறது. ஒன்பது, பத்து நூற்றாண்டுகளில் வாழ்ந்த இராஜசிம்ம பாண்டியன் இக்கோயிலைக் கட்டியதாக வரலாற்று அறிஞர்கள் கூறுவர். முகமதியர் படையெடுப்புக்கு அஞ்சி அம்மன்னன் இப்பகுதிக்கு வந்து நலைநகரை நிறுவி ஆண்டதாக மதுரை கெஜட்டியர் செப்புகிறது,

ஆதியில் இராஜசிம்ம பாண்டியனே இக் கோயிலைக் கட்டி விரிவாக்கிப் பல திருப்பணிகளைப் புரிந்தான். சித்திரை மாதத்தில் 10 நாள் மகோற்சவமும் நடத்தச் செய்தான். எட்டாம் நாள் திருக்கல்யாண உற்சவமும் நடைபெற்றது. பின்னர் பிரம்மாண்டமான முறையில் தீர்த்தோற்சவமும் நடத்தினான்.

அரிகேசரி நல்லூர்த் தலபுராணம் 'பூலானந்த கவிராயர்' என்பவரால் இயற்றப்பட்டது. சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் வடமொழியிலுள்ள செய்யுட்களிலிருந்து மொழி பெயர்த்து ஓலைச்சுவடிகளில் இந்நூலை எழுதியிருந்தார். சின்னமனூர் சைவ கந்தசாமிக் கவிராயரும், மாசி நாட்டாண்மை ராமசாமி பிள்ளையும் அப்பிரதிகளைப் பாதுகாத்து வைத்திருந்தனர். 1954ம் ஆண்டில் பல சான்றோர்களின் பெருமுயற்சியால் அந்த நூல் அச்சேறியது. இந்த நூல் முப்பது படலங்களும், 945 பாடல்களும் கொண்டது. இந்த நூலில் வீரபாண்டி

கண்ணீஸ்வரர் ஆலயம், மார்க்கபன் கோட்டை விக்கிரம பாண்டியர் ஆலயம் ஆகிய கோயில்கள் பற்றிய சிறு குறிப்புகள் உள்ளன. இவ்வுலகில் முக்தி தரும் தலங்கள் ஐந்து (காசி, திருவண்ணாமலை, சிதம்பரம், திருவாரூர், அரிகேசரி நல்லூர்) என்றும், அவற்றுள் அரிகேசரி நல்லூரே பெருஞ்சிறப்பு வாய்ந்தது என்றும் அந்நூல் விளம்பும்.

இக்கோயிலில் 27 கல்வெட்டுக்கள் படியெடுக்கப் பட்டுள்ளன. ஆழநாட்டின் பிரமதேயமான அரிகேசரி நல்லூரில் அமைந்துள்ள இராஜசிம்மேஸ்வரமுடையார் என இக்கோயில் குறிப்பிடப்பட்டுள்ளது. எம்மண்டலமும் கொண்டருளிய மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி முதலாம் குலசேகரவர்மன் (1268 – 1308), ஜடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியன், சடையமாறன் ஆகிய பாண்டிய மன்னர்களின் காலத்தில் நிலம், பொன், ஆடு முதலியவை தானமாக வழங்கப்பட்ட செய்திகளை இவை தெரிவிக்கின்றன.

சுங்கம், வரி, பொருள் விற்பனை ஆகியவை வசூலிக்கப்பட்டவுடன் அவற்றால் கிடைத்த தொகைகளை முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ தானமாகக் கோவிலுக்கு அளிக்கப்பட்டன. நிலங்கள் விற்கப் பட்டபோது அரிகேசரி நல்லூரைச் சார்ந்த மகா சபையார், பண்ணை செய்வார்கள், வேலி செய்வார்கள் போன்ற குழுவினர் அதனைக் கண்காணித்தனர். மலர் வனம் ஒன்று அமைப்பதற்காக ஏற்றுமதிப் பொருட்கள் மீது விதிக்கப்பட்ட சுங்கவரி பயன்படுத்தப்பட்டது. துர்க்கா பரமேஸ்வரியின் சந்நிதியில் நந்தாவிளக்கு எரிப்பதற்காக அண்மையிலுள்ள மூன்று கிராமங்களின் சபையோர் முன்னிலையில் நிலதானம் அளிக்கப்பட்டது. மாறவர்மன் குலசேகரனின் கல்வெட்டு ஒன்றில் திருப்பூலாந்துறை உறையுடையார் அல்லது ராஜசிம்ம சோழீச்சுரமுடையார் என இக்கோயிலில் குடி

கொண்டுள்ள ஈசர் குறிப்பிடப்பட்டுள்ளார். திருநடுவூர் பட்டமுகர் என்ற பெயருடைய இறைவர் எழுந்தருளி யுள்ள மற்றொரு கோயிலும் இவ்வூரில் இருந்தது.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் சின்னமனூரி லுள்ள பெருமாள் கோயிலில் மடைப்பள்ளி கட்டுவதற் காகக் கடைக்கால் தோண்டியபோது இரு செப்பேடுகள் கிடைத்தன. பாண்டிய மன்னர்களின் வரலாறு பற்றிய சில அரிய செய்திகளை இச்செப்பேடுகள் அளிக்கின்றன. இவற்றைச் சின்னமனூர் சிறிய செப்பேடுகள் என்றும் சின்னமனூர் பெரிய செப்பேடுகள் என்றும் பாகுபாடு செய்துள்ளனர்.

சிறிய சாசனத்தின் முதல் இரண்டு ஏடுகளில் வட மொழி சுலோகங்கள் இடம் பெற்றுள்ளன. முதலாவது சுலோகம் மஹாவிஷ்ணுவிற்குத் தோத்திரம் கூறுகிறது. இரண்டாவது சுலோகம் பாண்டிய குலம் நீடூழி வாழ்க என்று பிரார்த்தனை செய்கிறது. இதனையடுத்து வட்டெழுத்தில் எழுதப்பட்ட தமிழ்ப்பகுதியைக் காணலாம். மேருமலையில் கயல் சின்னத்தைப் பொறித்தும், வானவர் கோனின் ஆரணத்தையணிந்தும், அவனது அரியணையில் அமர்ந்தும், வேற்படையெறிந்து கடல்நீரை வற்றச் செய்தும், ஆயிரம் வேள்விகளை நடத்தியும் புகழ்பெற்ற முற்காலப் பாண்டியர்களின் சிறப்பு விவரிக்கப்படுகிறது.

உலகம் முழுதும் புகழ்பெற்ற ஜயந்தவர்மனின் மகனான அரிகேசரியின் பெருமைகளைஅடுத்த பகுதியில் காணலாம். அஸமஸமன் (தனக்கு இணை யில்லாதவர்களுடன் சமமாகப் பழகுபவன்), அலங்க்ய விக்ரமன் (கடத்தற்கரிய வல்லமையுடையவன்) அகால காலன் (எக்காலத்தும் எதிரிகளுக்குக் காலனாக விளங்குபவன்) போன்ற பெயர்கள் இம்மன்னனுக்கு உரியன. இவன் துலாபாரம், இரணிய கர்ப்பம், கோஸஹஸ்ரம் போன்ற தானங்களைச் செய்தான். அனைவரும் போற்றுமாறு இந்திரன் போல அமர்ந்

தான். இவனுடைய மகன் கலியுகத்தின் மாசை நீக்கினான்; வறியவர்களுக்கு வாரி வழங்கினான். மருதூர், குவளைமலை போன்ற போர்களில் வெற்றி பெற்று பராக்கிரமசாலியாக விளங்கினான். செப் பேட்டின் இறுதிப் பகுதியில் நாட்டின் எல்லைப் பகுதிகள் குறிக்கப்படுகின்றன. இச்செப்பேடு முழுமையாகக் கிடைக்கவில்லை.

சின்னமனூர் பெரிய செப்பேடுகளில் ஏழு ஏடுகள் கிடைத்துள்ளன. முதல் நான்கு கிரந்த எழுத்தில் அமைந்த வடமொழி சுலோகங்களைப் பெற்றுள்ளன. இறுதி மூன்று ஏடுகள் தமிழ் வட்டெழுத்தில் உள்ளன. இதிலும் பாண்டிய அரசர்கள் புரிந்த வீரச்செயல்கள் புராணச் செய்திகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. பாண்டிய மன்னர்கள் இராவணனுடன் சமாதானம் புரிந்ததாகவும், நரஸகனுடைய மகளைத் திருமணம் செய்து கொண்டதாகவும், விசயனையும், குரு நாட்ட வரையும் வெற்றி கொண்டதாகவும், அகத்திய முனிவரைப் புரோகிதராக ஏற்றுக் கொண்டதாகவும், அசுவமேதம், இராஜசூயம் போன்ற யாகங்களைப் புரிந்ததாகவும் இவை செப்புகின்றன. தன் குருவைக் காப்பாற்றும் பொருட்டுக் கழுத்தை அரிந்து கொண்ட ஒரு பாண்டிய மன்னன் பற்றிய குறிப்பும் உள்ளது.

அரிகேசரி, ஜடிலன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன், ராஜசிம்மன் பராங்குசன், வரகுணமகாராஜன், பரசக்கர கோலாகலன், வரகுணவர்மர், பராந்தக சடையன் ஆகிய இடைக்காலப் பாண்டிய மன்னர்கள் நடத்திய போர்கள், அளித்த தானங்கள் போன்ற செய்திகள் இச்செப்பேடு களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

இவ்வூரில் முதலாம் பரமேஸ்வரவர்மன் காலத்தில் தோன்றிய கன்னிகா பரமேஸ்வரி கோயிலும் உள்ளது.

# 10. சேலம்

(சேலம் மாவட்டம்)

## கந்தாஸ்ரமம்

"சேலத்தின் அருகினிலே கந்தாச்சிரமமென்னத்
திகழும் கோயில்
ஞாலத்து மக்களுக்குக் கருணையூற்றாய் விளங்கி
நாளும் நாளும்
கோலத்தில் பயனிலே மேலோங்கும்; பதினெண்கை
கொண்ட துர்க்கை
வேலப்பன் இவர்கோயில் ஆண்டிலங்கும்;
இவைமேன்மேல்
விளங்கி ஓங்கும்

(அமரர் கி. வா. ஜகந்நாதன்)

அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில்
அஞ்சல் என வேல் தோன்றும் ஒருகால் நினைக்கில்
இருகாலும் தோன்றும்
முருகாவென்று ஓதுவார் முன் (திருமுருகாற்றுப்படை)

"கார்த்திகைப் பெண்களிடம் பாலுண்டு, அவர்களது நாமத்தையே தனக்கும் கொண்டு கார்த்திகேயனாய், துளி பாலை உண்டு அதனையே மலைபோல் கருதி நன்றி மறவாமல் அடியார்களைக் காக்கும் முருகப் பெருமானிடம் தூய பக்தியைச் செலுத்துபவர்கள் குடும் பத்தினருடன் பல்லாண்டு நோய் நொடியின்றி நிம்மதி

யான வாழ்வைப் பெறுவார்கள்" இவ்வாறு விசுவாமித்திரர் இராமனுக்கு முருகப்பெருமானின் பெருமையை உபதேசிப்பதாக வால்மீகி இராமாயணத்திலுள்ள (பாலகாண்டம்) வடமொழி சுலோகம் கூறும். புராணங்கள், வேதங்கள், தைத்ரீய பிராம்மணம், ஆரண்யகம், உபநிடதங்கள் ஆகியவற்றில் முருகப்பெருமானின் புகழ் போற்றிப் பரவப்பட்டுள்ளது. தமிழரின் தனிப்பெரும் கடவுளாகப் போற்றப்படும், முருகனின் பெருமையைச் சங்ககால இலக்கியங்களான தொல்காப்பியம்,பரிபாடல், திருமுருகாற்றுப் படை போன்றவற்றில் காணலாம். "சேயோன் மேயமைவரை உலகம்" என்ற தொல்காப்பியரின் வாக்கிற்கேற்ப, மலைகளில் அதிக அளவில் வாசம் செய்யும் குமரன், சமவெளிப் பகுதியிலுள்ள பல தலங்களிலும் குடி கொண்டுள்ளான். தனக்கென்று பல படைவீடுகள் இருந்த போதிலும் அமைதியான சூழ்நிலையில் ஒரு ஆசிரமத்தில் குடிகொண்டுள்ள முருகன் விரும்பினார் போலும் இதன் விளைவாகச் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் கந்தாஸ்ரமம் என்று பதி உதித்தது. கந்தகிரி எனப்படும் இத்தலம் சேலம் நகரிலிருந்து ஆத்தூர் செல்லும் பாதையிலுள்ள உடையாப்பட்டி என்ற இடத்திலிருந்து 2 கி மீ. தொலைவிலுள்ளது. உடையாப்பட்டி வழியாக அதிக அளவில் நகரப் பேருந்துகள் செல்கின்றன. சேலத்திலிருந்து குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் கந்தாஸ்ரமம் செல்லும் பேருந்துகள் இயங்குகின்றன.

ஸ்கந்தாஸ்ரமத்தைத் தோற்றுவித்த மகான் ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளாவார். இவரது வாழ்க்கை பக்திச் சுவை நிரம்பியது. மதுரை மாநகருக்கு அருகே யுள்ள அளகாபுரி என்ற சிற்றூரிலுள்ள ராமசாமி எனும் அந்தணருக்கு ஒன்பது குழந்தைகள் இருந்தனர். ஒரு முறை மாயாண்டி யோகி எனும் மகான் ராமசாமியைச் சந்தித்தார். ராமசாமியின் பத்தினி ஈன்றெடுத்த பத்தாவது குழந்தை மகாஞானியாகத் திகழ்வான் என யோகி அருளினார். அக்குழந்தைக்குச் சுப்பிரமணியம்

என்றே பெயரிட்டனர். உரிய வயதில் கல்வி பயின்று வந்த சுப்பிரமணியத்தை ஒருமுறை மாயாண்டி யோகி, வேத உபநிடதங்களில் பயிற்சி பெறுமாறு கூறினார். சிறு வயதில் பிரம்மச்சரிய விரதம் பூண்டு, தேச சஞ்சாரம் செய்யும் எண்ணத்துடன் சுப்பிரமணியம் புறப் பட்டார். மகாத்மா காந்தியின் சீடனாகி அலிபுரம் சிறையில் சிலகாலம் கழித்தார். சிறையை விட்டு மீண்ட வுடன் மாயாண்டி யோகியிடம் அன்னை புவனேஸ்வரி யின் ஓரெழுத்து மந்திரத்தைக் கற்றறிந்தார். இம்மூல மந்திரத்தை ஜெபித்துச் சித்தி பெறும் நோக்கத்துடன் மௌன விரதமேற்றுத் தனியிடம் நாடிச் சென்றார். திருநெல்வேலி மாவட்டம், கொங்கு நாடு ஆகிய பகுதி களிலுள்ள புனிதப்பதிகளையெல்லாம் தரிசித்த பின்னர் அப்பாலயோகி வேறு பல குகைகளிலும், சந்நிதிகளிலும் நிஷ்டையில் ஈடுபட்டார். பின்னர் பைராகிகளுடன் வட புலம் சென்று க்ஷேத்திராடனம் புரிந்தார்.

நெல்லையப்பர் கோயிலிலுள்ள ஆறுமுகன் சந்நிதி யில் தொழுதபோது தன்னை ஒரு மகான் அழைப்பது போன்ற பிரமை ஒன்று பாலயோகிக்கு ஏற்பட்டது. அன்றுகண்ட அவதூதரைத் தேடியே திரிந்தார். குஜராத் மாநிலத்திலுள்ள கிர்நார் என்ற பதியில், மலையுச்சியி லுள்ள தத்த பாதுகாபீடம் நோக்கிச் சென்றார். அவ தூதர்களின் மூலவரான தத்தாத்ரேயரை வழிபடு வதையே ஞானிகள் பெரிதும் விரும்பினர். நெடுந்துயர்ந் துள்ள மலையின் மீது ஏற பாலயோகிக்குச் சக்தியில்லை. அப்போது ஒரு மகான், அங்கு தோன்றி ஒரு குளிகையை அளித்தார். குளிகையின் மகிமையால் விரைவில் மலை யேறி தத்த பாதுகாபீடத்தைப் பாலயோகி தரிசித்தார். சேலம் மாவட்டத்திலுள்ள சேந்தமங்கலம் என்ற ஊரில் அவரை ஆட்கொள்ளும் குருநாதர் காத்திருப்பதாகப் பாலயோகிக்கு அருள்வாக்கு தோன்றியது.

சேந்தமங்கலத்திலுள்ள சந்நியாசிக் கரடு என்ற குன்றில் ஸ்ரீமத் ஸ்வயம் பிரகாச ஸரஸ்வதி சுவாமிகள்

என்ற மகான் தத்தாத்ரேயருக்கான திருக்கோயிலை அமைத்து அங்கு வாழ்ந்து வந்தார். ஸ்வயம் பிரகாசரைப் பாலயோகிகள் சந்தித்துத் தம்மைச் சிடனாக ஏற்றுக் கொள்ளுமாறு பணிந்தார். அன்று நெல்லையில் தன் மனக்கண்களுக்கு முன் காட்சியளித்த மகான் ஸ்வயம்பிரகாசரே எனவும் உணர்ந்தார். உரிய காலத்தில் சடங்குகள் முடிந்தவுடன் பாலயோகி சுப்பிரமணியத்திற்குச் சாந்தானந்தா என்ற தீக்ஷா நாமத்தை ஸ்வயம்பிரகாசர் அளித்தார். அவதூதர் களுக்கு அடையாளமான நிர்வாண கோலத்தை ஏற்காமல் வஸ்திரம், ஜடாமுடி ஆகியவற்றைத் தரிக்கு மாறு குரு அருளினார்.

ஸ்வயம்பிரகாசரின் உத்தமகுருவான சதாசிவ பிரம்மேந்திரரின் · அதிஷ்டானம் புதுக்கோட்டை நகரிலுள்ள நவசாலபுரி என்ற பகுதியில இருந்தது. அந்த அதிஷ்டானத்தைப் பராமரித்து உயர்வடையச் செய்யுமாறு சாந்தானந்தருக்கு ஸ்வயம்பிரகாசர் கட்டளையிட்டார். புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் சாந்தானந்தர் புரிந்த திருப்பணிகளைப் புதுக்கோட்டை புவனேஸ்வரி அதிஷ்டானம் என்ற கட்டுரையில் காணலாம்.

புதுக்கோட்டை அதிஷ்டானத்தை மேன்மையுறச் செய்யும் பணியில் சாந்தானந்தர் ஈடுபட்டிருந்தபோது அவரது கனவில் முருகப்பெருமான் ஒருநாள் தோன்றினார். தனக்கொரு ஆசிரமம் அமைத்துத் தருமாறு கந்தவேள் கேட்டார். ஸ்ரீபுவனேஸ்வரியின் வெளித்தோற்றமே சாந்தானந்த சுவாமிகள் என்றும் சுவாமிகளின் உள்ளொளியே புவனேஸ்வரி அம்மன் எனவும் அன்பர்கள் நம்பிவந்தனர். கந்தனுக்கான ஆசிரமம் ஒன்றை அமைக்குமாறு அவரது அந்தராத்மா வான அன்னை கட்டளையிட்டாள் போலும். அது அமைய வேண்டிய சூழலும் அவரது மனதில் உதித்தது.

அவ்விடம் மிக ரம்மியமான சூழ்நிலையில் அமைந்திருந்தது. மஞ்சுதவழ் மாமலைகள் சூழ்ந்த அழகிய பள்ளத்தாக்கு; அதனைச் சுற்றி அன்னையின் அருள் வெள்ளம் சுரப்பது போல் தெளிந்த நீர் ஓடை; என்றும் வற்றாத அந்த நீரோட்டம் அளிக்கும் பரிசான தென்னை, வாழைத் தோப்புகள்; நிலமகள் பச்சையாடை உடுத்தது போல் பயிர்வகைகள்; குறிஞ்சியும், மருதமும் கொஞ்சி விளையாடும் அப்பகுதியில் தனக்கு ஒரு அமைதியான ஆசிரமத்தை முருகப்பெருமான் நாடுவதாக சுவாமிகளுக்குத் தோன்றியது.

1966ம் ஆண்டு இறுதியில் ஒரு அன்பர் தண்டபாணியின் திருவுருவம் ஒன்றை சுவாமிகளுக்கு அன்பளிப்பாக அளித்தார். தான் கண்டது வெறும் கனவல்ல என்பதை சுவாமிகள் உணர்ந்தார். தாம் நிறுவ வேண்டிய கந்த சாம்ராஜ்ஜியம் தனது குருவின் க்ஷேத்திரமான சேலம் மாவட்டத்தில் அமைய வேண்டும் எனவும் முடிவு செய்தார். இருப்பினும் தான் கண்ட சூழ்நிலை எந்த இடத்தில் உள்ளது என்பதைக் கண்டுபிடிக்க இயலாமல் சுவாமிகள் துயருற்றார். தனது அன்பர்கள் பலரிடமும் தான் கண்ட சூழ்நிலை பற்றிக் கூறி வந்தார். 1967ம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஒரு அன்பர் சுவாமிகளின் மனத்தில் தோன்றிய சூழலில் அமைந்துள்ள இடத்தைக் காட்டுவதாகக் கூறி அழைத்துச் சென்றார். சுவாமிகள் கனவில் கண்டவாறே அவ்விடம் அமைந்திருந்தது. அதனையே ஆசிரமத்திற்கு ஏற்ற இடமாகத் தேர்ந்தெடுத்தார்.

ஒரே வாரத்திற்குள் அரசாங்கத்தினர் அந்த இடத்தை சுவாமிகளுக்கே வழங்கி விட்டனர். இதுவும் ஒரு அரிய சம்பவமாகும். அவ்விடத்தை வைதிக முறைப்படி அரசாங்கப் பிரதிநிதியின் முன்னிலையில் ஏற்றுக் கொண்ட சுவாமிகள், 16-9-1969 அன்று கந்தாஸ்ரமத்தை நிறுவியதற்கு அறிகுறியாக ஒரு ஜோதியை ஏற்றினார்.

அந்த ஜோதி இன்றும் அணையாமல் பிரகாசித்து வரு கிறது. மறுநாள் பல அன்பர்களுடன் அங்கு சென்று நாம சங்கீர்த்தனம் செய்து முருகனின் அருளைப் பரப் பினார். அந்த ஆண்டு கார்த்திகை நன்னாளில் ஸ்கந்த தீபம் ஏற்றி வைத்தார். திருவண்ணாமலை தீபம் போலவே கந்தாஸ்ரமத்தில் கார்த்திகை பௌர்ணமி யன்று ஏற்றப்படும் ஸ்கந்த ஜோதியும் அதிக பிரசித்தி பெற்றுப் பக்தர்களைக் கவர்ந்துள்ளது.

வேதங்கள் தழைத்துப் பரவ வேண்டும் என்ற எண்ணத்துடன் 196ம் ஆண்டு மே மாதத்தில் வேத பாடசாலையைக் கட்டும் பணி துவங்கியது. இதற்காக 100' நீளமும், 35' அகலமுமுள்ள உயர்ந்த கட்டிடம் எழும்பியது. யானை மீது வேதங்களை அமர்த்திய வாறு வேதபாராயணம், இன்னிசை ஆகியவற்றுடன் 31-10-19௦9 அன்று வேத பாடசாலை இயங்கத் துவங்கியது

கந்தப்பெருமானின் அற்புதமான சிலாவுருவை வடிவமைந்து, அதை நிறுவுவதற்காக ஆலயம் ஒன்றையும் கட்டும் பணி துவங்கியது. ஆலயத்தில் கந்தப்பெருமானு டன், வல்லப கணபதி, அஷ்டாதசபுஜ மகாலஷ்மி ஆகிய திருவுருவங்களும் நிறுவப்பட்டன. இவ்வுருவங்களுடன் அமைந்த ஆசிரமத்திற்கு 8-2-1971 அன்று கும்பாபி ஷேகம் நிறைவேறியது. நான்கு நாட்களுக்கு தேவ கோஷம், யாகங்கள், இன்னிசை ஆகியன முழங்கின. நடமாடும் கோயிலாகவே விளங்கிய சாந்தானந்த சுவாமிகள் முன்னிலையில் குடமுழக்கு நடந்தேறியது. ஆன்மிக பக்தியுடனும், உள்ளன்போடும், அமைதி யுடனும் வழிபட விரும்பும் அன்பர்களுக்கு உகந்த தலமான கந்தாஸ்ரமம் பிறந்தது.

கந்தகிரியின் திருத்தோற்றம் கண்கொள்ளாக் கவின் மிகு காட்சியாகும். மலையின் மீது தவழும் மேகங்களும், அவற்றை ஊடுருவிக் கதிர்களை வீசும் கதிரவனின் எழில்

மிகு தோற்றமும், சுற்றிலும் அமைந்துள்ள சூழலும், காண்போரின் மனதை ஈர்க்கும். பசுமை மிக்க செடி, கொடிகளைத் தாங்கிய மலைகளுக்கிடையே நிலமட்டத்திலிருந்து 250 அடிகள் உயரமுள்ள பள்ளத்தாக்கில் ஆசிரமம் அமைந்துள்ளது. கிழக்கிலும், மேற்கிலும் அமைந்துள்ள சிறு கோபுரங்களை நோக்கியவாறு படியேறிச் செல்லலாம் ஏறுமுன் இங்குள்ள புனிதத் தீர்த்தமான கன்னிமார் ஓடையில் நீராடிவிட்டுச் செல்லலாம். கன்னிமார் ஓடையில் கன்னிகள் பலரின் திருவுருவங்கள் உள்ளன. இல்லற வாழ்வில் ஈடுபடுவோர் இங்கு வழிபட்டால் மகிழ்ச்சியான வாழ்வு கிடைக்கும் என நம்புகின்றனர். நடந்து செல்லப் படிக்கட்டுகளும், வண்டிகள் செல்லச் சரிவுப் பாதைகளும் உள்ளன. மலையேறிச் செல்லும்போது இடும்பன், சங்கடஹர சதுர்த்தி விநாயகர் ஆகியோரைத் தரிசிக்கலாம். கோயிலில் ஒரே ஒரு பிரகாரம் மட்டுமே உள்ளது. தென்பாகத்திலும், வடபாகத்திலும் வாயில்கள் உண்டு. அம்மன், கந்தன் ஆகிய இருவரின் கருவறைகளும் ஒன்றையொன்று எதிர்நோக்கியவாறு காணப்படுகின்றன. வண்ணச் சுதையுருவங்களால் அலங்கரிக்கப்பட்ட கவின்மிகு விமானங்கள் அச்சந்நிதிகளுக்கு மேல் அணி செய்கின்றன. இரண்டையும் இணைக்கும் மண்டபத்தில் பல அழகிய ஓவியங்களைக் கண்டு உவகை கொள்ளலாம்.

கிழக்கு நோக்கிய சந்நிதியில் கந்தப் பெருமானின் அருள்வெள்ளத்தைப் பருகலாம். சுமார் 5½ உயரத்தில், அரை அடி உயரமுள்ள பீடத்துடன் ஈடு இணையற்ற அழகன் காட்சி தருகின்றான் காண்போர் உள்ளத்தை அள்ளிச் செல்லும் புன்சிரிப்பும், மனத்துயருற்று நாடி வந்தவர் இன்னல்களை நீக்கும் அருட்பார்வையும் மிகுந்த திருமுகம்; தீமைகளை அறவே போக்கி, அன்பர்களை ஆட்கொள்ளும் பொருட்டு வலது கரத்தில் தண்டத்தை ஏந்தியுள்ள நிலை; முழு மனதுடன் தஞ்சமடைந்தவர்களுக்கு நற்கதியளிக்கவல்ல திருவடிகள்; பிரணவமந்திரத்



திக்பாலர்
தருமபுரி



இந்திரன்
தருமபுரி



சிவபெருமானின் தாண்டவம்
தருமபுரி



அஷ்டாதசபுஜதுர்க்கை
கந்தாஸ்ரமம்



பழனியாண்டவர்—திருத்தண்கால்



லக்ஷ்மியுடன் வராகர்
திருவிடந்தை



உட்புறம்—வரதராஜப்பெருமாள்கோயில்
திரிபுவனை



முகப்பு—திருவிடந்தை ஆலயம்



தபஸ் அம்மன் (தூண்)
தேவிகாபுரம்



சரபேஸ்வரர்
தேவிகாபுரம்



இராஜகோபுரம்
பிரகன்நாயகி ஆலயம்.   தேவிகாபுரம்



இராஜகோபுரம்
துத்திப்பட்டு

தின் உட்பொருளைத் தந்தைக்கே உபதேசித்த பெரியோன், கண்போரின் கண்ணுக்கு இனியனாக, 'முருகு' என்ற சொல்லின் பொருளாகக் காட்சியளிக்கிறான். இருமருங்கிலும் கணபதி, இடும்பன் ஆகியோரும் இடம் பெற்றுள்ளனர்.

முருகனின் திருவுருவங்கள் இருபத்தொன்று என ஸ்ரீதத்துவநிதி, குமார தந்திரம் போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன. ஒருமுகம், இரு கரங்கள் ஆகியவற்றுடன் கோவணம் உடுத்தியவராய்ச் செந்தாமரை மலர் போன்ற வதனத்துடன், ஆண்டிக் கோலத்தில் காட்சியளிப்பவரே கந்தசுவாமி என்று இந்நூல்கள் கூறும். ஒரு கரம் தண்டத்தை ஏந்தியிருக்க, மற்றொன்று இடுப்பில் ஊன்றியிருக்கும். எவ்வளவு தான் அள்ளிக் கொடுத்தாலும் அனைத்தையும் துறக்கும் மனப்பக்குவம் பெற்றால் மட்டுமே தூயோன் ஆகலாம் என்பதைப் பக்குவமாக உணர்த்தும் ஆண்டிக் கோலத்தில் அருள் மழை பொழியும் கந்தனை வழிபட்டு உய்வோர் ஏராளம்.

கந்தப் பெருமானுக்கு எதிரில் கிழக்கு நோக்கியவாறு காட்சியளிக்கும் அஷ்டாதசபுஜ மஹாலக்ஷ்மி எழில்மிகு தோற்றம் கொண்டுள்ளாள். ஒரு டன் எடையுள்ள இப்பஞ்சலோகத் திருவுருவம் சுமார் 6½ அடி உயரம் உடையது. அனைத்து அண்ட சராசரங்களை இயங்க வைப்பதும், எங்கும் வியாபித்துள்ளதுமான அன்னையின் அருட்சக்தி மகிஷாசுரனை வதைக்கும் பொருட்டு ஒவ்வொரு வானவரின் உடலினின்றும் வெளிப்பட்டு, ஒன்றாகத் திரண்டு, ஒளிமயமிக்க மகிஷாசுரமர்த்தினி என்ற திருநாமத்துடன் அஷ்டாதச புஜ மஹாலக்ஷ்மியாக உருவெடுத்தாள். நலமனைத்தும் அளிக்கும் ஈசனின் பேரொளி தேவியின் வெண்ணிறத் திருமுகமாயிற்று; காலனின் ஒளி கருநீலமுடைய கூந்தலாயிற்று; மகாவிஷ்ணுவின் வலிமை கரங்களில்

வெளிப்பட்டது; பிற தேவர்கள் அனைவரின் சக்தி அம்மனின் உடலிலுள்ள அனைத்துப் பாகங்களி லும் வெளிப்பட்டு ஐக்கியமாயிற்று; அனைத்து வானவர்களின் ஒளியும் ஒருங்கே திரண்டு சேர்ந்து அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மியின் திருவுருவமாயிற்று. அன்னையின் கரங்களில் அட்சமாலை, தாமரை, பாணம், வாள், வஜ்ராயுதம், கதாயுதம், சக்கரம், திரிசூலம், பரசு, சங்கு, மணி, பாசம், வேல், தண்டம், வில், கேடயம், பாணபத்திரம், கமண்டலம் ஆகிய ஆயுதங்கள் ஒளிவிடுகின்றன. இவ்வாறு எழில்மிகு தோற்றம் கொண்டுள்ள கந்தமாதாவை வழிபட்டால் அனைத்து வானவர்களை வழிபட்ட பலனை ஒருங்கே அடையலாம். பரம்பொருளின் வெளித்தோற்றமான தேவி சதாசிவனையடைந்து, சக்தியாகவும், தெய்வத் தன்மை மிக்க மகாலட்சுமியாகவும், எண்கரங்களை யுடைய மகாசரஸ்வதியாகவும், பத்துக் கரங்களை யுடைய மகாகாளியாகவும் தோற்றமளிக்கிறாள்.

இவ்வுருவத்தின் திருவாசியில் நவதுர்க்கைகளின் உருவங்கள் உள்ளன. இக்காலத்தில் கந்தாஸ்ரமம் ஆன்மிக நெறி தழைத் தோங்கும் கூடமாக, ஆரவார மற்ற சூழ்நிலையில் காட்சியளிக்கிறது. ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளின் நன்முயற்சியால் பிரம்மாண்டமான (பதினாறு அடி உயரம்) பஞ்சமுக விநாயகர், பஞ்சமுக ஆஞ்சநேயர், தத்தாத்ரேயர் ஆகிய உருவங்கள் இங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டன. ஆஞ்சநேயர், நரசிம்மர், கருடர், வராகர், ஹயக்ரீவர் ஆகியோரின் 5 முகங் களுடன் பஞ்சமுக ஆஞ்சநேயர் காட்சியளிக்கிறார். பஞ்சமுக விநாயகர் சிம்மத்தின் மீது வீற்றிருக்கிறார். நமது நாட்டில் ஆன்மிகத் தத்துவங்கள் வெளிப்பட வழி வகுத்த மகான்களின் திருவுருவங்களை ஆலயத்தில் இடம் பெறச் செய்யவும், இதிகாசங்கள், புராணங்கள் ஆகியவற்றிலுள்ள பாத்திரங்களைக்கற்சிலைகள் வடிவில் வடிக்கவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன

ஐயப்பன், ஜட்ஜ் சுவாமிகள், சங்கரர், இராமானுஜர், வியாசர், மாத்வர், நால்வர், சேக்கிழார், அகத்தியர், அத்திரி, நாரதர், விவேகானந்தர், புரந்தரதாசர், இராகவேந்திரர், வள்ளலார், முனி பத்தினிகள், ஆண்டாள் ஆகியோரின் திருவுருவங்கள் நிறுவப் பட்டுள்ளன. மேலும், ஹேரம்ப கணபதி, பத்தினி யருடன் நவகிரகங்கள், நான்கு வேதமூர்த்திகள் ஆகியோரின் உருவங்களையும் இங்கு காணலாம். ரிக், யஜுர், ஸாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களுக் கும் உரிய மூர்த்திகள் முறையே கழுதை, ஆடு, குதிரை, குரங்கு ஆகிய மிருகங்களின் முகங்களுடன் காட்சி தருகின்றன. புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் நடை பெறுவது போலவே இங்கும் அவ்வப்போது உலகநலம் கருதி ஹோமங்கள் நடைபெற்று வருகின்றன. கந்தப் பெருமானுக்குரிய விசேட நாட்களிலும், அம்மனுக்கு உகந்த நவராத்திரியின் போதும் வழிபாடுகள் வெகு விமரிசையாக நடைபெறுகின்றன. திருக்கார்த்திகை நாளன்று ஸ்கந்தஜோதி ஏற்றப்பட்டு வெகு அற்புதமாகக் காட்சியளிக்கிறது. இங்கு வேத பாடசாலையும் நன்கு இயங்கி வருகிறது.

சந்நிதிகளில் காலையில் அம்மன், முருகன், ஆகியோருக்கு ஸுப்ரபாதம் ஓதப்படுகிறது. காலை ஏழு முதல் எட்டரை மணி வரை கணபதி ஹோமம், மகந்நியாஸ ஜபம் ஆகியன நடைபெறும். ஒன்பதரை முதல்பதினொன்றரைவரை தேவிமகான்மியமும்,சப்தசதி பாராயணமும் நிகழும். சுமார் பன்னிரண்டு வரை பூஜை நடத்தப்படும். மாலையில் நான்கு முதல் ஆறரை வரை தேவி மகான்மியம் படிக்கப்படுகிறது. மாலை ஆறரை முதல் ஏழேகால் வரை பூஜை நிகழ்கிறது.

சாந்தானந்த சுவாமிகளின் நன்முயற்சியால் சேலம் கந்தாஸ்ரமம், சேந்தமங்கலம் தத்தகிரி, புதுக்கோட்டை

அதிஷ்டானம் ஆகிய மூன்று இடங்களும் உயர்ந்த ஆன்மிகத் தலங்களாக மிளிர்கின்றன.

கன்னிமார் ஓடை சூழ கந்தமலை மேவிடும்
ஸ்கந்தாச்ரமம் தன்னிலே
கன்னிபகவதி காளியம்மையோடு மைந்தனாம்
கந்தனுறை கோயிலதனை
இன்பமுடன் வலம் வருதல் எண்ணிலாத் தவமதாம்
எண்ணுவீர் இன்பம் விழைவீர்.

(வித்துவான். மாணிக்கம்)

# 11. தருமபுரி

(தருமபுரி மாவட்டம்)

## மல்லிகார்ஜுனேஸ்வரர் ஆலயம்

தமிழக வரலாறு ஒரு சுவைமிக்க காவியம். தமிழகத்தைச் சிறப்பாக அரசாண்ட முடியுடை மூவேந்தர்கள், பல்லவர்கள் மற்றும் பல சிற்றரசர்களும் அதில் பவனி வருகின்றனர். வாணர், வைதும்பர், பழுவேட்டரையர், வேளிர்கள், முத்தரையர், கொங்குச் சோழர் போன்ற அரசகுலத்தோர் வரிசையில் அதியர் என்ற குலத்தோரும் குறிப்பிடத்தக்கவர்கள். அதியமான் நெடுமான் அஞ்சி போன்ற செம்மையான அரசர்களைக் கொண்ட இப்பரம்பரையினர் தகடூர் நகரைத் தலைநகரமாகக் கொண்டு அரசோச்சினர். இவ்வூரே இன்று தருமபுரி என வழங்கப்படுகிறது. சேலம்-பெங்களூர் நெடுஞ்சாலையில் அமைந்துள்ள இவ்வூர் இன்று தருமபுரி மாவட்டத்தின் தலைநகரமாகும். இவ்வூரின் எல்லையிலுள்ள கோட்டை என்ற பகுதியில் இரு புராதனமான ஆலயங்கள் உள்ளன. காமாட்சி சமேதரான மல்லிகார்ஜுனேஸ்வரரும், பராவாசுதேவரும் இக்கோயில்களில் மூல மூர்த்திகளாக அருள்பாலிக்கின்றனர்.

**மல்லிகார்ஜுனேஸ்வரர் கோயில் :-** இதுவே இவ்வூரிலுள்ள பிரதானமான பெரிய கோயிலாகும். மல்லிகார்ஜுனேஸ்வரர் கோயில் என்று கேட்டால் ஒருவருக்கும் தெரியாது. கோட்டை ஈஸ்வரன் கோயில் அல்லது

காமாட்சியம்மன் கோயில் என்று மக்கள் இதனைக் குறிப்பிடுகின்றனர். கோயிலின் பரப்பு சுமார் 1½ ஏக்கர் இருக்கும். முகப்பில் இராஜகோபுரம் இல்லாத போதிலும் சுவாமி, அம்பாள் சந்நிதிகளின் மேற்பகுதிகளை அழகிய விமானங்கள் அலங்கரிக்கின்றன. ஆலயத்தின் கிழக்கிலும், தெற்கிலும் இரு வாயில்கள் உள்ளன.

கருவறையில் மூலவர் மல்லிகார்ஜுனேஸ்வரர் இலிங்க வடிவில் அருள்பாலிக்கிறார். ஆவுடையார் சதுரப்பீடமாக அமைந்துள்ளது. இயற்கை ஒளி அவரது மேனியில் படுகிறது. இச்சந்நிதிக்கு முன்னர் அனைத்து உற்சவ விக்கிரகங்களும் உள்ளன. விநாயகர், சுப்பிரமணியர், பைரவர், தட்சிணாமூர்த்தி ஆகியோரின் திருவுருவங்களை ஆலயத்தில் கண்டு வழிபடலாம். சிவகாமியம்மனுடன் கூடிய நடராஜரின் சந்நிதியும் இங்கு உள்ளது.

மூலவர் சந்நிதிக்கு முன்பு மகாமண்டபத்திலுள்ள இரு தொங்கும் தூண்கள் வியப்பை அளிக்கவல்லன. இவற்றின் எடை சுமார் 2 டன் இருக்குமாம். தூணின் அடியில் நூல் அல்லது சிறிய துணியை விடுத்து இருபுறமும் பிடித்துக் காட்டலாம். தொங்கும் தூண் என்பதை நிரூபிக்க இதுவே சான்று; நுளம்பர் எனும் சிற்றரசர்களால் இது உருவாக்கப்பட்டதாம். இத்தூண்களில் சில அரிய, நுண்ணிய, தெய்வீகச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. வெவ்வேறு கோலங்களில் தோன்றும் பல நடனமாதர்களின் திருவுருவங்களையும் இங்குள்ள தூண்களில் காணலாம். நடனமாதரின் முகபாவங்கள், உடலைப் பின்புறம் திருப்பியவாறு ஆடும் தோற்றம், அணிந்துள்ள உடைகள் ஆகிய அனைத்து விபரங்களும் மிக நுண்ணியமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன. இப்பகுதியை அரசாண்ட மன்னர் ஒருவரின் வரலாற்றை விளக்கும் சில சிற்பங்களும் தூண்களில் இடம் பெற்றுள்ளனவாம். அரனார் காலனை உதைத்து மார்க்கண்

டேயருக்கு அமர வாழ்வு அளித்தல், திருமால் கஜேந்திரன் என்ற யானையைக் காப்பாற்றுதல் போன்ற தெய்வீகக் காட்சிகளும் சிறு சிற்பங்களாக அமைந்துள்ளன. மற்றொரு தூணில் சிம்ம வாகனத்தில் அமர்ந்துள்ள துர்க்கையைக் காணலாம் பிறிதொரு தூணில் மும்மூர்த்திகளும் இணைந்துள்ள காட்சி தென்படுகிறது. அசுரன் மீது சிவபெருமான் அமர்ந்திருக்க, அவருக்கு இருபுறமும் நான்முகனும், திருமாலும் நின்ற கோலத்தில் உள்ளனர்.

இதே மண்டபத்தின் விதானத்திலுள்ள ஒரு அபூர்வமான சிற்பத் தொகுதி காண்போரின் மனதை ஈர்க்கும். ஒரு வட்டவடிவமான அமைப்பின் நடுவில் ஊர்த்துவத் தாண்டவர் காட்சி தருகிறார். அவரைச் சுற்றி அஷ்டதிக்குப் பாலகர்கள் வெவ்வேறு விதமாகத் தோற்றமளிக்கின்றனர். உடலை வேறு பக்கம் திருப்பியவாறு இவர்களது உருவங்கள் அமைந்துள்ளன. இந்த வடிவமைப்பு பிற ஆலயங்களில் காண இயலாத ஒரு கலைப் பொக்கிஷம். சிதைந்து வருகின்ற இந்த உருவங்களைப் பாதுகாக்க உடனடியாக முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். மூலவரின் கருவறையின் வாயிலிலுள்ள எண்கர கஜலக்ஷ்மியின் உருவமும் ஒரு அதிசயமான மாறுபட்ட படைப்பாகும். சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தூண்களை முன்பு காரையால் பூசியிருந்தனராம் பின்னர் அவற்றை மெல்ல அகற்றி, தூண்களை வெளிக் கொணர்ந்தனராம்.

இங்குள்ள முருகப்பெருமானின் திருவுருவமும் ஒரு விநோதமான படைப்பாகும். ஐயப்பனைப் போலவே குந்தளமிட்ட நிலையில் சுப்பிரமணியர் அமர்ந்துள்ளார். சுவாமிக்கு முன்புள்ள மயிலின் அலகின் மீது ஒரு பாம்பு உள்ளது. மற்றொரு பாம்பு படமெடுத்த நிலையில் சுவாமிக்கு ஆதாரமாக ஒரு பீடம் போலத் தோற்றம் கொண்டுள்ளது. விநாயகரின் உருவம், அவரது சந்நிதிக்கு மேலுள்ள சிறு விமானம் ஆகியன ஒரே கல்லால் வடிக்கப்

பட்டுள்ளன. இந்த மூர்த்திக்கும் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. இக்கோயிலில் சோமேஸ்வரர் என்ற மற்றொரு லிங்க மூர்த்திக்கும் தனி சந்நிதி உள்ளது.

மறுபுறம் உள்ள தனிக்கோயிலில் அம்மனின் சந்நிதி உள்ளது. அம்மனின் திருநாமம் காமாட்சி ஆகும். காமாட்சிஎன்ற பெயர் பலநுண்மையான பொருட்களை உள்ளடக்கியது. கா+மா+ஆட்சி என்று பிரித்தால் கலைமகளையும், திருமகளையும் தனது கண்களாக உடையவள் என்று பொருள் கூறலாம். (கா—சரஸ்வதி, மா—இலட்சுமி, ஆட்சி—கண்ணாக உடையவள்). தனது கண்பார்வையால் கல்வி, செல்வம் ஆகிய நலன்களை ஒரு சேர வழங்குவதால் அன்னைக்கு இப்பெயர் நிலைத்தது. அடியார்களின் விருப்பத்தையெல்லாம் நிறைவேற்றி அருளுபவள் என்ற பொருளில் காம ஆட்சி என்றும் பிரிக்கலாம். (காமம்-விருப்பம்) பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவரையும் படைப்பதால் காமாட்சி என்ற பெயர் ஏற்பட்டதாகவும் கூறுவர். (க-பிரமன், அ-திருமால், ம-ருத்திரன் ஆட்சி-கண்ணால் படைப்பவள்) அன்னை பராசக்தியே தனது பிலாகாசத்திலிருந்து வெளியேறி, காயத்திரி மண்டபத்தில் தனியே அமர்ந்து தனது வலக் கண்ணிலிருந்து நான்முகனையும், இடது கண்ணிலிருந்து திருமாலையும், நெற்றிக் கண்ணிலிருந்து உருத்திரனையும் தோற்றுவித்து அவர்கள் மூலம் முத்தொழில்களைப் புரிந்து உலகை விருப்புடன் உய்விக்கிறாள். இந்த அன்னையே காமாட்சியாகக் காஞ்சியிலுள்ள காமக் கோட்டத்தில் அருள்பாலிக்கிறாள். இதே அன்னையே தருமபுரியிலும் கோலம் கொண்டுள்ளாள். கழுத்தில் திருமாங்கல்யம்; திருமுடியில் மலர்ச் சரம்; கண்ணைப் பறிக்கும் வைர, வைடூரியங்கள் இன்றி எளிமையாகவே தோன்றுகிறாள். திருவாசி சற்றே மாறுபட்ட நிலையிலுள்ளது. பத்மபீடம் அழகாக விளங்குகிறது; அம்மனின் முகத்தில் தோன்றும் புன்சிரிப்பை வெவ்வேறு கோணங்களிலிருந்து காணும் போதும் வெவ்வேறு விதமாகத் தோன்றுமாம்.

இச்சந்நிதி சற்று உயரமான இடத்தில் அமைந்துள்ளதால் இதனைப் பதினெட்டு படிகளைக் கடந்தே அடைய முடியும். இப்பதினெட்டுப் படிகளும் மகத்துவம் வாய்ந்தன. இங்கு மூன்றுபடி நீர் தெளித்து வழிபட்டால் காரிய சித்தியடையலாம் என நம்பப்படுகிறது. பிற ஆலயங்களில் ஸ்ரீசக்கரம் அம்மனுக்கு முன்பாகவோ அல்லது கீழ்ப்பகுதியிலோ பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும். இங்கு அம்மன் சந்நிதியே ஸ்ரீசக்கரத்தின் மீது எழுப்பப்பட்டுள்ளதாம். சக்தி பீடமான மேருவின் மீது எழுந்ததால் இச்சந்நிதி உயரமாக உள்ளதாம். காமாட்சி அம்மனுக்கே இங்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. விசேட நாட்களில் மகளிர் அதிக அளவில் இங்கு கூடி வழிபாடு நடத்துகின்றனர்.

சிவாலயங்களில் உள்ளது போலவே துர்க்கையின் திருவுருவத்தைக் கருவறையின் வெளிப்புறச் சுவரிலுள்ள கோஷ்டத்தில் காணலாம். மேலும் காமாட்சியம்மன் சந்நிதியின் ஒரு பகுதியில் துர்க்கையைத் தனியாகவே பிரதிஷ்டை செய்துள்ளனர். சதுர்புஜங்களுள் இரு கரங்கள் சங்கு, சக்கரம் ஆகியவற்றை ஏந்தியுள்ளன. ருத்ராம்சமாக விளங்கும் அன்னை சூலத்தையும் ஏந்தியுள்ளார். காலடியில் கத்தி, கேடயம் ஆகியவற்றைப் பிடித்துள்ள மகிஷாசுரனின் எருமைத் தலையும், முழு உடலும் சிற்பமாக இடம் பெற்றிருப்பது, 'இக்கோயிலுக்கே உரிய சிறப்பு. 'ருத்ராம்ச ராஜதுர்க்கை' எனப்படும் இத்திருவுருவத்தை ஆலயத்தின் மூன்றாம் பிரகாரத்தில் நுளம்ப பல்லவர்கள் பிரதிஷ்டை செய்தனராம். இவரே இப்பகுதியை ஆண்ட சோழ மன்னர்களின் இஷ்ட தெய்வமாக விளங்கினார். முகமதியர் காலத்தில் இச்சந்நிதி அழிந்து அம்மனின் உருவம் புதையுண்டதாம். அவ்விடம் கானல் நீர் போலத் தோன்றியது. சென்ற நூற்றாண்டில் இத்திருவுருவம் கண்டெடுக்கப்பட்டுப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. சில ஆண்டுகளுக்கு முன் கோயில் அர்ச்சகர் கனவில் தோன்றித்

தனக்குப் பூஜை நடத்துமாறு துர்க்கை வேண்டுகோள் விடுத்தாராம். அன்று முதல் இச்சந்நிதியும் பிரசித்தி அடையத் துவங்கியது. செவ்வாய்க் கிழமைகளில் மாலை 3 முதல் 4 வரையிலும், ஞாயிற்றுக் கிழமைகளில் மாலை 4-30 முதல் 6 மணி வரையிலும், வெள்ளிக் கிழமைகளில் காலை பத்தரை முதல் பன்னிரண்டு வரையிலும் இங்கு சிறப்பு வழிபாடு உண்டு. தை மாதத்தில் மூன்றாம் வெள்ளிக்கிழமையை மையமாகக் கொண்டு செவ்வாய், புதன் ஆகிய நாட்களில் லட்சார்ச்சனையும், வியாழன் அன்று சண்டீச ஹோமமும், திருவிளக்கு பூஜையும் நிகழும். சந்தனம், மஞ்சள் ஆகியவற்றால் துர்க்கைக்குக் காப்பு அணிவித்து வழிபடுபவர் ஏராளம். சிறந்த வரப்பிரசாதியான துர்க்கையம்மனை எண்ணற்ற மக்கள் வழிபட்டுப் பேறு பெறுகின்றார்கள். சிவாலயமாக உள்ள போதிலும் இங்கு காமாட்சியம்மன், துர்க்கை ஆகியோருக்கே அதிகச் சிறப்பு உள்ளது. அம்மன் சிறுமி வடிவில் தோன்றி அருள்புரிந்த சம்பவங்கள் இப்பகுதியில் ஏராளம். காமாட்சியம்மனை மையமாகக் கொண்டு இருபுறமும் மல்லிகார்ஜுனர், சோமேஸ்வரர் ஆகிய இரு இலிங்கங்கள் உள்ளன.

அம்மன் சந்நிதி மண்டபத்தின் வெளிப்புறத்தில் 18 யானைகளின் திருவுருவங்கள் உள்ளன. அஷ்டாதச கோணத்தில் இப்பதினெட்டு யானைகள் இம்மண்டபத்தைத் தாங்கி நிற்பது போல் அமைந்துள்ளன. இவை அனைத்தும் அருமையான கருங்கல் வேலைப்பாடுடன் கூடியன. பிரகாரத்தை இடமாக வலம் வந்தால் அம்மன் சந்நிதி மண்டபத்தின் கீழ்ப்பகுதியிலுள்ள சிறிய சிற்பங்களைக் காணலாம். இராமாயணத்திலுள்ள அனைத்துச் சம்பவங்களும் இவ்வாறு சிறிய தொடர்ச் சிற்பங்களாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன.

கோயிலின் தரையமைப்பு இதன் 48 முனைகள் நன்கு தெரியுமாறு அமைக்கப்பட்டதால் ஒளியும், நிழலும் மாறி மாறிக் காணப்படும்.

முற்காலத்தில் பிரசித்தி பெற்றிருந்த 1008 சிவாலயங்களுள் ஒன்றாக இக்கோயில் விளங்கியதாம். ஐந்து பிரகாரங்களுடன் பெரிய ஆலயமாகவே அப்போது திகழ்ந்ததாம். பஞ்சபாண்டவர்களுக்கும் இதற்கும் தொடர்பு உள்ளதாம். இப்பகுதியில் பஞ்சபூத ஸ்தலங்களை அவர்களே தோற்றுவித்தனர். மல்லிகார்ஜுனரை அக்கினி லிங்கமாகவும், சோமேஸ்வரரை வாயு லிங்கமாகவும் பிரதிஷ்டை செய்து, இதன் மேற்கில் வருணலிங்கம், பிருத்விலிங்கம், ஆகாயலிங்கம் ஆகியவற்றையும் ஏற்படுத்தினார்கள்.

அதியமான் நெடுமான் அஞ்சியின் பெருமையைச் சங்க இலக்கியங்கள் வானளாவப் புகழ்கின்றன. தமிழ்த் தாய் ஔவைக்கு அமர வாழ்வு அளிக்கக்கூடிய நெல்லிக் கனியை வழங்கிய வள்ளல் அவன். அம்மன்னன் நெல்லிக் கனி அளித்த குதிரைமலை இன்று வத்தல்மலை என்று அழைக்கப்படுகிறதாம். மலையமான் திருமுடிக்காரி போன்ற பல அரசர்களைப் போரில் புறங்கண்ட வீரன் அவன். இறுதியில் சேர மன்னன் பெருஞ்சேரல் இரும்பொறையின் வேற்படைக்குப் பலியானான். அவனது மகனே பொகுட்டெழினி. தகடூர் யாத்திரை என்ற நூல் தகடூரின் போரைச் சிறப்பித்து எழுதப்பட்டது. அந்நூல் இன்று அழிந்து விட்டது. இறந்த மன்னனுக்கு நடுகல் நடப்பட்டது. அதியமான் இறந்த துயர் தீராமல் ஔவையார் பாடினார்.

"அஞ்சொல் நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்று வீழ்ந்தன்று அவன் அருநிறத் தியங்கிய
வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப்பாடுநரும் இல்லை, பாடுநர்க் கொன்றீகு
நருமில்லை"

இம்மன்னனின் பரம்பரையினரே இப்பகுதியை ஆண்டனர். மல்லிகார்ஜுனேஸ்வரர் கோயில் பல்லவர் கட்டிடக் கலையில் அமைந்துள்ளது. பல்லவர்கள்

தொண்டை நாட்டில் அரசாண்ட காலத்தில் அதியன் பரம்பரையைச் சேர்ந்த சிற்றரசர்கள் இக்கோயிலைக் கட்டியிருக்கலாம். பின்னர் கங்கர், வாணர் ஆகிய வம்சங்களைச் சார்ந்த மன்னர்களின் திருப்பணியை இக்கோயில் பெற்றது. கி.பி. 8ம் நூற்றாண்டில் அரசாண்ட மாவலி வாணாதிராயன் என்பானின் விசுவாசமிக்க ஊழியன் சங்கரன் குட்டி என்பவரின் நாட்டுப்பற்று பற்றிக் கூறும் நடு கல் ஒன்று உள்ளது.

நுளம்ப பல்லவர்கள் காலத்தில் இக்கோயில் விரிவாக்கப்பட்டுப் புதுப்பிக்கப்பட்டது. கி.பி. 8, 9ம் நூற்றாண்டுகளில் இக்கோயில் நுளம்பர்களால் பிரசித்தி பெற்றது. அமராவதியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட நுளம்பர்களின் திருப்பணி பெற்ற கோயில் இது ஒன்றேயாகும். நுளம்பர்களுக்குப் பின் சில காலம் இங்கு வழிபாடு இல்லாமல் இருந்தது. மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தில் காளத்திமலையைச் சார்ந்த 'வண்ணானைக் கும்பிட்டார்', எனும் பெரியார் மன்னனைச் சந்தித்தார். "நிகரிலி சோழமண்டலத்தைச் சார்ந்த தகடூர் நாட்டிலுள்ள தகடூர் நகரில் அமைந்துள்ள திருவேளாலீச்சுரம் என்ற கோயிலைப் (இன்றைய மல்லிகார்ஜுனர் கோயில்) புதுப்பிக்குமாறு அப்பெரியார் கட்டளையிட்டார். அதியமான் குலச் சிற்றரசனின் உதவியுடன் இக்கோயிலைத் தேடித் திரிந்த குலோத்துங்கன் புலியூர்க் கிழார் என்பவரின் பொறுப்பில் இக்கோயில் இருந்ததைக் கண்டான். ஆலயத்தைப் புதுப்பித்து அதற்குச் "சாணாயிரம் முழமாயிர முடையார் கோயில்" என்று பெயரிட்டான். கோயிலைச் சுற்றியுள்ள பகுதிகளைச் சிவாச்சாரியர்களுக்கு அளித்ததுடன், அதியனிடம் இதன் பொறுப்பையும் அளித்தான். மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் இப்பகுதியை உள்ளடக்கிய நாடு 'விஜய ராஜேந்திர மண்டலம்' என்று பெயர் மாற்றம் அடைந்தது. 450

ஆண்டுகளுக்கு முன்பு திம்மய்ய நாயக்கர் என்பவரின் நன்மைக்காக இராம நாயனார் பொன்னக்கூத்தர் என்பவர் இக்கோயிலின் விமானங்களைக் கட்டினார். அதியமான், சோழர், நுளம்பர், கங்கர், வாணர், போசளர், நாயக்கர் போன்ற பலவகை வம்சத்தினரின் திருப்பணிகளைப் பெற்ற பெருமை இக்கோயிலுக்கு உரியது. இங்கு படியெடுக்கப்பட்டுள்ள ஏழு கல்வெட்டுக்கள் இச்செய்திகளைத் தெரிவிக்கின்றன. மகேந்திரராஜர் என்ற நுளம்ப பல்லவன் காலத்தில் ஒரு சமணப் பள்ளிக்காகக் கொடையளிக்கப்பட்டது. இக்கொடையை நான்கு சன்னியாசிகளும், நாடுநகர நரசாசன அலுவலகத்தைச் சார்ந்த பணியாளர்களும்நிர்வகித்து வந்தனர். மகேந்திர ராஜரின் மகனான பல்லவ ஐயப்பதேவன் என்பான் ஒரு கிராமத்தைக் கொடையாக அளித்தான். குலோத்துங்க சோழனின் கல்வெட்டு மூலம் திருவேளாலீஸ்வரம், இறையா ஈஸ்வரம் ஆகிய இரு கோயில்கள் இருந்ததாக அறியலாம்; அதே மன்னனின் மற்றொரு கல்வெட்டு மூலம் அதியமான்சிற்றரசரின் நன்மையை முன்னிட்டுசில திருப்பணிகள் நடைபெற்றதாக அறியலாம்.

சுந்தரமூர்த்தி நாயனாரின் பாடலில் தகடூர் என்ற பெயர் இடம் பெற்றுள்ளதால் இவ்வூர் ஒரு தேவார வைப்புத் தலமாகிறது.

"வீழக்காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழை ஏறுகந்தான் இடங்கொண்டதும் கோவலூர்
தாழையூர் தகடூர் தக்களூர் தருமபுரம்
வாழைக்காய்க்கும் வளர்மருகல் நாட்டு மருகலே".

(சுந்தரர்)

இக்கோயிலுக்குச் சொந்தமாக 600 கிராமங்கள் இருந்ததாகவும், அங்கு வாழும் அனைத்து மக்களும் இக்கோயிலுக்குக் கொத்தடிமையாக இருந்ததாகவும், கர்ண பரம்பரைச் செய்தி உள்ளது. அதியன் பரம்பரையினர் சோழர்களுக்குப் பயந்து இங்கு நிலவறை

அமைத்து, அதில் படைக்கலன்களைப் பாதுகாத்தன ராம். இக்கோயிலிலிருந்து அதியமான் கோட்டை வரை செல்லும் சுரங்கப் பாதை ஒன்று உள்ளது. சனத்குமாரர் பெயரால் உள்ள தீர்த்தம் இங்கு இருந்ததாம். இங்குள்ள திருக்குளமும் தூர்ந்து விட்டது.

இன்று திரு. சண்முக சுந்தர குருக்களின் குடும்பத்தி னர் இக்கோயிலை நன்கு பேணி வருகின்றனர். காமிக ஆகமப்படி நாள்தோறும் இருகால வழிபாடு நடைபெறு கிறது. குருக்களில் இல்லம், கோயிலை ஒட்டி அமைந் துள்ளதால் இங்கு தரிசனம் செய்வது எளிது. வைகாசி விசாகத்தன்றும், பிற சிறப்பு நாட்களிலும் இங்கு விசேட வழிபாடு உண்டு. ஆலயத்தைப் புதுப்பித்துச் சிற்பங்களின் சிறப்பையும் வெளிப்படுத்த முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

# 12. திரிபுவனை

(புதுவை மாநிலம்)

## வரதராஜப் பெருமாள் திருக்கோயில்

நெல்லை மாவட்டத்தில், திருநெல்வேலி - நாகர் கோயில் நெடுஞ்சாலையில் நாங்குநேரி என்ற திருத் தலம் உண்டு. இங்கு மகாவிஷ்ணு தோத்தாத்திரிநாதர் என்ற திருநாமத்துடன், ஸ்ரீதேவி, பூதேவி சமேதராக இருந்த கோலத்தில் சேவை சாதிக்கிறார். வரமங்கை என்ற பெயருடன் தாயாரும் இங்கு கோலம் கொண் டுள்ளார். தோத்த என்றால் துடைப்பவர் என்று பொருள். வழிபடுவோரின் தீவினைகளைக் களைந்து, நற்கதியளிக்கும் தோத்தாத்திரிநாதரை நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். வானமாமலை ஜீயரின் மடம் இக்கோயிலிலுள்ளது. இத்தகைய சிறப்புப் பெற்ற பதியிலுள்ளது போலவே அதே கோலத்தில் திருமால் மற்றொரு தலத்திலும் காட்சியளிக்கிறார். அத்தலமே திரிபுவனை என்ற வரலாற்றுச் சிறப்புமிக்க பதியாகும். புதுவை மாநிலத்தில், பாண்டிச்சேரியிலிருந்து விழுப்புரம் செல்லும் சாலையில் (சுமார் 20 கி மீ. தொலைவில்) திரி புவனை அமைந்துள்ளது. நெடுஞ்சாலையிலிருந்து சிறிது தூரத்தில் கோயில் அமைந்துள்ளது.

**கோயிலமைப்பு:-**

சுமார் ½ ஏக்கர் நிலப்பரப்பில் இக்கோயில் அமைந் துள்ளது. கோயிலைச் சுற்றி மதிற்சுவரும், கருவறைக்கு

எதிராக நுழைவாயிலும் உள்ளன. பிரதான ஆலயம் ஒரு கருவறையும், ஒரு அர்த்த மண்டபமும் இணைந்த ஒரே கட்டிடமாக உள்ளது. இதை உபபீதமும், ஒரு அதிஷ்டானமும் தாங்குகின்றன. உபபீதத்தின் உயரம் 1.20 மீட்டர்; பரப்பு 14.70 மீட்டர் × 9.20 மீட்டர். அதிஷ்டானத்தின் உயரம் 1.50 மீட்டர். அதன் பரப்பு 13 மீட்டர் × 7.75 மீட்டர். அதிஷ்டானம் உபனம், பத்மம், குமுதம் ஆகிய பகுதிகளுடன் பொலிவாகக் காட்சியளிக்கிறது. இங்கு யாளி, காமதேனு, சிம்மம் ஆகிய தெய்விக மிருகங்களின் சிறு உருவங்களும், வேறுபல சிறு சிற்பங்களும் இடம் பெற்றுள்ளது, குறிப்பிடத்தக்கது. ஒரே தலையுடன் கூடிய இரு விலங்குகளையும் இங்கு காணலாம். ஒரு புறமிருந்து பார்த்தால் எருது போலவும், மற்றொரு புறத்திலிருந்து கண்டால் மான் போலவும் காட்சியளிக்கும் சிற்பம் உண்டு.

கருவறையைச் சுற்றி தேவகோஷ்டங்களில் எந்த உருவமும் செதுக்கப்படவில்லை. வரிகளுக்குக் கீழே யுள்ள சிறு சிற்பங்களின் அளவு 30 செ.மீ. × 15 செ.மீ. அதிஷ்டானத்தின் முன்னும், பின்னும் இது போன்ற ஆறு சிற்பங்களும், பக்கங்களில் பத்து சிற்பங்களும் வடிக்கப் பட்டுள்ளன. இராமாயணம், பாகவதம், தசாவதாரம் ஆகியவற்றுடன் தொடர்புள்ள மிக நுண்ணிய காட்சிகளை இச்சிற்பத் தொகுதிகளில் கண்டுகளிக்கலாம். பள்ளிகொண்ட பெருமாள், விநாயகர், தோத்தாத்திரி நாதர் போன்ற வேறு பல சிறிய சிற்பங்களும் இங்கு கண்ணுக்கு விருந்தாக உள்ளன. முகமண்டபத்தின் நுழை வாயிலுக்கு அருகே சங்கநிதி, பதுமநிதி ஆகிய அழகிய சிற்பங்களும் அமைந்துள்ளன. ஸ்ரீவிமானம் மூன்று தளங் களையும், புதுப்பிக்கப்பட்ட வெளிப்பகுதியையும் பெற் றுள்ளது. உச்சியில் வட்டவடிவமான சிகரமும், கிரிவமும் அணி செய்கின்றன.

கருவறை சந்தரம் என்ற வகையைச் சார்ந்தது. இங்கு மூலவர் தோத்தாத்திரிநாதர் சங்கு, சக்கரங்களை ஏந்தி

யவாறு, அமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கியவாறு தோற்றம் கொண்டுள்ளார். மற்ற இரு கரங்களும் வரத, அபய முத்திரைகளை வழங்குகின்றன. மலர்ச் செண்டு களை ஏந்தியவாறு ஸ்ரீதேவியும், பூதேவியும் பெருமானுக்கு இருமருங்கும் காட்சியளிக்கின்றனர். மூலமூர்த்திகளுக்கு முன்னர் உற்சவரான வரதராஜர் மூலவர் போலவே உருவமைப்புடன், எழில்மிகு தோற்றம் கொண்டுள்ளார். முகத்தில் புன்சிரிப்புடன் திகழும் செல்வரின் அருட்கோலத்தையும் அருகே தரிசிக்கலாம்.

பிரகாரத்தின் தென்கிழக்குப் பகுதியிலுள்ள தனி சந்நிதியில் வரமங்கைத் தாயார் அமர்ந்த கோலத்தில் துலங்குகிறார். இரு கரங்களில் மலர்களை ஏந்தியவாறு, தாமரை மலரில் அமர்ந்தவளாகத் தாயார் தரிசனம் அளிக்கிறார். சக்கரத்தாழ்வார் யந்திரத்துடன் கூடிய கற்படிவமாகக் காட்சி தருகிறார். மறுபுறத்தில் ஆண்டாளுக்கும் சந்நிதி உள்ளது. விஷ்வக்சேனர், ஆஞ்சநேயர், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், உடையவர், மணவாள முனிகள் ஆகியோருக்கும் பிரகாரத்தில் இடம் உள்ளது. நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், உடையவர், மணவாள முனிகள் ஆகிய உற்சவப்படிமங்களும் ஆலயத்தில் உள்ளன.

கோயிலுக்கு முன்பு ஒரு நூறு கால் மண்டபம் இருந்ததாக நம்புகின்றனர். திருப்பணிக்காகத் தோண்டும் போது அம்மண்டபத்தின் அஸ்திவாரம் கண்டுபிடிக்கப் பட்டதாம். இவ்வாலயத்தின் ஈசான திசையில் ஒரு சிவாலயம் இருந்ததாகவும், பின்னர் அது அழிந்து விட்டதாகவும் ஒரு கருத்து உண்டு. வரதராஜர் கோயிலில் காலையிலும், மாலையிலும் வழிபாடுகள் நடைபெறுகின்றன. மாதாந்திர விழாக்கள் எளிமை யாகக் கொண்டாடப்படுவது வழக்கம். தற்போது பாலாலயம் செய்யப்பட்டிருப்பதால் விழாக்கள் நடை பெறவில்லை. இக்கோயில் இந்தியத் தொல்பொருள்

இலாகாவால் "பாதுகாக்கப்பட்ட சின்னமாக" அறிவிக்கப்பட்டுள்ளது. அத்துறையின் மேற்பார்வையில் கோயில் புதுப்பிக்கப்பட்டு வருகிறது. இங்கு கடைசியாக 1927ம் ஆண்டில் குடமுழுக்கு நடைபெற்றதாம். ஆலயத் திற்குச் சொந்தமாக 21 காணி நிலம் இருந்ததாகவும் கூறப்படுகிறது,

இக்கோயிலில் சுமார் 40 கல்வெட்டுக்கள் அரசினரால் படியெடுக்கப்பட்டன. அவற்றுள் இரண்டு மட்டும் தமிழ் கலந்த கிரந்தத்திலும், மற்றவை தமிழிலும் எழுதப்பட்டன. இக்கல்வெட்டுக்களுள் பல இன்று கோயிலில் இடம் பெறவில்லை. ஆலயம் புதுப்பிக்கப் பட்ட போது அவை அழிந்திருக்கக் கூடும். சோழ மன்னர்கள் முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜேந் திரன் முதலாம் இராஜாதிராஜன், இரண்டாம் இராஜேந்திர தேவன், முதலாம் குலோத்துங்கன், விக்கிரமன் ஆகியோர் காலத்திலும், பல்லவ வேந்தன் சகலபுவனச் சக்கரவர்த்தி காடவன் அவனி ஆளப்பிறந் தான் கோப்பெருஞ்சிங்கன், விசயநகர அரசர் விருப்பண்ண உடையார் ஆகியோர் காலத்திலும் தோன்றிய இக்கல்வெட்டுக்கள் மூலம் பலதரப்பட்ட செய்திகள் கிடைத்துள்ளன.

முற்காலத்தில் திரிபுவன மாதேவிச்சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்த தனியூர் என்ற பேரூராக இப்பகுதி திகழ்ந்திருக்க வேண்டும். இதற்கு ஆதாரமாக முதலாம் இராஜாதிராஜனின் "பெரும்புகழ்க் கோவி ராஜகேசரி வன்மரான உடையார் இராஜாதிராஜ தேவற்கு யாண்டு முப்பதாவது ராஜேந்திர சோழவள நாட்டுத் தனியூர் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குடிப் பெருமக்களோம்" என்ற கல்வெட்டு வாசகம் உள்ளது. இன்றைய திரிபுவனை, கண்டமங்கலம், திருவாண்டார் கோயில் (வடுகூர்), திருக்காஞ்சி ஆகிய கிராமங்கள் தனியூரில் அடங்கியிருந்

தன இவ்வூர் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்தைச் சார்ந்த பிரமதேயமாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. முதலாம் குலோத்துங்க சோழனுடைய 42, 43 ஆகிய ஆட்சியாண்டுகளில் எழுதப்பட்ட கல்வெட்டுக்கள் மூலம் இவ்வூர் கங்கை கொண்ட சோழ வளநாட்டின் உட்பிரி வான வீரவட்டார வளநாட்டின் உட்பிரிவாக இருந்த தாக அறியலாம்.

இன்றைய திரிபுவனை வரதராஜர் கோயில் 'வீரநாராயண விண்ணகர்' எனவும், அங்கு எழுந்தருளி யுள்ள இறைவன் 'வீரநாராயண விண்ணகர ஆள்வார்' என்றும் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. (''பெருங்குடிப் பெருமக்களோம் இவ்வாட்டை மீன நாயிற்றுப் புதன் கிழமை பெற்ற உத்திரத்து நாள் செம்பியன் உம்பள நாட்டு மூவேந்த வேளான் எடுப்பித்த மண்டபத்தே நிரம்பப் பெருங்குறி கூடியிருந்து பணிப் பணியால் பணித்தன எழுத்து நம் மூல தெய்வம் நடுவில் ஸ்ரீ வீரநாராயண விண்ணகர ஆள்வார் திருநாமத்தால் சேநாபதிகள் இராஜேந்திர சோழ மாவலி வாண ராஜா'') முதலாம் குலோத்துங்கனின் ஒன்பதாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டில் இக்கோயிலிலுள்ள மூலவர் ''நம்மூர் மூல தெய்வம்'' என்று போற்றப்பட்டுள்ளார்.

இக்கோயிலில் எழுந்தருளுவிக்கப்பட்ட திருமேனிகள் பற்றிய தகவல்களும் கிடைத்துள்ளன. முதலாம் இராஜாதிராஜனின் பதின்மூன்றாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த கல்வெட்டு மூலம் இக்கோயிலிலுள்ள வீற்றிருந்த பெருமாள் (மூலவர்) அழகிய மணவாளர், நரசிங்க ஆழ்வார் ஆகியோருக்கு விமரிசையாகப் பூஜைகள் நடைபெற மானியம் அளிக்கப்பட்டதாக அறியலாம். முதலாம் குலோத்துங்கனின் ஆறாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூலம் (கி. பி. 1076) 'கோல வராக ஆள்வார்' என்ற உலோகப் படிமம் நிறுவப்பட்டதாகத் தெரிகிறது. 'வீற்றிருந்த ஆள்வார்' என்ற திருமேனி பற்றிய குறிப்பு கி பி. 1079ம் ஆண்டுக் கல்வெட்டில் உள்ளது. இவரையே

'வீற்றிருந்த பெருமாள்' என விஜயநகர வேந்தர் விருப்பண்ண உடையாரின் கல்வெட்டு (கி. பி 1392) குறிக்கிறது.

இவ்வூரிலிருந்த வேறு சில கோயில்கள் பற்றிய தகவல்களையும் வரதராஜர் கோயிலிலுள்ள கல்வெட்டுக்கள் மூலம் பெறலாம். கி. பி. 1123ம் ஆண்டில் 'அருளாகர ஈஸ்வரமுடையார்' என்ற திருக்கோயிலில் மண்டபம், நந்தவனம் ஆகியன அமைக்க 'அரும்பாக்கிழான் மதுராந்தகன் பொன்னம்பலக் கூத்தன்' எனப்பட்ட 'பொற்கோயில் தொண்டைமானார்' நிலதானம் அளித்தார். இச்சான்றோரே கி. பி. 12ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நரலோகவீரன் என்ற பெயருடன் சோழ அரசியலில் பெரும்பங்கேற்றார். விக்கிரம சோழனின் நலத்திற்காகவும், கிராமத்து மக்களின் நன்மைக்காகவும் இக்கொடை அளிக்கப்பட்டது. விக்கிரம சோழனின் ஆட்சியில் 'இராஜராஜேஸ்வரம் உடையார்' என்ற கோயிலில் பராந்தக தேவரின் திருவுருவத்திற்காக நந்தவனம் அளிக்கப்பட்டதாம்.

வீரநாராயண விண்ணகர ஆழ்வார் கோயில் மண்டபத்தில் உள்ளூர்ச் சபையோர் கூடி அவ்வூரிலுள்ள வீரசோழ விண்ணகர ஆள்வார் கோயிலில் வழிபாடு நடைபெறுவதற்காக நிலதானம் வழங்கினர். இரண்டாம் இராஜேந்திரனின் ஏழாம் ஆட்சியாண்டு (கி.பி. 1059) கல்வெட்டு இச்செய்தியை அளிக்கிறது.

இத்தலத்திலுள்ள தென்திருவேங்கடத் தெம்பெருமானார் திருக்கோயிலுக்கு முன்னர் அளிக்கப்பட்டிருந்த நிலம் போதுமானதாக இல்லை. வழிபாட்டுச் செலவிற்காக கி. பி. 1119ல் அதிக நிலம் வழங்கப்பட்டதாக முதலாம் குலோத்துங்கனின் 49ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூலம் அறியலாம்.

திருநாகேஸ்வரமுடையார் கோயிலில் எழுந்தருளியுள்ள திருநாகேஸ்வரமுடைய பரமசுவாமிக்குத்

திருவிழா நடத்துவதற்கு நிலம் மானியமாக அளிக்கப் பட்டது. (கி.பி. 1075) ஊரின் மேற்குப் பகுதியில் அமைந்த திருமேற் கோயிலிலுள்ள ஆழ்வார்க்கு அமாவாஸை, விஷு போன்ற விசேட நாட்களில் வழிபாடு நடைபெற முதலாம் குலோத்துங்கன் காலத் தில் நிலதானம் வழங்கப்பட்டது ஊரின் கிழக்குப் பகுதியிலுள்ள கிராமத்தில் அமைந்திருந்த எமலட்டு துர்க்கையார் ஓம்கார சுந்தரியாரின் ஆலயத்திற்கு (துர்க்கை ஆலயம்) நிலம், நந்தவனம், திருக்குளம் ஆகிய வற்றைக் கொடையாக வழங்கி, அவற்றைப் பன்னிரண்டாவது வகுப்பாக ஏற்றுக் கொண்டனர். அப்பகுதியில் பூபால சுந்தர விளகம் என்ற கிராமமும் அமைக்கப்பட்டது. இச்செய்திகளை முதலாம் குலோத்துங்கனின் 42வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூலம் அறிந்து கொள்ளலாம்.

வெளியூரிலுள்ள கோயில்களுக்குத் திரிபுவன மாதேவி சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்த நிலங்கள் கொடையாக வழங்கப்பட்டன. இன்றைய கடலூர் நகரத்திற்கு அண்மையிலுள்ள வைணவத் தலமான திருவகிந்திர புரத்திலுள்ள திருக்கோயிலில் எழுந்தருளி யுள்ள ஆழ்வார்க்கு நிலதானம் அளிக்கப்பட்ட செய்தி களை முதலாம் இராஜேந்திரன் (35ம் ஆட்சியாண்டு) இரண்டாம் இராஜேந்திர தேவன் (ஏழாம் ஆட்சியாண்டு) ஆகியோர் காலத்தில் எழுந்த கல்வெட்டுக்கள் தெரிவிக் கின்றன திருவந்திபுரத்திற்கு அருகிலுள்ள உதவி திரு மாணிக்குழி மகாதேவர் ஆலயத்திற்கு முற்காலத்தில் வழங்கப்பட்ட இறையிலி நிலங்கள் போதுமாக இல்லா மையால் திரிபுவன மாதேவி சதுர்வேதி மங்கலத்துச் சபையோர் வேறு நிலங்களையும் கூடுதலாக அளித்தனர்.

முதலாம் இராஜராஜனின் பத்தாம் ஆட்சியாண்டில் ஆலயத்தில் நந்தா விளக்கு ஏற்றவும், ஆலயத்திற்கு நீர் எடுத்து வரவும் நிலதானம வழங்கப்பட்டது. முதலாம் இராஜேந்திரனின் பதினாறாம் ஆட்சியாண்டில் வரக்

கூர் என்ற கிராமம் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. அவை 48 விவசாயிகளுக்குப் பகிர்ந்து அளிக்கப்பட்டது. அவ்விவசாயிகள் கோயிலுக்கு அளிக்க வேண்டிய வரி தவிர வேறு எந்தவிதமான கட்டணமும், செலுத்த வேண்டியதில்லை. அதே அரசனின் பத்தாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டில் கோக்கிலானடிப் பேரேரி என்ற மிகப்பரந்த ஏரி பற்றிய குறிப்பு உள்ளது. முதலாம் இராஜாதிராஜன் ஆட்சியில் அரங்கன் குமாரன் அல்லது ராஜாதிராஜப் பெருந்தட்டான் என்ற பொற்கொல்ல னுக்கு நிலதானம் அளிக்கப்பட்டது. நகரத்தின் எல்லைக்குள் இருந்தவாறே அவன் தனது தொழிலைப் புரியவேண்டும் என்ற கட்டளையும் பிறப்பிக்கப் பட்டது. இரண்டாம் இராஜராஜதேவனின் ஆறாம் ஆட்சியாண் டில் வரக்கூர் என்ற ஊரில் வாழ்ந்து வரும் வேளாளர் மட்டுமே வரி செலுத்த வேண்டும் என்ற உத்தரவை, அரசின் செயலாளர் பிறப்பித்தார். வேறு எவராவது வரி செலுத்தினால் அரசின் உத்தரவை மீறியதாகக் கருதப் பட்டனர். அதே உத்தரவில் புத்தூர் என்ற ஊரிலுள்ள நிலத்தின் பிரிவுகள் மாற்றியமைக்கப்பட்டன. முதலாம் குலோத்துங்கனின் ஆட்சியில் கைவினைஞர்க ளுக்குப் பஞ்சம் ஏற்பட்டது போலும். இக்குறையை நிவர்த்தி செய்ய அக்கைவினைஞர்கள் தங்களது ஊரை விட்டு வெளியூர் சென்று தொழில் புரியக் கூடாது என்ற சட்டம் நிறைவேற்றப்பட்டது.

திரிபுவனையிலுள்ள திருக்குளம் சூறைக் காற்றால் பாழ்பட்டதால் முதலாம் குலோத்துங்கனின் 40ம் ஆட்சி யாண்டில் செப்பனிடப்பட்டது. கோப்பெருஞ்சிங்கன் (1246—79) காலத்தில் அதன் கரைகளும், வாய்க்கால் களும் செப்பனிடப்பட்டன. இதன் கரையில் ஹேரம்ப கணபதியின் திருக்கோயில் நிறுவப்பட்டது.

பிப்பரி திருநாராயண பட்டன் எனப்பட்ட கவிகுமுத சந்திர பண்டிதர் என்பவர் 'குலோத்துங்க சரிதை' என்ற காவியத்தை இயற்றினார். முதலாம் குலோத்துங்க

சோழனின் விருப்பத்தின் பேரில் தனியூர்ச் சபையினர் வீர நாராயணப் பெருமாள் கோயில் மண்டபத்தில் கூடி அதனைப் படிக்கக் கேட்டனர். திருநாராயண பட்டனின் புலமைக்குப் பரிசாக நிலம் அளித்தனர் புலவரும் அவருக்குப் பின் அவரது சந்ததியினரும் அந்த நிலத்தை அனுபவிக்க உரிமை அளிக்கப்பட்டது.

முதலாம் இராஜேந்திரனின் ஐந்தாம் ஆட்சியாண்டில் இக்கோயில் இரு படைப்பிரிவுகளின் பாதுகாப்பில் விடப்பட்டது. அவற்றுள் ஒரு பிரிவு ஸ்ரீ வடுவூர் தில்லையாளிப் பெரும்படை என அழைக்கப்பட்டது.

முதலாம் இராஜாதிராஜனின் முப்பதாவது ஆட்சியாண்டில் "இராசேந்திரசோழன் உத்தமாகிரம்" என்ற அறக்கட்டளை நிறுவப்பட்டது. இதற்காக ஆண்டுக்கு 12000 கலம் நெல் அளிக்கக் கூடிய 72 வேலி நிலம் வழங்கப்பட்டது. திரிபுவனை ஆலயத்திலுள்ள வீற்றிருந்த பெருமாள், அழகிய மணவாளர், நரசிங்க ஆள்வார் ஆகிய திருவுருவங்களுக்கு விமரிசையாக வழிபாடு நடைபெறவும், மாசி திருப்புனர்பூசம், ஜெயந்தி அஷ்டமி, மார்கழி திரு ஏகாதசி, உத்தராயணம், தட்சிணாயணம், ஐப்பசி விஷு, சித்திரை விஷு ஆகிய விழாக்கள் கொண்டாடப் படவும், ஸ்ரீவைணவர்களுக்கு அமுது படைக்கவும், திருவாய்மொழி பாடப்படுவதற்கும் ஆண்டுக்கு 2475 கலம் அரிசி வழங்கப்பட்டது.

இத்திருக்கோயிலில் வேதக்கல்லூரி ஒன்றும் செயல்பட்டு வந்தது. அதில் இருக்கு வேதம் கற்பிக்க மூன்று ஆசிரியர்களும், யஜுர் வேதம் கற்பிக்க மூன்று ஆசிரியர்களும், சந்தோக சாமம், தலவகார சாமம், அபூர்வம், வாஜசேனியம், போதாயனீயம், சத்தியா சாத சூத்திரம் ஆகியன பயிற்றுவிக்க ஒவ்வொரு ஆசிரியரும் நியமிக்கப்பட்டனர். இவர்களுக்கு நாள்தோறும் நான்கு காலம் நெல் அளிக்கப்பட்டது. மேலும், வேதாந்தம், வியாகரணம், ரூபாவதாரம், பாரதம், இராமாயணம், மனு

சாஸ்திரம், வைகானஸ ஆகமம் இவற்றில் விரிவுரை யாற்ற ஒவ்வொரு ஆசிரியர்கள் இருந்தனர்.

இக்கல்லூரியில் இருக்கு வேதம் பயில அறுபது மாணவர்களும், யஜுர் வேதம் பயில அறுபது மாணவர் களும் சந்தோகசாமத்திற்கு இருபது மாணவர்களும், பிற சாஸ்திரங்களுக்கு ஐம்பது மாணவர்களும் ஆக மொத்தம் 190 மாணாக்கர்கள் பயின்று வந்தனர். இவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 11 கலம், 10 குறுணி, 4 நாழி நெல் செலவாயிற்று. வேதாந்தம், வியாகரணம், ரூபாவதாரம் ஆகியவற்றைக் கற்க எழுபது மாணவர்கள் இருந்தனர். இவர்கள் அனைவருக் கும் ஆண்டுதோறும் 9525 கலம் நெல் செலவாயிற்று.

இதற்காக வழங்கப்பட்ட 72 வேலி நிலத்தில் சாகுபடி செய்பவர்கள் இந்த 12000 கலம் நெல்லை வழங்க வேண்டும் எனக் கட்டளையிடப்பட்டது. நிலத்தைப் பிற்காலத்தில் சீர்திருத்தியமைத்தாலும், அதன் தரம் மாற்றப்படலாகாது என்றும், இந்நிலங்கள் மீது ஏரி-ஆயம், ஏரி-அமைஞ்சி, படிக்காவல் ஆகிய வரிகள் தவிர வேறு எந்தத் தீர்வையும் வசூலிக்கப்படக் கூடாது எனவும், வேதக் கல்லூரியில் பயிலும் மாணாக்கர்கள், அங்கு புணிபுரியும் ஆசிரியர்கள் ஆகியோருக்குச் சில வரிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டும் என்றும் சட்டம் இயற்றப்பட்டது. அரசனின் நலனைக் கருதி சேனாதிபதி இராசேந்திர சோழ மாவலிவாணராஜர் இக்கட்டளையை ஏற்படுத்தினார். இவ்வூர்ச் சபையோர் செம்பியன் உம்பளவேளான் என்பவன் கட்டிய செம்பியன் உம்பள வேளாளர்த் திருமண்டபத்தில் கூடி, இந்த அறக்கட்டளையை நிறைவேற்றினர். (2-3-1048), புதன்கிழமை] இதுபோலவே எண்ணாயிரம் என்ற இடத்தில் முதலாம் இராஜேந்திரன் உயர்கல்விச் சாலை ஒன்றை அமைத்துள்ளது குறிப்பிடத் தக்கது.

முதலாம் குலோத்துங்கனின் 48ம் ஆட்சியாண்டில் சிவயோகிகளுக்கும், மகேஸ்வரர்களுக்கும் திருநாவுக்கரசர் பெயரால் அமைந்த மடத்தில் உணவு அளிக்க நிவந்தம் வழங்கப்பட்டது. விக்கிரம சோழனின் காலத்தில் ஆலயங்கள், அரண்மனை ஆகியவற்றிற்கு ஆடைகளை நெய்து கொடுத்த அனுலோமா வகுப்பைச் சேர்ந்த நெசவாளிகளுக்கு நிலதானம் வழங்கப்பட்டது. இவ்வாறு திரிபுவனை வரதராஜர் கோயில் கல்வெட்டுக்கள் மூலம் அக்காலத்திலிருந்த அரசியல், சமூகம், பொருளாதார நிலைகளைப் பற்றி அறிந்து கொள்ளலாம்.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டுக்களை ஆராய்ந்த பின்னர் எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், இக்கோயில் முதலாம் பராந்தக சோழனால் கட்டப்பட்டதென்றும், முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜேந்திரன் ஆகியோர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டது எனவும் கூறுகிறார். (இடைக்காலச் சோழர் கோயில்கள், பக்கம் 349) பழமையான வைணவ ஆலயங்களுள் காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயிலும், உத்தரமேரூர் சுந்தரவதனர் ஆலயமும், திருவெள்ளறை புண்டரீகாக்ஷர் ஆலயமும், திரிபுவனை வரதராஜர் கோயிலும் அதிக மாறுதல்களைப் பெறாமல் ஓரளவாவது பழைய அமைப்புடன் காட்சியளிக்கின்றன. காஞ்சி வைகுண்ட பெருமாள் கோயிலிலும், உத்தரமேரூர் சுந்தரவதனர் கோயிலிலும் உள்ளது போலவே திரிபுவனை வரதராஜர் கோயிலிலும் மூன்று தளங்களுடன் கூடிய ஸ்ரீவிமானம் இருந்திருக்கக் கூடும் என எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் கருதுகிறார். இக்கோயிலுக்கு அருகிலுள்ள ஒரு இல்லத்தில் கிடைத்த அரங்கநாதரின் பெரிய திருவுருவம் மேல் தளத்தில் இடம் பெற்றிருக்க வாய்ப்பு உண்டு. (இடைக்காலச் சோழர் கோயில்கள், பக்கம் 353)

திரிபுவனை அருகேயுள்ள ஊரல்மேடு, லிங்கத்து மேடு போன்ற இடங்களில் அகழ்வாய்வு நடத்தியபோது செங்கற்களாலான கடைக்காற்சுவர்கள், 'படிவங்கள், சோழர் கால நாணயங்கள், சிற்பவேலை மிக்க கருங் கற்கள் ஆகியன கிடைத்தன. கலிதீர்த்தாள் குப்பம் என்ற இடத்தில் கிடைத்த சூளை போட்ட மட்பாண்டங் களில் சோழ அரசர்கள் காலத்தைச் சேர்ந்த நாணயங் களும், சிறு சிற்பங்களும் கிடைத்தன. இவற்றால் கி. பி. பத்தாம் நூற்றாண்டிலிருந்து திரிபுவனை சிறப்பு மிக்க ஊராகத் திகழ்ந்திருக்கக் கூடும் என ஊகிக்கலாம்.

# 13. திருத்தண்கால்

*(காமராஜர் மாவட்டம்)*

## நின்ற நாராயணப் பெருமாள் திருக்கோயில்

*மகாவிஷ்ணுவுடன் வாசம் செய்து வரும் திருமகள் (ஸ்ரீதேவி), நிலமகள் (பூதேவி), நீர்மகள் (நீளாதேவி), ஆகிய மூவருக்குள் எவர் பெரியவர்? என்ற கேள்வி எழுந்தது. இக்கேள்வி பெரும் சர்ச்சையை எழுப்பியது. ஒவ்வொருவரும் தானே உயர்ந்தவர் என்று எண்ணினர். அதனை நிலைநாட்ட பலபரீட்சையில் இறங்கவும் தலைப் பட்டனர். இதன் விளைவாகத் திருமகள் தென் திசையில் சோலைகளால் சூழப்பட்ட அமைதியான இடத்தில் தனியாக எழுந்தருளினார் ஏகாந்தமாக உதித்துள்ள செல்வத்தின் அதிபதியை முனிவர்களும், பக்தர்களும் போற்றி ஆராதித்தனர். தன்னைத் துதித்துப் பணியும் அன்பர்கள் விரும்பிய வரத்தை அளிப்பதாகத் திருமகள் அருளினார். அவ்விடத்திலேயே நிரந்தரமாக எழுந் தருளுமாறு முனிவர்கள் இறைஞ்சினர். பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் பாவனையில் "அருணகமல மகாதேவி" என்ற திருநாமத்தைத் தாங்கியவாறு மகா லக்ஷ்மி அதே இடத்தில் நிரந்தரமாகத் தங்கினார்.*

*மணவாளன் இன்றி ஏகாந்தமாகத் தங்குவது தனக்கு அழகல்ல என்று திருமகள் உணர்ந்தாள். அருகில் ஒரு*

இம்மண்டபத்தின் மேற்குப் பகுதியில் பாண்டியர் கலைப்பாணியில் அமைந்த குடைவரைக் கோயில் உள்ளது இக்கருவறையில் பள்ளி கொண்ட பெருமான் இரு தேவியரும் திருவடி சேவை புரியும் நிலையில் கோலம் கொண்டுள்ளார். இவருக்கு வலதுபுறத்தில் மார்க்கண்டேயரும், இடதுபுறத்தில் பிருகு முனிவரும் இடம் பெற்றுள்ளனர்.

இத்திருவுருவங்கள் சுதையால் செய்யப்பட்டவை. பள்ளிகொண்ட பெருமாள் இங்கு தோன்றியது பற்றிய கர்ண பரம்பரைச் சரிதம் ஒன்றுண்டு. திருவரங்கத்தில் பள்ளி கொண்டுள்ள அரங்கநாதர் ஆண்டாளைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு ஸ்ரீ வில்லி புத்தூர் நோக்கிச் சென்றபோது இரவு காலங்கடந்து விட்டதால் இவ்விடத்தில் ஒருநாள் தங்கினாராம். இதனால் இவ்வூர் திருத்தங்கல் என்று பெயர் பெற்ற தாகவும் கூறுவர். இக்குன்றும் தங்கல்கிரி என்ற பெயரடைந்தது. குடைவறையில் புரூரச் சக்கரவர்த்தி, அழகிரிக் கோனார் ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன

இரண்டாம் கட்டில் நான்கு கால்மண்டபம், கண்ணாடி அறை, வாகன மண்டபம், மடைப்பள்ளி, ஆகியன இடம் பெற்றுள்ளன. இப்பகுதியில் அருணகமலமகாதேவி எனவும், செங்கமலவல்லி எனவும் அழைக்கப்படும் தாயார் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார், முழு நம்பிக்கையுடன் இந்த அம்மனுக்கு ஒன்பது கஜம் நூற்புடவை சார்த்துவதாக வேண்டிக் கொண்டவர் களின் நியாயமான விருப்பங்கள் நிறைவேறுகின்றன வாம். திருமணம் நிறைவேறாதவர்கள், புத்திர பாக்கியம் அடையாதவர்கள், அமைதி நாடுவோர், பொருள் தேடுவோர் போன்றோர் இந்த நாச்சி யாருக்கு இது போலப் புடவைகள் சார்த்துவது உண்டு. திருமாலின் ஆலயங்களில் நாச்சியார் வீற்றிருந்த கோலத்தில் காட்சியளிப்பதே வழக்கம். இங்கு செங்கமலவல்லித் தாயார் நின்ற கோலத்தில்

இம்மண்டபத்தின் மேற்குப் பகுதியில் பாண்டியர் கலைப்பாணியில் அமைந்த குடைவரைக் கோயில் உள்ளது இக்கருவறையில் பள்ளி கொண்ட பெருமான் இரு தேவியரும் திருவடி சேவை புரியும் நிலையில் கோலம் கொண்டுள்ளார். இவருக்கு வலதுபுறத்தில் மார்க்கண்டேயரும், இடதுபுறத்தில் பிருகு முனிவரும் இடம் பெற்றுள்ளனர்.

இத்திருவுருவங்கள் சுதையால் செய்யப்பட்டவை. பள்ளிகொண்ட பெருமாள் இங்கு தோன்றியது பற்றிய கர்ண பரம்பரைச் சரிதம் ஒன்றுண்டு. திருவரங்கத்தில் பள்ளி கொண்டுள்ள அரங்கநாதர் ஆண்டாளைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு ஸ்ரீ வில்லி புத்தூர் நோக்கிச் சென்றபோது இரவு காலங்கடந்து விட்டதால் இவ்விடத்தில் ஒருநாள் தங்கினாராம். இதனால் இவ்வூர் திருத்தங்கல் என்று பெயர் பெற்ற தாகவும் கூறுவர். இக்குன்றும் தங்கல்கிரி என்ற பெயரடைந்தது. குடைவறையில் புரூரச் சக்கரவர்த்தி, அழகிரிக் கோனார் ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன

இரண்டாம் கட்டில் நான்கு கால்மண்டபம், கண்ணாடி அறை, வாகன மண்டபம், மடைப்பள்ளி, ஆகியன இடம் பெற்றுள்ளன. இப்பகுதியில் அருணகமலமகாதேவி எனவும், செங்கமலவல்லி எனவும் அழைக்கப்படும் தாயார் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார், முழு நம்பிக்கையுடன் இந்த அம்மனுக்கு ஒன்பது கஜம் நூற்புடவை சார்த்துவதாக வேண்டிக் கொண்டவர் களின் நியாயமான விருப்பங்கள் நிறைவேறுகின்றன வாம். திருமணம் நிறைவேறாதவர்கள், புத்திர பாக்கியம் அடையாதவர்கள், அமைதி நாடுவோர், பொருள் தேடுவோர் போன்றோர் இந்த நாச்சி யாருக்கு இது போலப் புடவைகள் சார்த்துவது உண்டு. திருமாலின் ஆலயங்களில் நாச்சியார் வீற்றிருந்த கோலத்தில் காட்சியளிப்பதே வழக்கம். இங்கு செங்கமலவல்லித் தாயார் நின்ற கோலத்தில்

தோன்றுவது ஒரு அபூர்வமான அம்சமாகும். கிழக்கே திருமுகமண்டலத்துடன், ஒரு கரத்தைக் கீழே தொங்க விட்டவாறும், மற்றொரு திருக்கையால் அபயமுத்திரை அளித்தவாறும் செங்கமலவல்லித் தாயார் பக்தர்களுக்கு அருள்மழை பொழிகிறார். இத்தாயாருக்கு மட்டும் நாளதோறும் எண்ணெய்க் காப்பு திருமஞ்சனத்துடன் நடைபெறுகிறது தாயாருக்கு ஆராதனம் துவங்கிய பின்னரே பெருமாளுக்கு வழிபாடு தொடங்கும்.

ஆகாரத்ரய ஸம்பந்நாம் அரவிந்த நிவாஸிநீம்!
அசேஷ ஜகதி சித்ரீம் வந்தே வரதவல்லபாம்!!
(தியான ஸ்லோகம்).

தாயார் சந்நிதிக்கு வடக்கே திருமங்கை ஆழ்வார், எம்பெருமானார் (உடையவர்) ஆகியோரின் சந்நிதிகளும், பாத்திர அறையும் உள்ளன. அருகேயுள்ள அக்கிரவாரக் கொரட்டில் வெள்ளிக்கிழமை தோறும் தாயாருக்கு ஊஞ்சல் வைபவம் நிகழும்.

வடபுறமாக வந்தால் பிரதான கிழக்கு வாயிலையும், வாத்திய மண்டபத்தையும் காணலாம். இம்மண்டபத்தின் வடகோடியில் மணவாள முனிகளின் சந்நிதி உண்டு. இங்குள்ள மரக்கொட்டகை வண்ணப் பூச்சுகளையும், அழகிய சிற்பங்களையும் கொண்டுள்ளது. இதனைக் கட்டிய ஸ்ரீஇராமானுஜதாசரின் சிற்பமும், தூண் ஒன்றில் இடம் பெற்றுள்ளது.

துவஜஸ்தம்பத்திற்கு அருகேயுள்ள படிக்கட்டுகளின் வழியாக மூன்றாம் கட்டுமலையை அடையலாம். இங்குள்ள மகாமண்டபத்தில் மூலவர் சந்நிதிக்கு எதிராகக் கருடாழ்வார் புதுமையான கோலத்தில் தோன்றுகிறார். இரு கரங்கள் கூப்பிய நிலையிலுள்ளன. வலது கரத்தில் அமுத கலசமும், இடது திருக்கையில் சர்ப்பமும் இடம் பெற்றுள்ளன. இது பிற ஆலயங்களில் காண முடியாத அரிய கோலமாகும். இம்மண்டபத்தின்

வடக்கில் ஆழ்வார்கள், ஆசாரியார்கள், கண்ணன் ஆகியோர் எழுந்தருளியுள்ளனர்.

அர்த்தமண்டப வாயிலில் கதை ஏந்தியவாறு கம்பீரமாகத் தோன்றும் துவார பாலகர்கள் சாத்தூர் கோளாரப் பட்டியைச் சார்ந்த வம்சத்தினரால் அமைக்கப்பட்டவர்கள். கருவறையில் கிழக்கே திருமுக மண்டலம் சாதிக்கும் மூலவர் "நின்ற நாராயணப் பெருமாள்", பெயருக்கு ஏற்ப நின்ற கோலத்திலேயே அருள்பாலிக்கிறார். இச்சந்நிதியிலுள்ள பதினோரு மூர்த்திகளும் சுதையாலானவை; வண்ணம் பூசப் பெற்றவை; வலப்புறம் மார்க்கண்டேயர் கைகளைக் கட்டியவாறு அமர்ந்துள்ளார். நின்ற கோலத்தில் கருடன், அருணன், விசுவகர்மா, பூதேவி, ஸ்ரீதேவி ஆகியோர் காட்சியளிக்கின்றனர். நடுவில் வலது கரத்தால் திருவடிகளைச் சுட்டியவாறும், இடது கரத்தை இடுப்பில் சாய்த்தவாறும் அப்பன் தோன்றுகிறார் இவரையடுத்து ஜாம்பவதி (நீளாதேவி), உஷை, அநிருத்தன் ஆகியோர் உள்ளனர். இறுதியில் பிருகுமுனிவர் அமர்ந்துள்ளார். பஞ்சபருவமூர்த்திகளான துருவம், கௌதுகம், உற்சவர் ஸ்னானம், பலி ஆகியோர் மூலவருக்கு முன்பு தோன்றுகின்றனர், விமானத்தில் தாண்டவக் கண்ணன், ஆண்டாள் ஆகியோரையும், கருவறைச் சுற்றில் விநாயகர், துர்க்கை (அதிஷ்டான தேவதைகள்) ஆகியோரையும் தரிசிக்கலாம் கருவறையை அலங்கரிக்கும் விமானம் அழகிய வேலைப்பாடுகள் மிக்கது அண்மையில் வண்ணப்பூச்சு அளிக்கப்பட்டதால் பொலிவாகத் தோன்றுகிறது; சோமச்சந்த விமானம் என அழைப்பர். ஸ்ரீரங்கம், அழகர் கோயில் ஆகிய தலங்களிலுள்ள விமானங்களைப் போலவே இதுவும் உருவமைப்பு உடையது உற்சவரான திருத்தண்கால் அப்பன் சதுர்புஜங்களுடன், இருதேவியர் சூழ அற்புதமாகக் காட்சி தருகிறார்.

ஸோமச் சந்தே விமானே ப்ரதிக விபவகே பாப
நாசாக்ய தீர்த்தே
க்ஷேத்ரே ஸ்ரீக்ஷேத்ரஸம்ஜ்ஞே மஹிதகுணகணை
ஸேவிதோ தேவஸங்கை
ஜித்வா பாணம் ஸ்ருத்ரம் தநுஜதநுபவாம்ச்ச
வித்ராவ்ய நா நம்
திஷ்டந் நாராயணோந, கலயது குசலம்
வ்யாக்ரமோக்ஷ ப்ரதாதா!
ஸோமச் சந்த விமானஸ்த திஷ்டந் நாராயணாயதே!

(தியான ஸ்லோகம்)

பிரம்மாண்ட புராணத்திலுள்ள க்ஷேத்திர காண்டத்தில் எட்டாவது அத்தியாயத்தில் திருத்தண்காலின் மகிமை எடுத்தாளப்பட்டுள்ளது. பரத கண்டத்தின் மன்னனான புரூரவன் என்பவன், நாட்டைத் தனது புத்திரர்களிடம் ஒப்படைத்து விட்டுத் தனது பத்தினிமார்களுடன் வனதஙையடைந்தான். கடுமையான தவம் புரிந்து, பேரின்பமான வானுலகப் பதவியை அடைய வேண்டும் என்பதே அவனது விருப்பம். தனது தவத்திற்கு ஏற்ற தலத்தைக் காட்டுமாறு கானகத்திலுள்ள முனிவர்களிடம் அம்மன்னன் வேண்டினான். தென்திசையிலுள்ள திருத்தண்கால் என்ற பதியே தவம் புரியச் சிறந்த இடம் என முனிவர்கள் ஒரு மனதாகக் கூறினர் புரூரவனும் அங்ஙனம் தவமியற்றி மகாவிஷ்ணுவின் தரிசனம் பெற்றான். திருமாலின் அருளால் பேரின்ப வாழ்வு அவனுக்குக் கிடைத்தது.

கிருஷ்ண பரமாத்மாவின் புத்திரனான பிரத்யும்னனுக்கு அநிருத்தன் என்ற புதல்வன் இருந்தான். மன்மதனின் அம்சத்துடன் கூடிய பிரத்யும்னனின் புத்திரன் பேரழகு மிக்க வதனத்துடன் விளங்கினான். அக்காலத்தில் மகாபலியின் புதல்வனாக பாணாசுரன் என்ற அசுரன் மகிஷ்மதியில் ஆண்டு வந்தான். சிவபெருமானிடம் அவன் தீவிர அன்பு கொண்டிருந்தான். அரனார்

அருளால் ஆயிரம் புஜங்களுக்குரிய பலத்தை அவன் பெற்றிருந்தான். தன்னுடன் போரிடுபவர்கள் எவரும் இல்லாமையால் அவனது தோள்கள் தினவெடுத்தன. தனக்கு இணையாகப் போரிடும் ஒரு வீரனை எதிர் பார்த்திருந்தான். பாணாசுரனின் மகளான உஷை பராசக்தியிடம் பெரும் பக்தி கொண்டிருந்தாள். தனக்கு ஏற்ற மணவாளனைத் தருமாறு அன்னையிடம் உஷை வேண்டினாள். அன்றிரவு பேரெழில் மிகுந்த ஒரு அரச குமாரனுடன் தான் இன்பமாக இருப்பதாக அவள் கனவு கண்டாள். கனவில் தோன்றிய மணாளனை எண்ணித் துயருற்ற உஷையின் துன்பத்தை நீக்க அவளது தோழியான சித்திரலேகை ஒரு உபாயம் கண்டாள். பல அரச குமாரர்களின் உருவங்களை ஓவியமாக வரைந்து அவற்றை உஷையிடம் காட்டினாள். அநிருத்தனின் உருவத்தைக் கண்டவுடன் உஷையின் முகம் மலர்ந்தது. அன்று இரவு உறங்கிக் கொண்டிருந்த அநிருத்தனைச் சித்திரலேகை தனது மாயா சக்தியால் தூக்கி வந்து உஷையின் அந்தப்புரத்தில் சேர்த்தாள். அநிருத்தன், உஷை இருவரும் பலகாலம் இன்புற்றிருந் தனர். உஷை கருவுற்றதையறிந்து வெகுண்ட பாணன் அநிருத்தனைச் சிறையெடுத்தான். அநிருத்தனின் நிலை யறிந்து அவனைச் சிறைமீட்கக் கிருஷ்ணர் தனது படைக் ளுடன் சென்றார் பாணனுக்குத் துணையாகச் சிவபெரு மானும், பூதகணங்களும் வந்தன. பாணாசுரன் தனது ஆயிரம் புஜபலத்தையும இழந்தான். இறுதியில் அரியும், அரனும் ஒரே சக்தியின் இரு வேறு கூறுகள் என்ற உண்மையை அசுரன் உணர்ந்தான். அநிருத்தனுக்கும். உஷைக்கும் திருமணம் நடந்தேறியது இத்திருமணம் திருத்தண்காலில், திருமாலின் முன்னிலையில் நடந்தேறி யதாக இவ்வூர் தலவரலாறு விளம்புகிறது.

''ஆகேற்றமுறுசுதன் முன்னாங்கணங்கள் புடைசூழ
வரன்பணித்தே
பாகேற்ற மொழிப்பதுமைப்பதியே நீகதி என்று
பரவமாலும்
வாகேற்றமுடைய புயன் வாணன் மகளுடை
யிணையம் மாறன் சேய்க்குச்
சீசேத்திரத்து வந்து மகிழ்ந்து மணஞ் செய்த''
(தலபுராணம்)

தேவேந்திர வல்லபன் என்ற பாண்டிய மன்னன் இப்பதியை அரசாண்டு வரும் வேளையில் மேற்குத் தொடர்ச்சி மலைச்சாரலில் ஒரு புலியைக் கண்டான். புலி அரசனின் பார்வையிலிருந்து தப்பி ஓடித் திருத்தண் கால் வந்து சேர்ந்தது. மன்னனும் அதைத் துரத்திய வாறு இவ்விடம் வந்தடைந்தான் புலியின் மீது அவன் அம்பு செலுத்தக் குறி வைத்தபோது அங்கு ஒரு வானவன் தோன்றி அப்புலியின் முற்பிறப்பு பற்றிய விவரங்களைத் தெரிவித்தான். சந்திரகேது என்ற மன்னன் ஏகாதசி விரதம் கடைப்பிடித்து வந்தபோது துவாதசி பாரணைக்கு முன் எண்ணெய் தேய்த்துக் குளித்தபடியால் மறுபிறவியில் புலியாகப் பிறக்க நேர்ந்ததாகப் பாண்டியன் அறிந்தான். தேவேந்திர வல்லபனுக்கும், புலிக்கும் இதே தலத்தில் நற்கதி ஏற்பட்டது. இச்சம்பவத்தின் நினைவாகப் புலிப்பாறை எனும் சிறுகுன்று இத்தலத்திற்கு அருகே உள்ளதாம். ஸ்ரீதேவி இங்குமகாவிஷ்ணுவை நோக்கித் தவமிருந்ததால் 'ஸ்ரீபுரம்' என்றும், 'ஸ்ரீக்ஷேத்திரம்' எனவும், புராதனப் பெருமை யுடையதால் 'பௌராணிகம்' எனவும் இத்தலம் வழங்கப் படுகிறது. சல்யபாண்டியன் என்ற அரசனுக்கு இத்தலத்தில் நற்கதி கிடைத்தது.

இக்கோயில் அமைந்துள்ள குன்று தங்காலமலை எனப்படும் உடல்சோர்வு, உள்ளச்சோர்வு ஆகிய வற்றை அகற்றிப் புத்துணர்ச்சியையும், பக்திச் சுவையை யும் இம்மலை அளிக்கவல்லது. முன்னொரு நாள் சுவேதத் தீவிலுள்ள ஆலமரத்திற்கும், ஆதிசேடனுக்கும் தங்களுக்குள் பெருமை மிக்கவர் எவர்? என்ற விவாதம் ஏற்பட்டது. இதற்குத் தீர்ப்பு அளிக்க நான்முகன் அழைக்கப்பட்டார். ஆதிசேடன மீதே திருமால் எப்போதும் இருந்தும், நின்றும், பள்ளி கொண்டும் அருள் புரிவதால் அனந்தனே போற்றற்குரியவர் என்று பிரமன் தீர்ப்பு வழங்கினார். இதனால் வருத்தமுற்ற ஆலமரம் பாற்கடலருகே சென்று தவமியற்றியது. ஆதிசேடன்

பெற்ற பெருமை தனக்கும் கிடைக்க வேண்டும் என இறைஞ்சியது திருமால் ஆணையிட்டவாறு ஸ்ரீஷேத்திரத்தில் மலைவடிவில் மகாவிஷ்ணுவைத் துதித்தவாறே இருந்தது. ஆலமரம் விரும்பியவாறே திருமால் அம் மலையில் கோயில் கொண்டார் இதனால் அம்மலை தங்கால மலை எனப் பெயர் பெற்றது. (தங்கு+ஆல+மலை - தங்கிய மரம் கல்லாகிய மலை). பிரளய காலத்தில் திருமால் தங்கிய ஆல இலையின் அம்சமாகவே இம்மலை கருதப்படுகிறது.

"மங்காத வளத்த வளத்திவிலடற்பட வரவமன்னனோடு
சிங்காரவடவிடவி வாதியற்றித் தாழ்ந்து பின்னர்ச்
செய்தவத்தால்
சங்காழிக் கரனிருக்க நிற்கவிருகண் வளரத் தானமான
தங்காலவரை எனச் சேகேத்திரத் திலார்த்தவகை"

(தலபுராணம்)

### தீர்த்தங்கள்:

இப்பகுதியில் ஐந்து தீர்த்தங்கள் உள்ளதாகத் தல வரலாறு விளம்புகிறது. திருக்கோயிலுக்கு அருகேயுள்ள பாபநாச தீர்த்தம் புனிதம் மிகுந்தது. சப்தரிஷிகளின் அறிவுரையின் பேரில் நம்நாட்டிலுள்ள 61 முக்கிய நதிகள் இத்தீர்த்தத்தில் சங்கமமாகிப் பாவங்களிலிருந்து விடுதலை பெற்றதாகத் தலவரலாறு செப்புகிறது.

ஊருக்குக் கிழக்கே பாஸ்கர தீர்த்தம் உள்ளது சிந்து மாமுனிவரின் மகளான விகுருதி என்பவளைச் சண்டகோஷன் என்ற அசுரன் பலாத்காரமாகத் தூக்கிச் சென்றான். விகுருதியைக் காப்பாற்றச் சூரியன் முனைந்தபோது தற்செயலாக ஒரு வேதியன் உயிரிழந்தான். இதனால் ஆதவன் பிரம்மஹத்தி தோஷத்திற்கு உட்பட்டான். தனது குறைநீங்கும் பொருட்டு ஆதவன் ஏற்படுத்திய தீர்த்தமே பாஸ்கர தீர்த்தமாகும். பாண்டவர்களின் வனவாசத்தின்போது இங்கு வந்த அருச்சுனன் தனது கணையால் உண்டாக்கிய நதியே அருச்சுன தீர்த்தமாகும்.

இன்று அருச்சுன நதி என்ற பெயருடன் ஊருக்கு வடக்கே ஓடுகிறது இவை தவிர சங்கதீர்த்தம், பதுமதீர்த்தம் ஆகிய புனிதப் புனல்களும் இத்தலத்திலே உள்ளன.

இக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் படியெடுக்கப் பட்டுள்ளன. கி.பி. 1032ம் ஆண்டு கல்வெட்டில் மூலவர் 'திருவேங்கட நிலைப் பெருமானடிகள்' என்று குறிப்பிடப்பட்டுள்ளார். பதின்மூன்றாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் இங்குள்ள இறைவர், 'திருத்தண்கால் மலையில விரும்பி எழுந்துள்ள பரமஸ்வாமி என்று குறிப்பிடப்பட்டுள்ளார். கருநிலக்குடி நாட்டிலுள்ள தேவதானமாக இவ்வூர் விளங்கியது. இங்குள்ள ஏரி 'தேவேந்திர வல்லபப் பேரேரி' எனப்பட்டது. பதின் மூன்றாம நூறறாண்டில் மாறவாமன் குலசேகர பாணடியன் காலத்தில் இக்கோயிலில் சிங்கப் பெருமாளுக்கு (நரசிம்மர்) ஒரு சந்நிதி கட்டப்பட்டது. திருவரங்கதேவன் எனபவனின் இரு புத்திரர்கள் மேற்குப் பிரகாரததில் திருவேஙகடதேவன் மண்டபத்தைக் கட்டுவிததனர். 1220ம் ஆண்டில் இவ்விரு சகோதரர் களும் ஒரு மடத்தை நிறுவி அதில் இராமாயணம், மகா பாரதம புராணங்கள் ஆகியன படிக்க மானியஙகள் வழஙகினர் சுநதரபாண்டியன் பெயரால் பல விசேட பூஜைகள் நடத்தப்பட்டன 1227ம் ஆண்டில் சுந்தரபாணடியனின் மந்திரியான குருகுலத்தரை யன் இக்கோயிலில் கருவறை, அர்த்த மண்டபம், மகாமணடபம் ஆகியவற்றைக் கட்டினான். ஜடாவர்மன் குலசேகரன் காலத்தில் திருமங்கை ஆண்டாள் எனும் பெண்மணி கர்மர்ச்சனை எம்பெருமான், தேவியர் ஆகி யோரின் உலோகத் திருமேனிகளை ஆலயத்தில் நிறுவினாள். அமாவாசை தினத்தன்று இக்கோயிலில் உற்சவா உலாச் செல்வது பற்றிய கல்வெட்டு ஒன்றை மறுபிரதி எடுதத பினனர் அக்கல்வெட்டு எழுதப்பட்ட பாறை தகர்க்கப்பட்டது. இங்ஙனம் இக்கோயில் பாண்டி யர்கள் காலத்தில் பிரசித்தி பெற்றிருந்ததாக அறியலாம்.

சுற்றுப்புறத்திலுள்ள கிராம மக்களின் உதவியுடன் பிற்காலததில் பல பகுதிகள் விரிவு படுத்தப்பட்டன.

சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்னர் செங்கமல நாச்சியா புரத்தைச் சேர்ந்த இராமானுஜதாசர், நாராயணதாசர் எனும் இரு தனவந்தர்கள் மணவாள முனிகள் சந்நிதி, கலியாண மகா மண்டபம், வெளிப்புற மண்டபங்கள், கருட மண்டபம் ஆகியவற்றைக் கட்டினர். ஊர்மக்கள் உதவியுடனும், சில பக்தர்களின் கைங்கரியத்தாலும தினப்பூஜைகள் (நான்கு காலம்) வைகானச ஆகமத்திற்கு ஏற்ப, தென்னாசாரிய சம்பிரதாயத்தின்படி நடை பெற்று வருகிறது.

சித்திரையில் 5 நாட்களுக்குப் பௌர்ணமி உற்சவம் நடைபெறும். சித்திரை பௌர்ணமியன்று காலை 5 மணிக்குப் பெருமாள் எழுந்தருளி அருச்சுன நதியில் குதிரை வாகனம் கண்டருளி அண்மை ஊர்களுக்குச் சென்று திரும்புவார். வைகாசியில் பத்து நாள் வசந் தோற்சவமும், ஆவணி ஸ்ரீ ஜெயந்தி, உறியடி, பவித்ரோற்சவம், ஆகியனவும், புரட்டாசியில் கருடோற் சவமும், நவராத்திரியும், ஐப்பசியில் தீபாவளி, மணவாள முனிகள் திருநாள், பிள்ளைலோகாச்சாரியார் உற்சவம் (10 நாட்கள்) ஆகியனவும், கார்த்திகையில் கார்த்திகை சொக்கப்பனையும், திருமங்கையாழ்வார் திருநாளும், மார்கழியில் வைகுண்ட ஏகாதசியும், கூரத்தாழ்வார் திருநாள் விழாவும் (10 நாட்கள்), பங்குனியில் திருக் கலியாண உற்சவமும் இக்கோயிலில் கொண்டாடப்பட்டு வந்தன ஆடிப்பூரத்தின் ஐந்தாம் நாள் பெருமாள் ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளி விழாக் காணுவது உண்டு

இங்கு ஆலமரமே தலவிருக்ஷமாகும். இத்தலம் ரிஷி யால் ஏற்படுத்தப்பட்டதால் ஆர்ஷம் என்ற வகையைச் சார்ந்தது. 1979 ஆண்டில் பெய்த பெருமழையில் 120 அடி நீளமும், 30 அடி உயரமும் உள்ள வடபுற மதிற்சுவர் இடிந்துவிட்டது. இதனைச் செப்பனிட்டும், துவஜஸ் தம்பம், தளவரிசை, மண்டபங்கள் ஆகியவற்றைப் புதுப் பித்தும் திருப்பணிகள் நடைபெற்றன.

பாண்டி நாட்டில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்ற 18 பதிகளுள் திருத்தண்காலும் ஒன்று. இத் தலத்தின் மீது பூதத்தாழ்வார் ஒரு பாசுரமும், திருமங்கையாழ்வார் நான்கு பாசுரங்களும் பாடியுள்ளனர். எதிரிகளை வெற்றி கொள்ளும் எம்பெருமானுக்கு உகந்த திருத் தலங்களுள் அன்பர்களின் நெஞ்சம், தஞ்சை மாமணிக் கோயில், திருவரங்கம், திருத்தண்கால், திருப்பதி, மாமல்லை, குடந்தை, திருக்கோவலூர், திருப்பாற்கடல் ஆகிய ஒன்பது இடங்களும் அதிகச் சிறப்பு மிக்கன என்று பூதத்தாழ்வார் செப்புகிறார்.

தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்
தமருள்ளும் தண்பொருப்புவேலை—தமருள்ளும்
மாமல்லை கோவல் மதிட்குடந்தை யென்பரே
ஏவல்ல எந்தைக்கிடம் (பூதத்தாழ்வார்)

திருமங்கையாழ்வாரின் பாடல்களில் நாயகி, தாய் ஆகிய இருவரின் நெஞ்சங்களும் வெளிப்படுகின்றன.

108 திருப்பதி அந்தாதி அருளிய திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் பாடலும் தலைவனைப் பிரிந்ததலைவியின் நிலையில் அமைந்துள்ளது.

"மாறுபட வாடை எனும் வன்கால் வந்தென் முலைமேல்
ஊறுபட ஊர்ந்த உளைவெல்லாம்—மாறத்
திருத்தண்கால் ஊரான் திருத்தண்துளாயின்
மருத்தண்கால் ஊராதோ வாய்ந்து"

பிரம்மாண்ட புராணத்தின் தமிழாக்கமான தலவரலாற்று நூல் பரிதாபி ஆண்டு தை மாதம் 5ம் நாள் வெள்ளிக் கிழமை வெளியாயிற்று. இத்தலம் பற்றிய வடமொழி ஓலைச் சுவடிகள் கிடைக்கவில்லை.

குன்றின் மறுபுறத்தில் ஒரு சிவாலயம் உள்ளது. இக்கோயிலில் இலிங்கவடிவில் அருள்பாலிக்கும்

மூலவருக்குக் கருநெல்லிநாதர் என்று பெயர். இங்கு எழுந்தருளியுள்ள அம்மனின் திருநாமம் மீனாட்சி. இக் கோயில் குடைவறைக் கோயிலாக அமைந்துள்ளது. விநாயகர், தட்சிணாமூர்த்தி, சந்திரன், சூரியன் ஆகியோருக்கு உட்புறத்தில் இடம் அளிக்கப்பட்டுள்ளது. நடராஜர், சிவகாமியம்மன் ஆகியோரின் திருவுருவங்கள் கருங்கல்லால் செய்யப்பட்டுள்ளன. குன்றின் உச்சியி லுள்ள மேல் தளத்தில் முருகப்பெருமான் பழனி யாண்டவர் போல ஆண்டிக்கோலம் தாங்கியுள்ளார். இங்கு கருநெல்லி மரமே தலவிருட்சமாகும்.

இக்கோயிலை மாறவர்மன் சுந்தரபாண்டியனின் அமைச்சரான குருகுலத் தரையன் 1233ம் ஆண்டில் கட்டியதாகக் கல்வெட்டு இயம்புகிறது. ஒரு படை யெடுப்பின் போது உயிர்நீத்த 'உள்ளி பொம்மன் காலங்காத கண்ட நாயக்கர்' என்பவரின் உருவம் சிற்ப வடிவில் இக்கோயிலில் இடம் பெற்றுள்ளது. அவரது தியாகத்திற்குப் பரிசாகத் திருத்தங்காலும், அதனைச் சுற்றியுள்ள பகுதிகளும் (இரத்தக்காணியாக) அளிக்கப் பட்டன. இக்கோயிலிலும் நான்கு கால வழிபாடு நடை பெறுகிறது

திருத்தங்கால் மிகப் பழமைமிக்க ஊராகும். சிலப்பதிகாரத்திலுள்ள கட்டுரைக் காதையில் மதுரா புரித் தெய்வம் கண்ணகிக்கு ஆறுதல் கூறும்போது அவளது பழம்பிறப்பை எடுத்துரைக்கிறாள். அப்பகுதி யில் பராசரன் என்ற அந்தணனின் சரிதம் இடம் பெற்றுள்ளது. சோழ நாட்டிலிருந்து சேரநாடு சென்று பரிசில் பெற்றுத் தனது நாட்டிற்குத் திரும்பும்போது பராசரன் திருத்தங்கால் என்ற ஊரில் தங்கினான். அப்போது பல அந்தணச் சிறுவர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டனர். திருமறைகளை முறையாக ஓதும் சிறுவனுக்குப் பரிசில்கள் தருவதாகப் பராசரன் உரைத்தான். வார்த்திகன் என்பானின் மகனான தட்சிணாமூர்த்தி என்பான் மறைகளை நன்கு ஓதியதால்

பராசரன் அவனுக்குப் பரிசுகள் அளித்தான். வார்த்திகன் மீது பொறாமைகொண்ட சில அலுவலகர்கள் அரசனிடம் பொய்ப் பிரசாரம் செய்து வார்த்திகனைச் சிறையி லடைக்கச் செய்தனர். வார்த்திகனின் மனைவியான கார்த்திகை என்பாள் இந்த அடாத செயலை நினைத்துப் புலம்பினாள். அப்பத்தினிக்கு இரங்கிய கொற்றவை தனது கோயிற்கதவுகளை மூடிக் கொண்டாள். உண்மையை உணர்ந்த அரசனும் அந்தணனிடம் மன்னிப்புக் கோரினான். திருத்தண்கால், வயலூர் ஆகிய ஊர்களை அந்தணனுக்குப் பரிசாக வழங்கினான்.

கருநெல்லி ஆண்டவர் ஆலயத்தை ஒட்டி தென் புறத்தில் பழநி தண்டாயுதபாணியின் சந்நிதி உள்ளது. இதனைக் கட்டியவர் ஆறுமுகத் தம்பிரான் என்ற அடியார். காவடி ஏந்தியவாறு தனது மகளின் துணை யுடன் ஒரே நாளில் அதிகாலை திருத்தண்காலிலிருந்து கிளம்பிக் கால்நடையாகவே சென்று பழநியாண்டவனை வழிபடுவது அவரது வழக்கம். வயதாகிவிட்ட பின் அவரால் எளிதில் செல்ல முடியவில்லை. தனது இயலாமையை முருகனிடம் தெரிவித்தார். முருகன் அருளியவாறு மறுமுறை இயன்ற அளவு நடந்து சென்றார். களைப்பு மேலிட்டபடியால் உணவு சமைக்க முற்பட்டார். அவர் சமைக்கும் போதே ஏராளமான பொற்காசுகளை முருகர் வழங்கினாராம். அப்பொருட் களைக் கொண்டே ஒரு மலைக்கோயிலைக் கட்டி அதில் பழநியாண்டவரின் திருவுருவத்தை அவர் நிறுவினார். ஆறுமுகத் தம்பிரான் சித்தியடைந்த மடமும், அவர் பயன்படுத்திய பொருட்களும் திருத் தங்காலின் எல்லையில் உள்ளன. ஆண்டுதோறும் தைப் பூசத்தன்று அங்கு அன்னதானமும், பூசையும் நிகழும்.

இத்தலத்தில் சிங்காரத் தோப்பு சக்தி மாரியம்மன் கோயில், மாதாங்கோயில், ஐயா நாராயணசாமி கோயில், போன்ற பல ஆலயங்களும் உள்ளன.

# 14. திருவிடவெந்தை

*(செங்கை-அண்ணா மாவட்டம்)*

## நித்ய கல்யாணப் பெருமாள் திருக்கோயில்

முற்காலத்தில் மேகநாதன் எனும் அசுரவேந்தன் அரசாண்டு வந்தான். மேகநாதனுக்குப்பின் அரியணை ஏறிய அவனது மகன் பலி என்பான் நீதி நெறி வழுவாமல் பெரும் புகழுடன் அரசாட்சி செலுத்தி வந்தான். மாலி, மாலியவான், ஸுமாலி ஆகிய மூன்று அசுரர்களும், வானவர்களுடன் போரிடச் சென்றபோது பலியின் துணையை நாடினர். பலி அவர்களுக்கு உதவியளிக்க ஒப்புக் கொள்ளவில்லை. தேவர்களுடன் ஏற்பட்ட போரில் அசுரர்கள் படுதோல்வியுற்றனர். தமது குலத்தைக் காப்பாற்றுமாறு அவுணர்கள் பலியிடம் தஞ்சமடைந்தனர். வேறு வழியின்றி அசுரர்களுக்கு உதவ பலி ஒப்புக்கொண்டு தேவர்களை விரட்டியடித் தார். வானவர்களுடன் போரிட்டது தவறு என்று உணர்ந்த பலி அந்தப் பாவத்திற்குக் கழுவாய் தேட முனைந்தான். வராக தீர்த்தம் எனும் புண்ணியப் புனலின் கரையில் கடுந்தவம் புரிந்து நாராயணனைத் தொழுதான். அவனது உள்ள உறுதியை மெச்சிய திருமால் வராகமூர்த்தியாக, வராக தீர்த்தத்தினின்று வெளியேறி அசுரனுக்கு அனுக்கிரகம் புரிந்தார். அதே வராக ரூபத்தில் அங்கு ஒரு கோயிலில் எழுந்தருளினார்.

இவ்வாறு திருமால் வராக மூர்த்தியாகச் சேவை சாதிக்கும் தலமே திருவிடவெந்தையாகும். இன்று திருவிடந்தை என்ற பெயருடன் இவ்வூர் காட்சியளிக்கிறது. இவ்வூர் சென்னை - மாமல்லபுரம் சாலையில் (வழி-கோவளம்) அமைந்துள்ளதால் பேருந்துகள் மூலமாக இதனை அடையலாம். சென்னையிலிருந்து சுமார் 40 கி மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

பரத கண்டத்தில் சரஸ்வதி நதிக்கரையில் குனி என்ற முனிவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு ஒரு கன்னிப் பெண் பணிவிடை புரிந்து வந்தாள். முனிவர் தனது ஆயுட்காலம் முடிவுற்றவுடன் மேலுலகம் சென்றார். முனிவரின் மறைவால் நிராதரவாக விடப்பட்ட கன்னி வானுலக வாழ்வை நாடித் தவமியற்றினாள். இல்லறத்தில் ஈடுபட்டுப் புத்திரப்பேறு அடையாதவர்களுக்கு வானுலக வாழ்வு கிடைக்காது என நாரத முனிவர் அப்பெண்ணிடம் உரைத்தார். தனக்கு ஏற்ற கணவனைத் தேடி அப்பெண் சென்றாள். அப்பகுதியில் வசித்து வந்த முனிவர்கள் எவரும் அவளை வாழ்க்கைத் துணைவியாக ஏற்க முன்வரவில்லை. இறுதியில் காலவர் எனும் முனிவர் அப்பெண் மீது இரக்கம் கொண்டு அவளை மனைவியாக ஏற்றுக் கொண்டார். முனிவரின் குணத்திற்கு ஏற்றவாறு அனுசரித்து அப்பெண் நடந்து கொண்டாள். தெய்வ சங்கல்பம் காரணமாக அத்தம்பதியருக்குத் திருமாலின் அம்சத்தில் உதித்த 360 பெண் மக்கள் பிறந்தனர்.

பெண்கள் பிறந்தவுடன் அவர்களது தாயார் மேலுலகு சென்றார். 360 பெண் குழந்தைகளை மிக்க கஷ்டத்துடன் காலவர் வளர்த்து வந்தார். அபபெண்களும் திருமண வயதடைந்தனர். அவர்களுக்கு மணவாளனைத் தேடும் பொறுப்பு காலவரிஷிக்கு ஏற்பட்டது. விசேட காலத்தில் சரஸ்வதி நதியின் கரையில் நீராடப் பற்பல பகுதிகளிலிருந்தும் அந்தணர்

கள் வந்திருந்தனர். அவர்களிடம் தனது நிலையைக் காலவரிஷி எடுத்துரைத்தார். வாகமலீபுரி எனும் திருவிடவெந்தைக்கு வந்தால் முனிவரின் துன்பம் நீங்கும் என்று சில தவசியர் கூறினர். அவ்வாறே காலவரும் தனது குழந்தைகளுடன் தென்திசை நோக்கிப் பயண மானார். திருவல்லிக்கேணியில் கோயில் கொண்டுள்ள பார்த்தசாரதியையும், நரசிம்மரையும் தரிசித்த பின்னர் அமைதியான சூழலில் அமைந்துள்ள திருவிடவெந்தையை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள வராக மூர்த்தியைத் துதித்துப் பாடினார். பலி என்ற அசுர ராஜனுக்கு வராகமூர்த்தி அருளிய வரலாற்றை யறிந்தார்.

தனது புத்திரிகளுக்கு ஏற்ற மணவாளனை அனுப்பு மாறு தினமும் வராக மூர்த்தியை இறைஞ்சி வந்தார். ஒருநாள் மகாவிஷ்ணுவே ஒரு பிரம்மச்சாரி வடிவம் பூண்டு காலவரிஷியைச் சந்தித்தார். திருமால் எழுந் தருளியுள்ள திருத்தலங்களைத் தரிசிக்கவே வந்துள்ள தாகவும், தான் காசியப கோத்திரத்தைச் சேர்ந்தவன் எனவும் பிரம்மச்சாரி கூறினார். காலவ முனிவரின் 360 புத்திரிகளையும் திருமணம் புரிந்து கொள்ளவும் அவர் சம்மதித்தார். தினமும் ஒரு பெண் வீதம் 360 பெண் களையும் மணம் செய்து கொண்டார். பின்னர் 360 மங்கையரையும் ஒன்றாகத் திரட்டி ஒரே நாச்சியாராக உருவம் அளித்தார். அந்த நாச்சியாரைத் தனது இடது பக்கத்தில் அமர்த்தியவாறு அம்மங்கையின் முகமாக அனைவருக்கும் ஞானோபதேசம் செய்வித்தார். 360 கன்னிகையரும் ஒருங்கே சேர்ந்து ஓர் உருவானதால் அவருக்கு அகிலவல்லி நாச்சியார் என்ற திருநாமம் ஏற்பட்டது. நாள்தோறும் ஒரு பெண் வீதம் 360 நாட்களுக்கு 360 கன்னியரைத் திருமணம் செய்து கொண்டபடியால் பெருமானுக்கு 'நித்ய கல்யாணப் பெருமாள்' என்று மறுதிருநாமம் தோன்றியது. நித்ய கல்யாணப் பெருமாள் வாசம் செய்யும் தலம் நித்ய

கல்யாணபுரி எனப்பட்டது. பெரிய பிராட்டியார் திரு அவதாரம் செய்து வாழ்ந்த இடம் ஆகையால் ஸ்ரீபுரி என்ற பெயரும் இவ்வூருக்கு உண்டாயிற்று திருமால் வராகமூர்த்தியாகவே காட்சியளிக்கும் இத்தலம் வராஹபுரி எனவும் அழைக்கப்பட்டது. திருமால் பிராட்டிக்கு இடது பக்கத்தில் இடம் அளித்துள்ளதால் திருஇடவெந்தை என்ற பெயர் இத்தலத்திற்கு நிலைத்தது. திருமால் ஏற்றுக்கொண்ட 360 பெண்களுள் முதல் கன்னிகைக்குக் கோமளவள்ளி என்று பெயர். இதற்கேற்ப தனிக்கோயிலில் வீற்றிருக்கும் தாயாருக்குக் கோமளவல்லி என்ற திருநாமம் உண்டாயிற்று.

இந்த வரலாற்றில் பொதிந்துள்ள தத்துவம் பெரு வகையளிப்பது. சிற்றின்பங்களில் அளவு கடந்து சிக்காமல் பேரின்பத்தை நாட வேண்டும் என்று ஆன்றோர்கள் வகுத்த நெறிகள் செப்புகின்றன. தர்மத தின் தலைவனாகத் திகழும் எம்பெருமானே அவற்றில் ஈடுபடும் போது சிற்றினபங்கள் தங்களது நிலை களினின்று உயர்ந்து பேரின்ப நிலையை அடைந்து விடுகின்றன. உலகிற்கு தர்மக் கோட்பாடுகளை விதித்த எம்பிரான் அவற்றினின்று தான் மட்டும் விலகுவதில்லை. தர்மங்களும், நியதிகளும் மனிதனுக்கும், இறைவனுக்கும் ஒன்று என்பதையே நமது சமய நூல்கள் தெளிவுறுத்து கின்றன. காலவரிஷியை இறைவன் அஞ்ஞானத்தில் மூழ்கச் செய்ததன் விளைவாக அவர் 360 பெண்களுக்குத் தந்தையானார். முனிவரை அஞ்ஞானத்தில் மூழ்கச் செய்த திருமால் அதினின்று மீளவும் வழிகாட்டத் தயங்க வில்லை. அவரே முனிவர் வடிவில் தோன்றி அப்பெண் களை மணந்தார்.

கண்ணன் கோபியர்களுடன் விளையாடியதும், எட்டு பத்தினிகளை ஏற்றதும், நித்ய கல்யாணப் பெருமாளாக 360 பெண்களைத் திருமணம் புரிந்து கொண்டதும், எதைக் காட்டுகிறது? கண்ணனுடன் மங்கையர்கள் சங்கமமாவதால் பேரின்பம் அடைவது பெண்களே

யன்றிக் கண்ணன் அல்ல இதுவே ஜீவாத்மா, பரமாத்மா தத்துவத்தின் விளக்கம்.

ஜீவன்களைத் தன்னிடம் லயிக்கச் செய்து அவற்றிற்கும் பேரின்பம் அளிப்பது பிரம்மத்தின் செயல், பிரம்மம் எதிலும் ஈடுபடாமல் நிலையாகவே நிற்கும். பரமாத்மாவிடம் ஜீவன்கள் ஒன்றாகக் கலக்கின்றனவே தவிர பரமாத்மா எதிலும் கலப்பதில்லை. ஒவ்வொரு நாளும் ஒரு பெண்ணைத் திருமால் ஏற்றது ஒரு அடையாளமே ஆகும் இறைவன் பிறக்கும் உயிர்கள் அனைத்தையும் ஏற்று அவற்றின் நாயகனாக விளங்குவதையே இச்சம்பவம் குறிப்பிடுகிறது.

திருமால் நித்யகல்யாணப் பெருமாளாக வாசம் செய்யும் இத்திருத்தலத்தில் உள்ளன்புடன் வழிபடும் ஆண்களுக்கும், பெண்களுக்கும் அவர்கள் விரும்பிய வாறே திருமணம் நடக்க வேண்டும் என்பது காலவ முனிவர் உலக நன்மைக்காகப் பெற்ற வரம். அவ்வாறே திருமணம் நிறைவேற வேண்டும் என்ற நோக்கத்துடன் இங்கு கணக்கற்ற இளைஞர்களும், யுவதிகளும், பெற்றோர்களும் நித்ய கல்யாணப் பெருமாளை வழிபடுகின்றனர் இஷ்டசித்தி அடைந்தவர்கள் கல்யாண உற்சவமும் நடத்தி மகிழ்கிறார்கள்.

இக்கோயிலில் நிலம் கோட்டிடைக் கொண்ட ஞானப் பிரானான ஆதி வராகமூர்த்தி மூலவராகக் காட்சியளிக்கிறார். கிழக்கே திருமுக மண்டலம்; நின்ற திருக்கோலம்; ஆதிசேடனால் தாங்கப்பெற்ற இடது பக்கத் திருத்தொடையில் அகிலவல்லித் தாயாரை ஏந்திய வாறு இப்பெருமான் அளிக்கும் சேவை பக்தகோடிகளுக்குப் பேரானந்தம் அளிக்கவல்லது. அவரது திருவடிகளுள் ஒன்று பூமியில் பதிந்துள்ளது. மற்றொன்று ஆதிசேடன், அவன் பத்தினி ஆகிய இருவரின் திருமுடிகளையும் தொடுமாறு அமைந்துள்ளது. அவர் சந்நிதி மீதுள்ள விமானம் கலியாண விமானம் என்றும், யக்ஞ

விமானம் என்றும் அழைக்கப்படும். நித்ய கல்யாணப் பெருமாளும், கோமளவல்லித் தாயாரும் (உற்சவர்) திருக்கல்யாண அவசரத்தில் இங்கு எழுந்தருளியிருப்ப தாக ஐதிகம் உண்டு. இவ்விருவர் திருமேனியிலும், நாடையிலும் பொட்டு இயற்கையாகவே அமைந்துள்ள தாக நம்பப்படுகிறது இங்கு "குலங்கெழு கொல்லி கோமளவல்லி" என்ற தனிக்கோயில் தாயாரையும் தரிசிக்கலாம். கல்யாண புஷ்கர்ணி, வராஹ புஷ்கர்ணி ஆகிய இரண்டும் இங்குள்ள புண்ணிய தீர்த்தங்கள் ஆகும்.

திருவிடவெந்தைக்கு அருகேயுள்ள கடல்மல்லை எனப்படும் மாமல்லபுரத்திலுள்ள வராகமூர்த்தி கோயிலில் மூலமூர்த்தியான வராகப்பெருமான் பிராட் டியை வலப்பக்கத்தில் தாங்கியுள்ளதால் அத்தலத்திற்குத் திருவலவெந்தை என்ற பெயர் உள்ளதாகக் கருதுவர். திருக்கடல் மல்லையில் அரசாட்சி புரிந்து வந்த உறரி சேகரன் என்ற அரசன் நாள்தோறும் உச்சிக்காலத்தில் திருவிடவெந்தை சென்று நித்யகல்யாண வராகமூர்த் தியைத் தொழுது போற்றி வந்தார். பின்னர் ஊருக்குத் திரும்பித் திருவாராதனை முடித்த பிறகே பகல் உணவைப் பூசிப்பார். உறரிசேகரனின் பக்தியின் சிறப்பை உலகோரும் உணர வேண்டும் என வராக மூர்த்தி திருவுளம் கொண்டார். ஒரு நாள் வராகமூர்த்தி வயோதிகக் கோலத்திலுள்ள அந்தணராக மாறினார். பூமாதேவி ஒரு சிறு பெண்ணாக மாறிக் கிழவேதி யருக்குத் துணையாகச் சென்றார். அரசர் திருவிடந் தைக்குக் கிளம்பும் வேளையில் வயோதிகர் அவரைச் சந்தித்துப் பசியாற உணவு அளிக்குமாறு வேண்டினார். தான் திருவிடந்தை சென்று வரும் வரை பொறுத்துக் கொள்ளுமாறு அரசர் கூறியதை வயோதிக வேதியர் ஏற்றுக் கொள்ளவில்லை. வேறு வழியின்றி வயோதி கரையே வராகமூர்த்தியாகப் பாவித்து உபசரித்த பின் அவருக்கே திருவாராதனையும் மன்னன் அளித்தான். ஹரிசேகரனின் பக்தியைக் கண்டு திருப்தியடைந்த

வராகமூர்த்தி, பூமிதேவியை வலப்பக்கத்தில் தாங்கியவ ராகக் காட்சியளித்து அரசனுக்கு ஞானோபதேசம் செய்வித்தார் மாமல்லையில் ஞானப் பிரானாகவே கோலம் கொண்டுள்ள வராகப் பெருமான் நடத்திய இத்தெய்வீக விளையாட்டைத் திருமங்கையாழ்வார் தனது கடல்மல்லைப் பாசுரத்தில் போற்றிப் பரவுகிறார்.

"ஏனத்தினுருவாகி நிலமங்கை யெழில் கொண்டான்
வானத்தி லவர் முறையால் மகிழ்ந்தேத்தி வலங் கொள்ள
கானகத்தின் கடல்மல்லைத் தலசயனத் துறைகின்ற
ஞானத்தி னொளியுருவை நினைவார் என் நாயகரே"

வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த திருவிடவெந்தை ஆலயத்திலுள்ள கல்வெட்டுக்கள் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினரால் படியெடுக்கப் பட்டுள்ளன. (1910ம் ஆண்டு படியெடுக்கப்பட்டு 258 முதல் 283 என எண் அளிக்கப்பட்டுள்ளன) கல்வெட்டில் இவ்வூர் ஜெயங் கொண்ட சோழ மண்டலத்துக் கலியாணபுரங்கொண்ட சோழ கோட்டத்துப் படுவூர் நாட்டில் உள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வூர் அசுர குல கால நல்லூர் எனவும் வழங்கப் பட்டது. விஜயராஜேந்திர சோழ தேவனின் முப்பத்தைந்தாவது ஆட்சியாண்டில் (கி. பி 1052) திருவிடவெந்தை கிராமம் பெருமாளுக்குத் தேவதானமாக அளிக்கப்பட்டது. மன்னனின் பிறந்த நாளாகிய பூரநட்சத்திரத்தன்று ஆண்டு தோறும் திருவிழா நடத்த வேண்டும் என்ற அரசனின் கட்டளை யையும் இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. முதலாம் இராஜராஜ சோழனின் 19ம் ஆட்சியாண்டில் (கி பி 1003) எழுதப்பட்ட கல்வெட்டு மூலம் திருவிடவெந்தையில் பங்குனி உத்திர நாளிலிருந்து ஒன்பது நாட்களுக்குத் திருவிழா நடத்தவும், ஒரு திரு நந்தா விளக்கு ஏற்றவும் முப்பது கழஞ்சு பொன்னை மூலதனமாக அளித்த செய்தியை அறியலாம். இக்கொடையை அளித்தவர்

திருவொற்றியூர் வணிகர் அதிகை உத்தம செட்டியார் என்பவர். 1013ம் ஆண்டில் பொறிக்கப்பட்ட மற்றொரு கல்வெட்டும் அந்தணர்களுக்கு உணவளிக்க நிவந்தனம் ஏற்படுத்தப்பட்டதாகச் செப்புகிறது.

முதலாம் இராஜராஜசோழனின் பிறந்த தினமான ஆவணி சதய நாளை ஈறாகக் கொண்டு ஏழு நாட்களுக்குத் திருவிழா, திருமஞ்சம், திருப்பாவாடை முதலிய சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்ததாக அம்மன்னனின் 17ம் ஆட்சியாண்டில் (கி. பி 1001) எழுந்த கல்வெட்டு தெரிவிக்கிறது மாசி மாதத்தில் கும்ப ராசியில் சூரியன் தங்குகின்ற 30 நாட்களும் வராக தீர்த்தத்தில் நீராடி வழிபடுவோர்க்கு உயர்ந்த பேறு அளிப்பதாக வராகப் பெருமாள் பலி என்ற அரசனுக்கு வரம் அளித்திருந்தார் அந்த முப்பது நாட்களும் பலர் இவ்வூரில் தங்கி தீர்த்தத்தில் நீராடிப்பூசிப்பது வழக்கமாயிருந்தது. இந்த 30 நாட்களிலும் அந்தணர்களுக்கு உணவளிக்க மூலதனம் ஏற்படுத்திய செய்தியை முதலாம் இராஜராஜனின் 19வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூலம் அறியலாம்.

மலைநாட்டிலுள்ள கொடுங்கோளூரைச் சேர்ந்த ஒரு வியாபாரி கொடையாக அளித்த 15 கல நெல்லை முதலீடாகக் கொண்டு ஆண்டுதோறும் 24கலம் 2 தூணி, 1 படக்கு நாழி ஆகியவற்றை வட்டியாகக் கொடுக்க ஊர்ச்சபையோர் ஒப்பந்தம் செய்தனர். ஒரு வியாபாரி 15 கழஞ்சு நெல்லைக் தானமாக அளித்தார். அதிலிருந்து பெறும் வட்டியைக் கொண்டு நாள்தோறும் விளக்கு எரிக்க ஒரு உழக்கு எண்ணெய் அளிக்கப்பட்டது. இந்த ஒப்பந்தத்தை மீறுவோர் நீதிவல்லுனர் குழுவிற்கு 8¼ கானம் அபராதம் செலுத்த வேண்டும் என்ற ஒப்பந்தம் மேற்கொள்ளப்பட்டது. ஆலயத்தில் நடைபெறும் வழிபாடுகளை நிர்வகிக்க 'உண்ணாழிகைவாரியம்'' என்ற குழு அமைக்கப்பட்டது. கும்பம் மாதத்தில் முப்பது

நாட்களுக்கும் 12 அந்தணர்களுக்கு உணவு வழங்குவதற்காக மலைநாட்டு வணிகன் ஒருவன் 16½ கழஞ்சு பொன் அளித்தான். 12 அந்தணர்களுக்கு நாள்தோறும் அளிக்க வேண்டிய உணவு வகைகள், அவற்றிற்கான செலவு ஆகிய முழு விவரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. ஆலயத்தில் விளக்கு ஏற்ற 90 நாழி எண்ணெய் வழங்குவதற்காக 30 கழஞ்சு பொன் ஒரு வணிகனால் அளிக்கப் பட்டது அவ்வாறு எண்ணெய் அளிக்கப்படாவிட்டால் சம்பந்தப்பட்டோர் நீதிவல்லுனர்குழுவிற்கு 4¼கானமும், அரசருக்கு ஒரு மஞ்சாடியும் அபராதமாகச் செலுத்த வேண்டும். இராஜராஜசோழனின் பிறந்தநாளை முன்னிட்டு நடைபெறும் ராஜராஜதேவர் திருநாள் என்ற பன்னிரண்டு நாள் திருவிழாவை மீனவர் குடியைச் சேர்ந்த 12 பிரிவுகளும் இணைந்து கொண்டாடினர். ஒவ்வொரு குடும்பத்தினரும் கடலில் மீன்பிடித்தல், ஆடை நெய்தல் ஆகிய தொழில்கள் மூலம் பெற்ற வருவாயிலிருந்து 3/4 கழஞ்சு பொன்னை இந்த விழாவிற்காகச் செலுத்தினர். இந்த ஒப்பந்தம் நாடு கண்காட்சி, நாடுவகை ஆகிய அதிகாரிகள் முன்னிலையில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

திருவிடவெந்தையில் திருமங்கையாழ்வாரின் நினைவாக அமைக்கப் பட்டிருந்த 'கலிச்சிங்கன் மடத்தில்' அமாவாசை தோறும் வேதியர்களுக்கு உணவளிக்கப் பட்ட செய்தியைக் குலோத்துங்க சோழனின் 45ம் ஆட்சியாண்டில் (கி. பி. 1115) எழுதப்பட்ட கல்வெட்டு மூலம் அறியலாம்.

வராகப் பெருமாள் கோயிலிலுள்ள கல்வெட்டுக்கள் இது போன்ற உபயோகமான தகவல்கள் பலவற்றை அளிக்கின்றன. மார்கழி மாதம் ஏகாதசி நாளன்று திருவாராதனை செய்விக்கப்பட்டவுடன், வராகமூர்த்தி, நாச்சியார் ஆகியோருக்குத் திருவமுது அளிக்கவும், நந்தா விளக்கெரிக்கவும், நிலம் அளிக்கப்பட்டது.

கேரள நாட்டைச் சேர்ந்த சில வியாபாரிகள் தீப கைங்கர்யத்திற்காகப் பொன்னை காணிக்கையாகச் செலுத்தினர் தையூர் என்ற ஊரைச் சார்ந்த அந்தணர்கள் சிலர் மணவாளப் பெருமாளின் படிமத்தைப் பிரதிஷ்டை செய்து, அதற்கு வழிபாடுகள் நடைபெறவும் வழிவகுத்தனர்.

ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ள திவ்விய தேசங்கள் 108; அவற்றுள் 22 பதிகள் தொண்டை நாட்டில் அமைந்துள்ளன. அவற்றுள் திருவிடவெந்தை ஒன்று. திருமங்கை ஆழ்வார் இங்கு எழுந்தருளியுள்ள பெருமான் மீது பேரன்பு பூண்டு ஒரு பதிகத்தை அவருக்குப் பூமாலையாகச் சூட்டியுள்ளார். இப்பதிகம் "தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமை கண்டு தாய் இரங்கல்" என்ற அகப்பொருட் துறையில் அமைந்துள்ளது. தலைவனைப் பிரிந்த தலைவி அவன் வரும் நாளை எண்ணிப் பரிதவிக்கிறாள். அத்தலைவியின் நிலை கண்டு துன்புற்ற அவளது தாய் தலைவனின் வருகையை எண்ணி ஏங்கிப் பாடுவதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன.

திவளும் வெண்மதிபோல் திருமுகத் தரிவை
செழுங்கட லமுதினிற் பிறந்த
அவளும் நின் ஆகத்திருப்பது மறிந்தும் ஆகிலும்
ஆசைவிடாளால்
குவளையங்கண்ணி கொல்லியம்பாவை சொல்லுநின்
தாள் நயந்திருந்த
இவளையுன் மனத்தால் என்னினைந்திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே.

"ஒளிமிக்க வெண்பிறையை யொத்த முகம் உடையவள்; இளமைப்பருவத்தினள்; கடலில் அமுதத்துடன் உதித்தவள்; இத்தகைய தன்மையுடைய பெரிய பிராட்டியான திருமகள் தங்களது மார்பில் குடிகொண்டுள்ளாள் என்ற உண்மையை அறிந்தும் எனது மகள் உங்கள் மீதுள்ள

பிரேமையை விட மறுக்கிறாள். நீலோற்பல மலர் போன்ற கண்களும், கொல்லிப்பாவை போன்ற வடிவமும், உடைய என் மகள் உன் திருவடிகளையே நாடுகிறாள்; அவளுக்கு நீ என்ன முடிவையளிக்கப் போகிறாய்? (அவளை ஏற்று அருள வேண்டும்). பெரிய திருமொழி, 2ம் பத்து, ஏழாம் திருமொழியாக உள்ள அனைத்துப் பாடல்களும் இதே பாணியில் அமைந்துள்ளன. இப்பதிகத்திலுள்ள இறுதிப்பாடல் திருமாலின் பிற அவதாரங்களைப் போற்றுகிறது.

"அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய எம் மாயனே அருளாய்"

திருமலையிலுள்ள புஷ்கரிணியில் நீராடிய பின் அதன் கரையிலுள்ள வராகப் பெருமானை வணங்கிய போது திருமங்கையாழ்வாருக்குத் திருவிட வெந்தை நினைவு வந்தது.

"பார்த்தற்காயன்று பாரதங்கை செய்திட்டு வென்ற பரஞ்சுடர்
கோத்தங் காயர்தம் பாடியில் குரவை பிணைந்த எம் கோவலன்
ஏத்துவார் தம் மனத்துள்ளான் இடவெந்தை மேவிய எம்பிரான்
தீர்த்த நீர்த்தடஞ் சோலை சூழ் திருவேங்கட மடை நெஞ்சமே"

என்ற பாடலை அவர் உடனே பாடினார்.

(பெரிய திருமொழி, முதல்பத்து, 8ம் திருமொழி 4ம் பாசுரம்)

"ஏரார் பொழில் சூழ் இடவெந்தை" (சிறிய திருமடல் 73ம் கண்ணி) என்றும், "என் மனத்து மாலை இடவெந்தை ஈசனை" (பெரிய திருமடல் 119ம் கண்ணி) எனவும் திருமங்கையாழ்வார் இப்பதியை நினைவு கூர்ந்துள்ளார்.

குரவை இராமானுஜதாசர் இயற்றிய 108 "திருப்பதித் திருப்புகழ்" என்ற நூலில் "திருவிடவெந்தைப் பதி வாழமேவிய பெருமாள்" மீது ஒரு பாடல் இடம் பெற்றுள்ளது. 'அஷ்டப்பிரபந்தம்' பாடிய திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும், பிறவிகள் அளிக்கவல்ல தீவினைகளை ஓட்டும் வல்லமையுள்ள திருவிடந்தைப் பெருமாளைப் போற்று கிறார்.

"நின்று திரியும் பிறவியெல்லாம் நேர்வித்துக்
கொன்று திரியுங் கொடுவினையார்—இன்று
வெருவிட வெந்தைக்கே விழுமிய தொண்டானேன்
திருவிடவெந்தைக்கே செறிந்து"

திருவிடவெந்தை பற்றிய தலபுராணம் வடமொழி யில் பல ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டிருந்ததாம். அது இப்போது கிடைக்கவில்லை. 1939ம் ஆண்டு திருவிடவெந்தை மகான்மியம் என்ற நூல் திருக் கோயிலால் வெளியிடப்பட்டது. 1965ம் ஆண்டு பிரம்மோற்சவத்தின் போது இதே நூலை விரிவுபடுத்தி வெளியிட்டுள்ளனர்.

திருவிடந்தை ஆலயம் சுமார் 2½ ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இங்கு வைகானச ஆகமத்திற்கு ஏற்ப மூன்று கால வழிபாடுகள் நடைபெறுகின்றன. ஆலயத் திற்குச் சொந்தமாக நிலபுலன்கள் உள்ளன. ஆலயத்தில் பதினான்கு மரவாகனங்களும், ஒரு தேரும் உள்ளன. வைகாசி மாதத்தில் பிரம்மோற்சவம் விமரிசையாக நடைபெற்று வந்தது. அதன் ஒன்பதாம் நாள் சுவாதி நட்சத்திரத்தன்று அமையுமாறு விழாவைத் துவக்குவர். பிற மாத உற்சவங்களும் நன்கு கொண்டாடப்பட்டு வந்தன. சில ஆண்டுகளாக ஆலயத்தின் உட்பகுதிகள் புதுப்பிக்கப்பட்டு வருவதால் பாலாலயம் எழுப்பி அதில் உற்சவர்களை நிறுவியுள்ளனர்.

# 15. துத்திப்பட்டு

*(வட ஆற்காடு – அம்பேத்கார் மாவட்டம்)*

## பிந்து மாதவராயப் பெருமாள் கோயில் (வரதராஜப்பெருமாள் கோயில்)

*முற்காலத்தில் தெய்வசிந்தையே தமது மூச்சாகக் கொண்டு இறைவனை இடையறாது தியானித்துத் தவமியற்றும் தவசிகள் அதிக அளவில் வாழ்ந்து வந்தனர். இத்தகைய நோக்கத்துடன் கானகத்தையடைந்து அந்த அமைதியான சூழலில் மனதை ஒருநிலைப்படுத்தித் தவமியற்றி வந்தனர். இவ்வாறு தவமியற்றும் ரிஷிகளுக்கு அசுரர்கள், இயக்கர்கள் போன்றோர் கணக்கற்ற தொல்லைகளையளித்துத் தவம் ஈடேறாமல் இடையூறு செய்து வந்தனர். இங்ஙனம் ரோமரிஷியும், அவரது துணைவர்களும் தவம்புரிந்து வந்தபோது பிரதூர்த்தன் என்ற இயக்கன் பலமுறை தவசாலைக்கு வந்து தொல்லைகள் கொடுத்து வந்தான். இதனால் வெகுண்ட ரிஷி அவனைப்புலியாக மாறுமாறு சபித்தார். புலியுருவை அடைந்த இயக்கன் கானகத்தில் வாழும் உயிரினங்களை அழிக்க முற்பட்டதுடன் நில்லாமல், முனிவர்களுக்கு முன்னைவிட அதிக அளவில் இன்னல்களை அளித்து வந்தான். வேறு வழியின்றி முனிவர்கள் இந்திரனைச் சரண் அடைந்தனர். முனிவர்களின் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்த இந்திரன் தானும்*

புலியாக உருமாறிப் பிரதுார்த்தனுடன் போரிட்டான். இறுதியில் இந்திரன் தனது வஜ்ஜிராயுதத்தால் இயக்கனின் உடலைச் சேதித்தான். உயிரிழக்கும் நிலையில் அவனுக்கு நல்லெண்ணம் உதித்தது. செய்த தவறையுணர்ந்த இயக்கன் நற்கதி பெற வேண்டும் என இந்திரனும், தேவர்களும் திருமாலை வழிபட்டனர். திருமாலும் சங்கு, சக்ர கதாதாரியாகத்தேவியருடன் காட்சியளித்து இயக்கனுக்கு நற்கதியளித்தார். இந்த வரலாறு பிரம்மாண்ட புராணத்திலுள்ள சனத்குமார சம்ஹிதையில் உள்ள பாஸ்கரக்ஷேத்திர மகாத்மியத்தில் இடம் பெற்றுள்ளதாம்.

இயக்கனுக்கு அருள்புரிந்த அதே கோலத்தில் அங்கேயே கோயிலில் எழுந்தருளுமாறு ரோமரிஷியும், அவரது சீடர்களும் திருமாலிடம் வேண்டிக் கொண்டனர். முனிவர்களின் அன்புக் கட்டளையை ஏற்றுக் கொண்ட திருமால் அதே கோலத்தில் எழுந்தருளினார். பிரதுார்த்தன் நற்கதியடைந்த திருத்தலம் அந்த இயக்கன் பெயரால் பிரதுார்த்தப்பட்டு என்று அழைக்கப் பட்டது. காலப்போக்கில் அப்பெயர் மருவி துத்திப் பட்டு என்றே வழங்கப்படுகிறது. இத்திருத்தலம் ஆம்பூர் புகைவண்டி நிலையத்திலிருந்து இரண்டு கல் தொலைவில் அமைந்துள்ளது. ஆம்பூரிலிருந்து குடியாத்தம், பேர்ணாம்பட்டு ஆகிய ஊர்களுக்குச் செல்லும் பேருந்துகளில் சென்றால் கோயிலை எளிதில் அடையலாம்.

இன்று மக்கள் இக்கோயிலை வரதராஜப் பெருமாள் கோயில் என்றே அழைக்கின்றனர். நுழைவாயிலில் 45 அடி உயரமுள்ள ஐந்து நிலைகோபுரம் அமைந்துள்ளது. அதன் மேற்பகுதிகள் சிறிது சிதைந்துள்ளன. இவ்வால யத்தில் ஒரேயொரு பிரகாரமும், மூன்று கருவறைகளும், ஒரு மகாமண்டபமும், ஒரு முகமண்டபமும் உள்ளன கொடி மரம், கருடாழ்வார் ஆகியோரைக் கண்ணுற்ற வாறே மகாமண்டபம், முகமண்டபம் ஆகியவற்றைக்

கடந்து மூலஸ்தானத்தை அடையலாம். மூலவர் பித்து மாதவராயப் பெருமாள் (வரதராஜர்) ஆறடி உயரம் கொண்ட மூர்த்தியாக, நின்ற கோலத்தில் அருளாட்சி புரிகிறார். இருமருங்கும் பெருந்தேவி, குமுதவல்லி ஆகிய நாச்சியார்கள் இடம் பெற்றுள்ளனர். மூலவர் கதையினா லமைந்தவர்; சதுர்புஜங்களைப் பெற்றுள்ளார். மேலுள்ள இரு கரங்களைச் சங்கும், சக்கரமும் அலங்கரிக்கின்றன. கீழ் இடது கரம் கதாயுதத்தை ஏந்தியுள்ளது. கீழ் வலதுகரம் அபய முத்திரையை அளிக்கிறது. உற்சவர் மூன்றடி உயரமுடைய எழிலுருவமாகத் துலங்குகிறார். அவரது உருவமைப்பு மூலவரைப் போலவே உள்ளது. மூலவரின் சந்நிதிக்கு மேல் பதினெட்டடி உயரமுள்ள தேஜோ விமானம் அணி செய்கிறது.

கருவறையை விட்டு அகன்று வெளிச்சுற்றை வலம் வருகையில் தனிச் சந்நிதியில் வீற்றிருக்கும் பெருந்தேவித் தாயாரைக் கண்டு துதிக்கலாம். பிரகாரத்தின் மறு புறத்தில் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியான ஆண்டாளைத் தரிசிக்கலாம். இச்சந்நிதிக்கு அருகே மகிழமரம் இடம் பெற்றுள்ளது. ஸ்ரீதேவி, பூதேவி, சக்கரத்தாழ்வார், நம்மாழ்வார், மணவாள முனிகள், உடையவர் ஆகியோரது திருவுருவங்களும் இக்கோயிலில் இடம் பெற்றுள்ளன. மண்டபச் சுவர் ஒன்றில் இத் தலத்தில் நற்கதியடைந்த பிரதார்த்தனின் திருவுருவமும் அமைந்துள்ளதாகக் கூறுவர். இந்தப் புண்ணிய பதியில் விஷ்ணு புராணத்தைப் பராசர முனிவர் மைத்ரேய மகரிஷிக்கு எடுத்துரைத்ததாகவும் கூறுவர்.

இக்கோயிலில் வைகானச ஆகமப்படி இருகாலப் பூஜை நடைபெற்று வருகிறது. இங்கு பணியாற்றும் அர்ச்சகர் ஆம்பூரிலிருந்து வருகிறார். தை மாதத்தில் சங்கராந்தி பண்டிகையும், வைகாசி விசாகத்தின் போது நடைபெறும் கருடசேவையும், கஜேந்திர மோட்ச விழாவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டு

வருகின்றன. விஜயதசமியின் போது உற்சவரை அருகிலுள்ள நிமிஷாசல மலையைச் சுற்றி வலம் வரச் செய்வது வழக்கம். அம்மலையில் ரோமரிஷி இன்றும் தவமியற்றுவதாகவும், நாள்தோறும் பிந்து மாதவப் பெருமாளைப் பூசிப்பதாகவும் ஐதிகம் உள்ளது. நிமிஷாசல மலையை வலம் வரும்போது ரோமரிஷிக்குப் பெருமாள் அருள் புரிவதாகக் கூறுவர். இவ்வூரைச் சுற்றியுள்ள பத்து கிராமங்களுக்குப் பெருமாளை அழைத்துச் செல்வதுண்டு. தற்போது இவ்விழாக்கள் விமரிசையாகக் கொண்டாடப்படுவதில்லை. அத்தி மரத்தாலான சிம்மம், ஹம்ஸம், குதிரை, கருடன், சூரியப் பிரபை, யாளி போன்ற வாகனங்கள் ஆலயத்தில் உள்ளன. அழகிய சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தேர் கோயிலுக்கு வெளியே கேட்பாரற்றுக் கிடக்கிறது. சென்ற ஆண்டு வைகாசி மாதத்தில் இங்கு பிரம்மோற்சவம் விமரிசையாக நடைபெற்றது.

இந்திரனின் வேண்டுக்கோளுக்கிணங்க மகாவிஷ்ணு இத்தலத்தில் எழுந்தருளியவுடன், தேவதச்சனை அருகே ஒரு அற்புதமான நகரை உருவாக்குமாறு தேவேந்திரன் பணித்தான். அவ்வாறு உருவான நகர் இந்திரன் பெயரால் தேவநாதபுரம் என வழங்கப்பட்டது. இன்று இவ்வூர் தேவலாபுரம் என்ற பெயருடன், ஆற்றுக்கு மறு கரையில் அமைந்துள்ளது. ஏழுமலையானைப் போலவே வடிவழகு மிக்க ஸ்ரீ நிவாசப் பெருமாள் எழுந்தருளியுள்ள ஆலயம் இத்தலத்தில் உள்ளது.

பழுதுபட்டிருந்த இக்கோயிலை ஏகஜதேவராயர் புதுப்பித்தார். கோயிலில் பூஜைகளும், விழாக்களும் செவ்வனே நடைபெற அவர் அளித்த மானியங்கள் பற்றிய விவரங்களைக் கல்வெட்டுக்கள் வாயிலாக அறியலாம். பிற்காலத்தில் பழுது பட்டிருந்த இக் கோயிலை விஜய நரசிம்மராயர் புதுப்பிக்கச் செய்தார். நாள்தோறும் நான்கு வேதங்களையும் பாராயணம்

செய்ய அந்தணர்களை நியமித்து, அவர்களுக்கு மானியங்கள் அளித்தார். இவ்வூருக்குச் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரையும் சூட்டினார். இவரது காலத்தில் வைணவர்களின் குடியிருப்புக்களுடன் இத்திருநகர் சீரும், சிறப்புமாகத் திகழ்ந்தது.

பின்னர் கன்னடம் பேசுகின்ற மாதவப் பிராமணர் இங்கு குடியேறினர். கோயிலின் நிர்வாகத்திலும், வழிபாடுகளிலும் அவர்கள் பெரும்பங்கேற்றனர். அவர்களது மரபுப்படியே இக்கோயிலிலுள்ள மூர்த்தி பிந்து மாதவப் பெருமாள் என அழைக்கப் பெற்றார். தற்போது ஒரு சில மத்வர்களே அங்கு வசிக்கின்றனர்.

தற்காலத்தில் கோயில் சீர்குலைந்த நிலையிலுள்ளது. கோபுரமும், விமானங்களும் செப்பனிட வேண்டிய நிலையில் உள்ளன. வாகன மண்டபமும், யாக சாலையும் இடிந்த நிலையில் பரிதாபமாகத் தோன்றுகின்றன. ஆலயத்தின் தர்மகர்த்தாவாகவும், முன்பு கிராம அதிகாரியாகவும் பணியாற்றி வந்த திரு. சடகோபர் என்பவர் மடைப்பள்ளியைச் சீரமைக்க முயற்சி செய்தார். ஆம்பூரிலுள்ள ஒரு தோல் பதனிடும் தொழிற் சாலையிலிருந்து பெற்ற ரூபாய் 5000/- வங்கியில் வைப்பு நிதியாகப் போடப்பட்டு அதிலிருந்து பெறும் வட்டி, மற்றும் ஊர்மக்கள் அளிக்கும் கொடை ஆகியவற்றைக் கொண்டே நித்திய வழிபாடுகள் நடைபெறுகின்றன.

புராணச் சிறப்பு மிக்க இத்திருக்கோயிலைச் செப்பனிட்டு நல்லநிலையில் வழிபாடுகள் நடைபெற ஆன்மிக அன்பர்கள் முயற்சி எடுத்துள்ளனர். இதற்காக அமைக்கப்பட்டுள்ள திருப்பணிக் குழுவின் முயற்சியால் ரூபாய் நான்கு இலட்சம் செலவில் ஆலயம் புதுப்பிக்கப் பட்டு வருகின்றது.

# 16. தேவிகாபுரம்

*(சம்புவராயர் மாவட்டம்)*

## "கனககிரீஸ்வரர் - பிரகன்நாயகி ஆலயங்கள்"

முற்காலத்தில் இருளர் வகுப்பைச் சார்ந்த ஒருவன் கானகத்திலுள்ள பல பகுதிகளில் கோடாரியால் தோண்டிக் கிழங்குகளைப் பெயர்த்தெடுப்பதையே தொழிலாகக் கொண்டிருந்தான். ஒரு மலை மீதுள்ள ஆலமரத்தினருகில் அவ்வாறு வெட்டும்போது அவனது கோடாரி அம்மரத்தின் வேரில் பட்டு உதிரப் பெருக்கு ஏற்பட்டது. இதனைக் கண்டு அஞ்சிய வேடன் அங்கேயே உணர்விழந்து விழுந்தான். அரனார் அன்று அவனது கனவில் தோன்றி அச்சத்தை நீக்கியதுடன், அம்மரத்தடியில்தான் லிங்க வடிவில் உருக்கொண்டிருப்பதாகக் கூறினார். அவ்வாறே மரத்தடியில் இருந்த சுயம்பு லிங்கத்தைக் கண்ட இருளன் அதனைத் தொடர்ந்து வழிபட்டான். அவ்வழியே போருக்குச் சென்ற பல்லவ மன்னன் இச்சம்பவத்தையறிந்தான். போரில் வெற்றி எய்தினால் உடனே அங்கு ஆலயம் எழுப்புவதாகவும் அம்மன்னன் உறுதிபூண்டான். போரில் வெற்றித் திருமகள் அவனைத் தழுவினாள். நன்றிக் கடனாக அம்மன்னன் மலைமீது கோயிலொன்றைக் கட்டினான். இவ்வாறு பல்லவ மன்னனின் திருப்பணி பெற்ற

திருத்தலம் இன்று தேவிகாபுரம் என்று பெயர் பெற்றுள்ளது. இவ்வூர் திருவண்ணாமலை — சம்புவராயர் மாவட்டத்தில், ஆரணியிலிருந்து 18 கி. மீ. தொலைவிலும், போளூருக்கு 14 கி.மீ. தூரத்திலும் அமைந்துள்ளது. ஆரணி, போளூர் ஆகிய ஊர்களிலிருந்து தேவிகாபுரம் வழியே அதிக அளவில் பேருந்துகள் வருகின்றன.

சிவஞான முனிவர் அருளிய காஞ்சிபுராணத்தில் இவ்வூர் தொண்டை மண்டலத்தின் தென் மேற்கு எல்லையாகவும், காஞ்சிக்கு இரண்டாவது ஆவரணத்தின் தெற்கு எல்லையாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூலில் தொண்டை நாட்டின் தெற்கு எல்லையாகக் கடல் மல்லையும், தென்மேற்கு எல்லையாகத் தேவிகாபுரமும், மேற்கு எல்லையாக விரிஞ்சிபுரமும், வடக்கு எல்லையாக நாகலாபுரமும் கருதப்பட்டுள்ளன. உக்கிரசேனன் எனும் மன்னன் ஈசனை நோக்கித் தவம் புரிந்தான். இறையருளால் அவனுக்குத் தேவகி என்ற புதல்வி தோன்றினாள். அவளது பெயரால் தேவகிபுரம் எனப்பட்டு, அதுவே நாளடைவில் தேவிகாபுரமாக மருவியதாகவும் ஒரு கருத்து உள்ளது. இதற்குக் காஞ்சிபுராணம் சான்று காட்டுவதாகவும் கருதுவர். கம்சனின் கொடுமைக்கு உட்பட்ட தேவகி ஈசனைக் குறித்துத் தவம்புரிந்து இங்கு கிருஷ்ணனை மகனாகப் பெற்றதாகவும், அவள் பெயரால் இத்தலம் தேவகிபுரம் எனவும் (பின்னர் தேவிகாபுரம்) பெயர்பெற்றதாகச் செவிவழிச் செய்தியும் உண்டு. இப்பதியில் உமை ஈசனைக் குறித்துத் தவமியற்றி அவரது அருள் பெற்றது கண்கூடு. இதனால் இவ்வூர் தேவிபுரம் எனப்பெயர் அடைந்து, பின்னர் தேவிகா புரமாக மருவியிருக்கலாம்.

ஊரின் மையப்பகுதியிலுள்ள சிறிய குன்று மீது ஈசன் குடிகொண்டுள்ள கோயில் உள்ளது. சீராக அமைக்கப் பட்ட 320படிகளைக் கடந்து மேலே செல்லலாம். மலை

மீதுள்ள கோயில் மூன்று ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இதன் பரப்பு (மதிற்சுவர் நீங்கலாக) கிழக்கு மேற்காக 140 அடி; வடக்கு தெற்காக 70அடி. கோயிலின் முகப்பில் சுமார் நாற்பது அடி உயரமுள்ள மூன்று நிலை கோபுரம், ஐந்து கலசங்களுடன் மிளிர்கிறது. யாக சாலை, மடைப்பள்ளி, மகாமண்டபம் ஆகியவற்றைக் கடந்து கருவறையிலுள்ள மூலவரான கனககிரீஸ்வரரை (பொன்மலை நாதர்) தரிசிக்கலாம். இரண்டு அடி உயரமுள்ள பீடம் மீது, வாழைப்பூ போன்ற உருவத்துடன் சிவன் காட்சியளிக்கிறார். அருகே காசி விசுவநாதரும், விசாலாட்சியும் தனிச் சந்நிதிகளில் அருளாட்சி புரிகின்றனர். இச்சந்நிதிகள் தோன்றியது பற்றிய சுவையான செய்தி ஒன்றுள்ளது. கார்வேட்சோழன் (காடு வெட்டி சோழன்) என்ற அரசனின் கனவில் ஈசன் தோன்றி, மலை மீது தனக்கு ஆலயம் எழுப்புமாறும், அங்கு தான் சுயம்புவாக எழுந்தருளுவதாகவும் அருளினார். அரனாரின் கட்டளையைச் சிரமேற் கொண்ட அரசன் அவ்வாறே ஆலயம் கட்டினான். அதில் ஈசன் சுயம்புவாகத் தோன்றவில்லை. இதனால் விசனமுற்ற மன்னன் காசியிலிருந்து ஒரு லிங்கத்தைக் கொண்டு வந்து அதை நிறுவினான். பின்னரே இறைவன் சுயம்புலிங்கமாகவே எழுந்தருளினார். இச்சுயம்பு மூர்த்திக்கே கனககிரீஸ்வரர் என்ற திருநாமமும், காசியிலிருந்து வந்த லிங்கத்திற்குக் காசி விசுவநாதர் என்ற பெயரும் ஏற்பட்டன. இரு லிங்க மூர்த்திகளும் கிழக்கு நோக்கியவாறு அருள்பாலிக்கின்றனர். கருவறையின் முகப்பில் துவாரபாலகர்களில்லை.

இரண்டாம் பிரகாரத்தில் விநாயகர், இரு தேவியருடன் முருகப்பெருமான், சண்டிகேஸ்வரர், மயிலுடன் கூடிய பாலசுப்பிரமணியர், தென்முகக் கடவுள், சப்த கன்னியர் ஆகியோருக்கு இடம் உள்ளது. ஆலய முகப்பில் பலிபீடம், கொடிமரம், நந்திதேவர் ஆகியோரையும் காணலாம். இவ்வாலயத்திலுள்ள மண்டபத்

தூண்களில் எண்ணற்ற அருமையான சிறு சிற்பங்களைக் கண்டு மகிழலாம். அர்த்தமண்டபத் தூண்களில் அம்மன் இறைவனை வழிபடும் காட்சி, வியாக்ரபாதர் ஈசனைத் துதித்தல், யானை வழிபாடியற்றல், ஆகிய காட்சிகள் அமைந்துள்ளன. தியான மண்டபத் தூண்களில் கஜசம்ஹாரமூர்த்தி, பிட்சாடனர், மோகினி, விநாயகர், சுப்பிரமணியர், ரிஷப குஞ்சரம் ஆகிய திருவுருவங்கள் அமைந்துள்ளன. மகாமண்டபத்தைத் தாங்கியுள்ள இருபத்தொரு தூண்களிலும் இங்ஙனமே சிற்பங்கள் எழில் கூட்டுகின்றன. சங்கு சக்ரதாரியான திருமால், இரணியனை வதைக்கும் நரசிம்மமூர்த்தி, வேணு கோபாலன், கூப்பிய கரத்துடன் பிரகலாதன், மயில் மீதமர்ந்த முருகன், பிரம்மாண்டமான நர்த்தன கணபதி, கோவர்த்தனகிரியைக் குடையாக ஏந்திய கண்ணன், சிவகாமசுந்தரியுடன் நடராஜர், பதஞ்சலி, வியாக்ர பாதர், வில்லம்புகளுடன் கண்ணப்பர் ஆகியோரின் பல விதமான உருவங்களைத் தரிசிக்கலாம். பிட்சாடனரின் அழகில் மயங்கிய ரிஷி பத்தினிகள், தங்களது நிலை மறந்து அவரைத் தொடர்ந்து செல்லும் காட்சியும் இங்கு வடிக்கப்பட்டுள்ளது. நங்கையர் பலர் ஒன்று சேர்ந்து யானை உருவில் காட்சியளிப்பதையும் கண்டு களிக்கலாம்.

இக்கோயிலிலுள்ள முருகப்பெருமான் ஆறுமுகங் களையும் பெற்றுக் கண்ணைக் கவரும் கோலத்துடன் காட்சி தருகிறார். ஆரணி — படவேடு பாதையிலுள்ள காமக்கூர் என்ற திருத்தலத்தில் அமைந்துள்ள சந்திர சேகரஸ்வாமி ஆலயத்திலுள்ள முருகப் பெருமானின் திருவுருவமும், தேவிகாபுரம் கனககிரியிலுள்ள முருகனின் திருவுருவமும் ஒரே சிற்பியின் கைவண்ணத்தால் ஆன தாகக் கருதுகின்றனர். கனககிரி முருகனை அருணகிரி நாதர் திருப்புகழ்ப் பாடலொன்றில் துதித்துள்ளார்.

"அரிவையர்கள் தொடருமின்பத் துலகுநெறி மிக
மருண்டிட்
டசடனென மனது நொந்திட் டயராமல்

அனுதினமு முவகை மிஞ்சிச் சுகநெறியை விழைவு கொண்டிட்
டவநெறியின் விழைவு மொன்றைத் தவிர்வேனோ
பரிதிமதி நிறைய நன்றஃதென வொளிரு முனது துங்கப்
படிவமுக மலைகள் கண்டுற் றகமேவும்
படர்கள் முழுவதும கன்றுட் பிரிவினொடு துதிபு கன்றெற்
பதயுகள மிசைவ ணங்கற் கருள்வாயே
செருவிலகு மசுரர் மங்கக் குலகிரிகள் நடுநடுங்கச்
சிலுசிலென வளைகு லுங்கத் திடமான
செயமுதவு மலர்பொருங்கைக் தலமிலகு மயில்கொ ளுஞ்சத்
தியைவிடுதல் புரியுமுன்பிற் குழகோனே
கருணைபொழி கிருபைமுந்தப் பரிவினொடு கவுரிகொஞ்சச்
சலகலென வருக டம்பத் திருமார்பா
கரிமுகவர் தமையனென்றுற் றிடுமிளைய குமர பண்பிற்
கனககிரியிலகு கந்தப் பெருமாளே"

சேலத்திலிருந்து 19 கி.மீ. தொலைவிலுள்ள தாதா பாளையம் கனககிரிக் கோயிலையை அருணகிரிநாதரின் பாடல் போற்றுவதாக ஒரு கருத்து உள்ளது. கோவை மாவட்டத்தில் 'கிணத்துக் கடவு'க்கருகேயுள்ள 'பொன் மலை' ஆலயத்தையே திருப்புகழ்த் தலமாகத் தணிகை மணி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அதே மாவட்டத் திலுள்ள பல்லடம் 'கண்டியம்' கோயிலையே கனககிரி என அவ்வட்டார மக்கள் நம்புகின்றனர். இருப்பினும் திருப்புகழில் போற்றப்பட்டுள்ள கனககிரி, தேவிகா புரத்தையே குறிப்பதாகத் திருமுருக கிருபானந்த வாரியார் போன்ற பெரியோர்கள் அறுதியிட்டுக் கூறுகின்றனர்.

கனககிரீஸ்வரருக்கு அபிஷேகம் நடைபெறும் போது தண்ணீருக்குப் பதிலாக வெந்நீரை உபயோகிப்பது இத்தலத்திற்கே உரிய சிறப்பு. இம்மலையின் சுற்றளவு

சுமார் மூன்று மைல்கள் இருக்கும். செவ்வாய்க் கிழமையன்று இம்மலையைச் சுற்றி வலம் வந்து வழிபடுவது இன்றும் கடைப்பிடிக்கப்படுகிறது. இவ்வாறு கிரிவலம் வந்து வழிபடுவோரின் தீராத பிணிகளும் நீங்கி, உடல்நலம் பெருகும் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

மலைமேலுள்ள படிக்கட்டுகளின் வடபுறத்தில் பார்வதிதேவி ஈசனைக் கணவனாக அடையும் எண்ணத்துடன் கிழக்கு நோக்கியவாறு தீவிரமான தவத்தில் ஈடுபட்டாராம். அவ்விடத்தில் பாறையில் பதிந்துள்ள பாதச்சுவடுகள் அம்மனின் கால் சுவடுகளே என நம்புகின்றனர். இன்றும் இச்சுவடுகள் பார்வதி தவமியற்றியதற்குச் சான்று பகர்கின்றன. மலைப்படிக்கட்டுகளுக்குத் தென்புறத்தில் ஆலடி விநாயகர் வடக்கு நோக்கியவாறு கோலம் கொண்டுள்ளார். ஆதியில் ஆலமரத்தடியில் ஈசன் சுயம்புவாகத் தோன்றியதால் இங்கு ஆலமரமே தலவிருட்சமாக விளங்கியது. இம்மரம் சில ஆண்டுகளுக்கு முன்பு பட்டுப் போயிற்று. தலவிருட்சம் இருந்த இடத்திலேயே இன்று ஆலடி விநாயகர் எழுந்தருளியுள்ளதாகக் கருதுகின்றனர். மலைப்படிகளுக்குக் கிழக்கில் வடக்கு நோக்கியவாறு வீரபத்திரர் காட்சியளிக்கிறார். இவரது திருவுருவம் போற்றற்குரிய வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ளது. மலையடிவாரத்தில் வடபுறமாகக் கோகிலாம்பாள் உடனுறை திருக்காமேஸ்வரர் திருக்கோயில் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. மூலவரான திருக்காமேஸ்வரர் லிங்கவடிவில் உள்ளார். இச்சந்நிதிக்கு வடபுறமுள்ள தனி கருவறையில் கோகிலாம்பாள் நின்ற கோலத்தில் எழிலுருவமாகக் காட்சியளிக்கிறார். இக்கோயிலின் பரப்பு கிழக்கு மேற்காக இருபது அடி; வடதெற்காகப் பதினொரு அடி; சந்நிதிகளுக்கு மேல் விமானம் கட்டப்படவில்லை. இக்கோயில் ஒன்பது கருங்கற்களால் கட்டப்பட்டதாகும். அக்காலக் கலைஞர்களின்

திறனுக்கு இது ஒரு சிறந்த சான்றாகும். மலை மீதுள்ள கோயிலுக்குச் சென்ற அரசன் திரும்பி வருவதற்குள் கட்டி முடிக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் அவசரம் அவசரமாக இக்கோயில் கட்டப்பட்டதாகக் கர்ண பரம்பரைச் செய்தி உள்ளது. இவ்வாலயத்தில் பூஜை எதுவும் நடைபெறாதது வருந்தற்குரியது.

**பிரகன்நாயகி அம்மன் கோயில்:** தேவிகாபுரத்திற்கே பெருமை சேர்ப்பது, ஊரின் மையப்பகுதியிலமைந்துள்ள இந்த பிரம்மாண்டமான ஆலயமாகும். இக்கோயிலைச் சுற்றி 30 அடி உயரமுள்ள மதிற்சுவர் பாதுகாப்பாக உள்ளது. இக்கோயிலின் பரப்பளவு கிழக்கு மேற்காக 475 அடி; வடக்கு தெற்காக 250 அடி. இக்கோயிலில் பல வாயில்கள் உள்ள போதிலும் வடக்கு, தெற்கு ஆகிய வாயில்கள் மூடப்பட்டுள்ளன. கோயிலின் முகப்பில் 150 அடி உயரமுள்ள ஏழுநிலை கோபுரம் (ஒன்பது கலசங்களுடன்) ஓங்கி வளர்ந்துள்ளது. தலைவாயிலுக் கருகே கோயிலின் தேருக்கருகே ஒரு மண்டபம் தெற்கு நோக்கியவாறு காட்சியளிக்கிறது. வலது புறத்திலுள்ள கலியாண மண்டபம் சக்கரங்களுடன் கூடிய தேர்போல வடிக்கப்பட்டுக் குதிரைகளால் இழுக்கப்படுவது போல் கட்டப்பட்டுள்ளது.

கொடிமரத்தின் இருபுறங்களிலும் விநாயகர், முருகன் ஆகியோரின் தனி சந்நிதிகள் இடம் பெற்றுள்ளன. இரண்டாவது கோபுரம் மூன்று நிலை களுடன் (60 அடி உயரம்) தோற்றமளிக்கிறது. முகப்பு மண்டபம், அர்த்த மண்டபம் ஆகியவற்றைக் கடந்து மூலவரின் கருவறையை அடையலாம். கருவறையில் மூலவராக பிரகன்நாயகி (பெரிய நாயகி) அருள் கொழிக்கும் அழகுமிக்க சிறிய திருவுருவினராகக் காட்சி யளிக்கிறார். மேலுள்ள கரங்களில் அங்குச, பாசங்கள் ஒளிவிடுகின்றன. மற்றிரு கரங்கள் அபய, வரத முத்திரைகளை அளிக்கின்றன. விசேட நாட்களில்

வெள்ளிக் கவசம் அணிவிக்கப்படும்போது அம்மனின் எழில் பன்மடங்கு அதிகரிக்கும். இச்சந்நிதியின் முன்புறத்தில் அரபத்ரா, சுபத்ரா ஆகிய இரு துவார பாலகியர் காவல் புரிகின்றனர்.

கருவறைக்கு அருகே சண்டேஸ்வரியம்மனின் சந்நிதியைக் காணலாம். அர்த்தமண்டபத்தைக் கடந்து இரண்டாம் பிரகாரத்தை வலம் வரும்போது கணபதி, திருமால், மூஷிக வாகனம், நாகலிங்கர், மகேஸ்வரி, நந்தி தேவர், சதாசிவமூர்த்தி, திருஞானசம்பந்தர், அமர்ந்த நிலையிலுள்ள விநாயகர், வள்ளி, தெய்வயானை சமேதரான சுப்பிரமணியர் ஆகியோரைக் கண்ணுறலாம். மற்றொரு புறத்தில் வயிரவர், துர்க்கை, வரசித்தி விநாயகர் ஆகியோரின் தரிசனத்தையும் பெறலாம். வாயிலைக் கடந்தவுடன் துவாரபாலகிக்கு அருகே உற்சவமூர்த்திகளையும், சுந்தர விநாயகர், சமயக்குரவர், நால்வர் ஆகியோரையும் காணலாம்.

மற்றொரு புறத்திலுள்ள சபாமண்டபத்தில், தெற்கு நோக்கியவாறு நடராஜரும் சிவகாம சுந்தரியும் காட்சி வழங்குகின்றனர். மூன்றாம் பிரகாரத் துவக்கத்தில் மஞ்சனக் கிணற்றை உள்ளடக்கிய மடைப்பள்ளி உள்ளது. இப்பிரகாரத்தை வலம் வரும்போது காசி விசுவநாதர், கச்சை கட்டிய விநாயகர் ஆகியோர் இரு புறங்களில் உள்ளனர்; மகாமண்டபத்தில் நவகிரகங்கள் அமைந்துள்ளன. நான்காம் பிரகாரத்தின் இருபுறமும் விநாயகர், முருகன் ஆகியோரின் தனி சந்நிதிகளும், நந்தவனக் கிணறு, திருக்குளம், நான்கு கால் மண்டபம் ஆகியனவும் உள்ளன. கோபுரத்திற்கு வெளியே ஈசான மூலையில் தேரடிமண்டபத்தைக் காணலாம்.

அம்மன் திருக்கோயிலிலுள்ள பல சிற்பங்கள் மு க ம தி ய ரி ன் தாக்குதலுககுட்பட்டதால் ஓரளவு சிதைந்து உள்ளன. மண்டபத் தூண்களிலுள்ள சிற்பங்கள் நமது சிற்பிகளின் நுண்ணிய சிற்பத்

திறனுக்குச் சான்று பகர்கின்றன. அம்மன் ஈசனைப் பூசித்தல், இரணிய சம்ஹாரம், ஆஞ்சநேயர், சுப்பிரமணியர், விநாயகர், சிறுத்தொண்டரின் வாழ்க்கை வரலாறு ஆகிய சிற்பங்கள் உட்பகுதிகளிலுள்ள தூண்களை அணி செய்கின்றன நவராத்திரி மண்டபத் தூண்களில் திருஞான சம்பந்தர் அங்கம் பூம்பாவையை உயிர் பெறச் செய்த காட்சி, சங்கு, சக்ர, கோதண்ட பாணியான மகாவிஷ்ணு, அமர்ந்த கோலத்தில் பார்வதி தேவி, யானை, இடபம் ஆகியவற்றின் மீது அமர்ந்துள்ள சிவபெருமான், நடனமாடும் கோலத்தில் நடராஜர், அஞ்சலி ஹஸ்தராக கருடாழ்வார் ஆகிய தோற்றங்கள் வசீகரமாக வடிக்கப்பட்டுள்ளன. மகாமண்டபத் தூண்களில் ஈசனை வழிபடும் அம்மன், காளியை நடனத்தில் வெற்றி கொண்ட அம்பலவாணர், காலனை ஒடுக்கி மார்க்கண்டேயருக்கு அருளிய அரனார், கஜசம்ஹார மூர்த்தி. தேவியருடன் அன்னவாகனத்தில் அமர்ந்த நான்முகன், தவக்கோலத்தில் ஈசனுடன் வாதிட்ட அருச்சுனன், பிட்சாடனர், மோகினி, மகிஷாசுர மர்த்தினி, இரணியனை அழித்த நரசிம்மர் போன்ற கணக்கற்ற தெய்வீகச் சிற்பங்கள் கண்ணுக்கு விருந்தாக உள்ளன. குதிரைகளால் இழுக்கப்படும் தேர் போன்ற அமைப்புடைய கலியாண மண்டபத்தில் மனுநீதி சோழனின் வரலாற்றை விளக்கும் சிற்பம் உள்ளது. சுந்தரமூர்த்தி நாயனார் முதலை வாய்ப் பிள்ளையை மீட்ட சம்பவமும், இராமர் ஏழு மராமரங்களைத் துளைத்த காட்சியும் உட்பகுதிகளில் வடிக்கப் பட்டுள்ளன. நுழைவாயிலிலுள்ள இராஜகோபுரத்தின் உட்புறத்தில் மான், மழு, ஊன்றுகோல் ஆகியவற்றை ஏந்தியவாறு நிற்கும் நந்திதேவரும், இரணியனை வதைத்த நரசிம்ம மூர்த்தியும் நேர்த்தியாக அமைந் துள்ளனர். மேலும், பல பெரிய சிற்பங்கள் சிதைந் துள்ளன. இராஜகோபுரமும், இரண்டாம் கோபுரமும் செப்பனிட வேண்டிய நிலையில், செடிகள் இடையே முளைத்தவாறு தோன்றுகின்றன.

பிற ஆலயங்களில் அம்மனின் சந்நிதிக்கு எதிராகச் சிங்கத்தின் திருவுருவம் அமைந்திருப்பது உண்டு. இக்கோயிலில் அம்மன் சந்நிதிக்கு எதிராக மேற்கு நோக்கியவாறு நந்தி காட்சியளிப்பது அபூர்வமான அம்சமாகும். கோயிலின் மதிற்சுவர்கள் மீது இருபது அடிக்கு ஒன்றாக நான்கு புறங்களிலும் ரிஷபங்கள் உள்ளன. வெளிப்புற மதிலில் யானை, குதிரை, வராகம் போன்ற மிருகங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அணி வகுத்துச் செல்வது போல் அமைக்கப்பட்டுள்ளன. முகமதியப்படை வீரர்கள் ஆலயத்தைச் சூறையாடமல் தடுக்கும் நோக்கத்துடன் அவர்கள் விரும்பாத பன்றியின் உருவத்தை மதிற்சுவர்களில் அமைத்ததாகவும் ஒரு கருத்து உள்ளது.

பிரகன்நாயகி கோயிலைத் தொண்டைமான் சக்கர வர்த்தி கட்டியதாகக் கூறப்படுகிறது. அம்மன்னனின் கோயில் கட்டும் பணி இங்குதான் துவங்கியதாம். இத்தலத்தை 64 சக்தி பீடங்களுள் ஒன்றாகவும் கருதுவர். நான்முகன் உருவாக்கிய நான்கு அற்புதத் திருவுருவங்களுள் பெரியநாயகியின் திருவுருவமும் ஒன்று எனக் கருதுவர். திருவண்ணாமலைக்கு அடுத்தபடியாகப் பக்தர்கள் நாடிவரும் தலங்களுள் இப்பதியும் ஒன்று. இத்தலத்திற்கு தேவகிபுரம், தேவி கீழ்ப்புரம் (மலைக்குக் கீழ் அமைந்துள்ளதால்), தேவியம்பதி, கனககிரி, கனகாத்ரி, கனகாஜலம் ஆகிய பெயர்கள் உள்ளதாகத் தலவரலாறு விளம்பும். ஸ்ரீநிவாசமூர்த்தி இங்கு கோவில் கொண்டுள்ளதால் நாராயணவனம் என்ற பெயரும் இத்தலத்திற்கு உண்டு.

இத்தலத்தில் நான்கு புண்ணிய தீர்த்தங்கள் உள்ளன. ஊருக்கு வெளிப்புறத்திலுள்ள நவக்கிரக தீர்த்தம் (இன்று பெரியப்பன்குளம்), ஊருக்கு மேற்கே பத்மாவதி மண்டபத்திற்கருகேயுள்ள செய்யான்குளம், அதன் வடக்கேயுள்ள தேவரடியார் தீர்த்தம் ஆகியன புனிதம்

நிறைந்தவை. இத்தலத்தின் தென்கிழக்கிலுள்ள கரட்டான்குளம் எனும் அக்கினி தீர்த்தம் அழகிய நீராழி மண்டபத்துடன் பொலிவான தோற்றத்தைப் பெற்றுள்ளது இதற்கு வடக்கேயுள்ள சிறிய குன்றில் கிழக்கு நோக்கிய சந்நிதியுடன் கூடிய பால முருகனின் கோயில் அண்மைக் காலத்தில் தோன்றியது. பெரிய நாயகியம்மன் கோயிலின் தென்புறத்தில் வட்டவடிவான மேடையுடனும், பொலிவான படிக்கட்டுகளுடன் கூடிய பிரம்மதீர்த்தம் உள்ளது.

இங்கு காரண ஆகமப்படி மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது பெரியநாயகியம்மன் ஆலயத்திற்கு அருகே அர்ச்சகரின் இல்லம் உள்ளது. இக்கோயில் காலை பதினொன்று மணி வரையிலும், மாலை ஐந்து மணியிலிருந்தும் தரிசனத்திற்காகத் திறந்திருக்கும். கனககிரீஸ்வரர் கோயில் காலை 7-30 முதல் ஒன்பது மணி வரையில் மட்டுமே திறந்திருக்கும். கோயிலுக்குச் சொந்தமான 1-62 ஏக்கர் நன்செய் நிலம் போளூர் வட்டத்தைச் சேர்ந்த ஈயகொளத்தூர் கிராமத்தில் உள்ளதாகப் பதிவேடுகள் தெரிவிக்கின்றன. கோயிலுக்கு வெளிப்புறத்திலுள்ள சில கடைகளிலிருந்து வாடகையாக ஆண்டுக்கு சுமார் ஆயிரம் ரூபாய் கிடைக்கிறது, இக்கோயில் இந்து அறநிலைய ஆட்சித் துறையினரால் நிர்வகிக்கப்படுகிறது.

பங்குனி உத்திரத்தின்போது நிகழும் விழாவே இங்கு பெருவிழாவாகும். அம்மன் கோயிலில் நவராத்திரி விழா விமரிசையாக நிகழும். மலைக் கோயிலில் ஐப்பசி அன்னாபிஷேகம், மாசி மாதக் கிருஷ்ண பட்சத்தில் சிவராத்திரி விழா, கந்த சஷ்டி கார்த்திகை தீபம், ஆருத்ரா தரிசனம், காணும் பொங்கல், வேடர்பறி ஆகிய விழாக்கள் கொண்டாடப் படுகின்றன. கோயிலில் அதிகாரநந்தி, பூதம், சூரிய, சந்திர பிறைகள், நாகம், ரிஷபம், மயில், அன்னம்

குதிரை, பெருச்சாளி. இராவணன், தெருவடிச்சான், கந்தர்வ பதுமைகளுடன் கூடிய இந்திர வாகனம் ஆகியன உள்ளன. இக்கோயிலுக்குரிய தேர் பழுதடைந்து விட்டது. கோயிலுக்குரிய நகைகள் ஜாகீர்தாரர்களால் வழங்கப்பட்டு, அவர்களது பாதுகாப்பில் இருந்து வந்தன. சுமார் தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு ஜாகீர்தாரர்கள் மேற்பார்வையில் குடமுழுக்கு நிறை வேறியது.

பெரியநாயகி அம்மன் கோயிலில் 55 கல்வெட்டுக் களும், கனகிரீஸ்வரர் ஆலயத்தில் ஒரு கல்வெட்டும் படியெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பெரும்பாலானவை விஜயநகரவேந்தர்கள் காலத்தைச் சேர்ந்தவை. இவற்றுள் 53 கல்வெட்டுக்கள் தமிழிலும், இரண்டு வட மொழியிலும், ஒன்று மராத்தியிலும் உள்ளன இவற்றுள் 41 கல்வெட்டுக்களில் மட்டுமே அரசர்களின் பெயர் களும், அவர்களது காலம் பற்றிய குறிப்பும் உள்ளன. இவற்றுள் காலத்தால் முற்பட்டது, விஜயநகர வேந்தர் சாளுவ நரசிங்க உடையார் (1485-92) அரசாட்சியின் போது எழுதப்பட்டது. இவ்வம்சத்தினரின் கல்வெட்டுக் களில் இறுதியானது வேங்கடதேவ மகாராயர் (1630) காலத்தில்தோன்றியது. மராத்தியமன்னர் சரபோஜியின் புதல்வனான துளஜ ராஜாசாகிபு (கி பி. 1889) காலத்தைச் சேர்ந்த ஒரு கல்வெட்டும், ஆரணி ஜாகிர்தாரர்களின் கல்வெட்டுக்கள் இரண்டும் கிடைத்துள்ளன. இவற்றைக் கொண்டு நோக்கும்போது ஆலயம் 600 ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்டிருக்க வேண்டும் என அறியலாம்.

இக்கல்வெட்டுக்கள் மூலம் (சாளுவ) நரசிங்கராய உடையார் (1485-92), இம்மடி நரசிங்க தேவமகாராயர் நரச நாயக்கர் (படைத்தலைவர்) (1493–99), (துளுவ) கிருஷ்ணதேவ மகாராயர் (1509–29), அச்சுத தேவ மகா ராயர் (1529–34), சதாசிவ மகாராயர் (1534—51), சிரங்கதேவ மகாராயர் (1572–89) வேங்கடதேவமகா ராயர் 1630), துளஜராஜாசாகிப், ஆரணி, ஜாகீர்தாரர்

அபிநவபுராணப் பிரிய சீனிவாசராவ் சாகேப் (1889) ஆகிய அரசர்கள் பற்றிய தகவல்கள் கிடைத்துள்ளன.

விஜயநகர அரசு மண்டலங்களாகவும், சீர்மைகளாகவும் பிரிக்கப்பட்டது. தொண்டை மண்டலத்திலுள்ள சீர்மைகளுள் படைவீட்டுச் சீர்மையும் ஒன்று. இதனுள் தேவிகாபுரம் உட்பட்டிருந்தது. 'ஜெயங்கொண்ட சோழமண்டலத்துப் பல் குன்றுக்கோட்டத்துமேல் குன்றநாட்டு முருக மங்கலப் பற்றைச் சார்ந்த தேவிகாபுரம்' என்றே இவ்வூர் வழங்கப்பட்டது. மலைமீதுள்ள ஈசரைக் கல்வெட்டுக்கள் 'திருமலை உடைய நாயனார்' என்றும், 'திருமலை உடையார்' என்றும் குறிப்பிடுகின்றன.

பிரகன்நாயகிக்குப் 'பெரிய நாச்சியார்' என்ற பெயரே வழங்கப்பட்டது. அக்காலத்தில் கன்னடியப் பெருமக்கள் இங்கு குடியேறியதாகவும், அவர்கள் கோயில் நிலங்களை உழவுக் காணியாட்சியாகப் பெற்றிருந்ததாகவும் அறியலாம். அப்பெருமக்கள் கோயிலுக்குப் பல அறங்களைச் செய்தனர்.

அரசர், சிற்றரசர், உயர் அதிகாரிகள் ஆகியோரின் நன்மையை முன்னிட்டு, அவர்களுக்குக் கீழேயுள்ள அதிகாரிகள் புரிந்த தானங்கள் பற்றிய செய்திகளை 16 கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. நரசநாயக்கரின் நலனுக்காக ஆலயத்தில் திருப்பாட்டுப்பாட இருவர் நியமிக்கப்பட்டனர். அவர்களுக்கு வீடு, நிலம், உணவு ஆகியன அளிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. நரசநாயக்கர் உயிர் நீத்தவுடன், அவர் நினைவாக 'சமரபுங்கவ தீக்ஷிதர்' என்பாருக்கு நிலமும், வீடும் வழங்கினர். அவ்வாறே கிருஷ்ணதேவராயர், அச்சுததேவராயர், திருமலை நாயக்கர், காளத்தீஸ்வர நாயக்கர் ஆகியோர் நலனுக்காக தானம் அளிக்கப்பட்டது. இக்கல்வெட்டுக்களில் ஏழு தேவதான

கிராமங்களின் பெயர்களும், வேறு ஒன்பது கிராமங்களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

ஆலயத்தின் நிர்வாகத்தை அதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்டவரும், பிட்சா மடத்துத் தலைவரும், கைக்கோள முதலிகளும், ஆலய குருக்களும் கவனித்து வந்தனர். விழாக்களின் போது படையலுக்கும், வாசனைப் பொருட்களுக்கும் நில தானம் அளிக்கப்பட்டது. குளம், கிணறு ஆகிய வசதிகளுடன் கூடிய நிலம் கோயிலுக்குத் தானமாக வழங்கப்பட்டது. கோயிலில் ஆதிரைத் திருவிழா, திருக்கார்த்திகை விழா, உத்திரத் திருநாள் விழா ஆகியன கொண்டாடப்பட்டன. இவற்றிற்காக நிலமும், பொருளும் கொடையாகத் தரப்பட்டன. ஆரணி ஜகிர்தார் மலைமீதுள்ள ஈசருக்கு அஷ்டபந்தன கும்பாபிஷேகம் நடத்தினார்.

அதிகாரிகள் கோயிலுக்கு வரிகளைத் தானமாக அளித்தனர். மல்லப்ப நாயக்கர் என்பார் 33½ பணம் மதிப்புடைய வரியை அளித்தார். ஒரு தறிக்கு ஓர் ஆண்டுக்கு 1½ பணம் வீதம் தேவிகாபுரத்தில் வசூலான பட்டாடை நூலாயம் ஆலயத்திற்குக் கொடுக்கப்பட்டது. தேவிகாபுரத்தில் புகழ் பெற்றிருந்த பிட்சா விருத்தி மடத்தின் தலைவர்களான ஈசான சிவாச்சாரியாரும், விசுவேஸ்வர சிவாச்சாரியாரும் ஆலய அலுவல்களில் ஈடுபாடு கொண்டிருந்தனர். இம்மடம் செய்யாற்றின் தென்புறத்தில் இருந்தது. ஆட்சியில் பணிபுரிந்த சில அலுவலகர்களின் பெயர்களைக் கல்வெட்டுக்கள் மூலம் அறியலாம். கோயிலைக் கணகாணிக்கும் அதிகாரி 'கோயில்கேள்வி' எனப்பட்டார். அரசர் அருகிலிருந்து தாம்பூலம் கொடுப்பவர் 'அடைப்பம்' எனப்பட்டார். அரசரின் அன்றாட வேலைகளைக் குறித்துக் கொண்டு அவ்வப்போது நினைவூட்டியவர் 'அட்டவணை' எனப் பெயர் பெற்றார். கீழ் அதிகாரிகள் உயர் அதிகாரிகளையும், சிற்றரசர் பேரரசரையும் 'சுவாமி' என்றே மரியாதையாக அழைத்தனர். இவ்வாறு இக்கல்

வெட்டுக்கள் பல தரப்பட்ட தகவல்களை அளிக் கின்றன.

அம்மன் சந்நிதி வீதியில் சுந்தரமூர்த்தி நாயனார் பெயரால் ஒரு திருமடம் உள்ளது. இம்மடத்தைச் சேர்ந்த சிவனடியார்கள் நித்திய வழிபாடுகளில் ஈடுபடுவதுடன், சுக்கிர வாரத்தன்று தேவாரத் திருமுறைகளை ஓதியவாறு அம்மன் கோயிலில் பூஜைகளில் பங்கேற்பதுண்டு. இங்கு நால்வர் திருநட்சத்திரக் குருபூஜை விழாவும், மார்கழி தனுர் வழிபாடும் முறைப்படி நடைபெறும்.

தேவிகாபுரத்தின் கிழக்குப் பகுதியில் மாரியம்மன், முத்தாரம்மன், தருமராஜர், ஆஞ்சநேயர் ஆகியோர் களுக்கான 'சிறுகோயில்கள்' அமைந்துள்ளன. ஊருக்கு மத்தியிலுள்ள தலவிநாயகர் அற்புத வேலைப்பாடு மிக்க திருவுருவத்துடன், ஆறடி உயரத்தில், கிழக்கு நோக்கியவாறு காட்சியளிக்கிறார். ஊருக்கு வடக்கே வீரகாளியம்மன் ஆலயம் அமைந்துள்ளது.

இத்தலத்திற்கு அண்மையிலுள்ள வாழைப்பந்தல் என்ற ஊரில் உமையன்னை வாழை இலையால் பந்தல் ஏற்படுத்தி ஒரு சிவலிங்கத்தைத் தாபித்து வழிபாடு புரிந்து வந்தாள். அப்பகுதியில் கடும் வறட்சி ஏற்பட்டது. முருகப்பெருமானிடம் நீர் அளிக்குமாறு அம்மன் கேட்டுக் கொண்டாள். முருகன் அம்புகளை மலைமீது செலுத்தி நீரைப் பொழியச் செய்து பூஜையை நிறை வேற்ற உதவினான். சேயான முருகன் உண்டாக்கிய ஆறு சேயாறு எனப்பட்டது அதுவே, செய்யாறு என்ற பெயருடன் தேவிகாபுரத்திற்கு அருகே ஓடுகிறது.

முருகப் பெருமான் செலுத்திய அம்புகள் மலையில் தவம் புரிந்து வந்த சில முனிசிரேஷ்டர்களைக் கொன்றது. அதனால் நீரின் நிறமும் இரத்தச் சிவப்பாக

மாறியது; முருகனையும் பாவம் பற்றிக் கொண்டது. பார்வதி உரைத்தவாறு முருகன் ஏழு இடங்களில் சிவலிங்கங்களை நிறுவி வழிபட்டார். அவ்வாறு முருகன் வழிபட்ட இடங்கள் "சப்த கரைகண்ட க்ஷேத்திரங்கள்" எனப்பட்டன. இவை தேவிகாபுரத்திற்கு அருகே அமைந்துள்ளனவாம். பர்வதமலை, வில்வாரணிமலை, பூண்டி, சம்பத்கிரி, போளூர்,. படவேடு, குன்னத்தூர் ஆகிய திருத்தலங்கள் தேவிகாபுரத்தைச் சுற்றி அமைந்துள்ளன.

# 17. நயினார் கோயில்

(இராமநாதபுரம் மாவட்டம்)

## நாகநாதஸ்வாமி ஆலயம்

*சீர்தந்த வுருவமிரண்டிணையாகி யுருவருத்*
*தேசொன்றாகிப்*
*பேர்தந்த வருவமொரு நான்காகிப் பஞ்சசத்திப்*
*பெருமானாகிப்*
*பேர் தந்த வருள்வடிவா யெல்லாமா யல்லவுமா*
*யிருக்கும் வையை*
*நீர் தந்த தடம்புடை சூழ் மருதூர் நாகேசர் பத*
*நெஞ்சுட் கொள்வாம்.*

(தென் திருமருதூர்த் தலபுராணம்)

பாண்டி நாட்டிலுள்ள திருமருதூர் எனும் தலத்தில் நாகநாதர் கோயில் ஒன்று இருந்தது. தென்னாட்டில் முகம்மதியர் ஆட்சி ஓங்கியிருந்தபோது பீஜப்பூர் சுல்தானின் தானைத் தலைவனான 'முல்லா சாகிப்' என்பான் இப்பகுதியில் தங்கியிருந்தான். அவனது பெண் பேசும் சக்தியற்றிருந்தாள். ஒரு நாள் இருவரும் நாகநாதர் கோயிலுக்கு வந்தபோது, அங்குள்ள லிங்கத்தைக் கண்ட ஊமைப் பெண் "அல்லா நயினார் ஆண்டவா!" எனக் கூவினாள். முல்லா சாகிப்பும் "நீரே அல்லா நிசத்தெறிந்தேன்" என்று மகிழ்ச்சியுடன் இயம்பினான். அன்று முதல் இவ்விடம் நயினார் கோயில் எனப் பெயர் பெற்றது. இங்குள்ள ஈசரை ஏராளமான

முகம்மதியர்கள் இன்றும் வழிபடுகின்றனர். கோமல் நா. அய்யாச்சாமி அய்யரின் 'நாகநாதர் சதகம்' இச் செய்தியை "முல்லா மகளா மூங்கையள் முன்னாள் அல்லா நயினாராண்டவா வென்ன" எனத் தெரிவிக் கிறது.

"தாய்பேசு பேசெனவே சாற்றினும்பே சாமூங்கை
வாய்பேச வைத்தமகா மந்திரமே என"

(சேதுபதி விரலிவிடு தூது)

இவ்வூர் பரமக்குடியிலிருந்து 12 கி.மீ. வடகிழக்கிலும், இராமநாதபுரத்திலிருந்து 25 கி. மீ. வடமேற்கிலும் அமைந்துள்ளது. தற்போது பரமக்குடி, இராமநாத புரம் ஆகிய இடங்களிலிருந்து நயினார் கோயிலுக்குப் பேருந்துகள் உள்ளன.

நயினார் கோயில் எனும் சிற்றூரின் மையப் பகுதி யில் ஆலயம் அமைந்துள்ளது சுமார் 1-64 ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்துள்ள இவ்வாலயத்தின் வாயில் மேற்குப் புறத்திலுள்ளது. இவ்வாலயத்தில் 21 அடி உயரமுள்ள விமானம், இரண்டு பிரகாரங்கள், ஒரு கருவறை, ஒரு அர்த்த மண்டபம், ஒரு மகாமண்டபம், ஒரு கலியாண மண்டபம் ஆகியன அமைந்துள்ளன. சுதையினாலான அழகிய சிற்பங்கள் விமானத்தை அலங்கரிக்கின்றன.

மிகவும் பழமையான இவ்வாலயத்தில் இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் இராமநாதபுர அரசர் பல திருப்பணிகளைச் செய்வித்தார். தட்சிணாமூர்த்தி, விநாயகர், சுப்பிரமணியர், ஆகியோருக்குத் தனி சந்நிதிகள் எழுந்தன. சுவாமி, அம்மன் ஆகியோருக் கான அழகிய உற்சவ விக்கிரகங்கள் பஞ்சலோகத்தால் செய்யப்பட்டன. திரௌபதியம்மன், அய்யனார், பிடாரியம்மன் ஆகியோரும் இவ்வாலயத்தில் இடம் பெற்றுள்ளனர்.

இவ்வாலயத்தில் நாள்தோறும் ஆறுகால பூஜை நடைபெறுகிறது. சுமார் மூன்று லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பழைய, புதிய நகைகள் ஆலயத்திலுள்ளன. ஆலயத்திற்குச் சொந்தமாக சுமார் இருநூற்றைம்பது ஏக்கர் நன்செய், புன்செய் நிலங்கள் உள்ளன. கடந்த பதினைந்து ஆண்டுகளில் பல பழைய வாகனங்கள் புதுப்பிக்கப்பட்டன. சில புதிய வாகனங்களும் ஏற்பட்டன. வெள்ளி முலாமிட்ட பதினேழு வாகனங்கள் உபயோகத்திலுள்ளன. அவற்றுள் ரிஷபம், கிளி, அன்னம், பூதம், குதிரை, யானை, நந்தி, காமதேனு, மயில், பெருச்சாளி, சிங்கம் ஆகியன முக்கியமானவை. ஆலயத்தின் மதில்கள், மண்டபங்கள், உட்புறத் தள வரிசைகள் ஆகியன புதுப்பிக்கப்பட்டன. தலைமுடி இறக்க விரும்புவோருக்கு வசதியாக இடம் ஒதுக்கப் பட்டுள்ளது.

இங்கு நிகழும் திருவிழாக்களுள் பத்து நாட்களுக்கு நடைபெறும் வைகாசி வசந்தோற்சவமும், பதின்மூன்று நாட்களுக்கு நடைபெறும் ஆடிப்பூர அம்மன் உற்சவமும் குறிப்பிடத்தக்கன. தைப்பூசத்தன்று தீர்த்த உற்சவம் நடைபெறும். அன்று சுவாமியும், அம்மனும் சுமார் மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள குணதீஸ்வரர் ஆலயம் வரை செல்வர். பின் அருகிலுள்ள வைகை யாற்றில் தீர்த்தவாரி நடைபெறும். சுக்கிரவாரம், உற்சவம் போன்ற காலங்களில் ஏராளமான பக்தர்கள் இவ்வாலயத்திற்கு வருகை தந்து ஆடு, மாடு, கோழி, சேவல், தானியம், காய்கறி வகைகள், தங்கம், வெள்ளி, பணம் போன்றவற்றைக் காணிக்கையாகச் செலுத்து வதுண்டு. கூரிய முட்கள் தங்களைக் குத்தாமலிருக்க பக்தர்கள் முட்களைரும் காணிக்கையாகச் செலுத்துவர். பக்தர்கள் தங்கள் பிரார்த்தனைகளை நிறைவேற்றும் பொருட்டுக் காது குத்துதல், மொட்டை இடுவது போன்ற செயல்களைப் புரிவதுண்டு. சுவாமிக்குப் பெரிய வைரத்தேரும், அம்மனுக்கு அண்மையில் புதுப்

பிக்கப்பட்ட சிறிய தேரும் உள்ளன. சேதுபதி அரசர்கள் நவராத்திரியின் போது பவனி வருவதற்காக சுமார் 12000 ரூபாய் மதிப்புள்ள கோரதம் ஒன்றைப் பயன் படுத்தியிருந்தனர். அற்புத சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த இந்தக் கோரதத்தை ஸ்ரீ சண்முகராஜேஸ்வர நாகநாத சேதுபதி அவர்கள் நாகநாதர் ஆலயத்திற்கு நன்கொடையாக அளித்தார். விசேட மின்சார விளக்குகள் அமையப் பெற்ற இக்கோரதம வைகாசி வசந்தோற்சவத்தில் எட்டாவது நாளன்றும், ஆடி அம்மன் உற்சவத்தில் பன்னிரண்டாம் நாளன்றும் 'உற்சவர்களைத் தாங்கியவாறு பவனி வரும். திரௌபதி அம்மனுக்குப் பங்குனி மாதத்திலும், அய்யனாருக்குச் சித்திரையிலும், பிடாரியம்மனுக்குப் பங்குனியிலும் விழாக்கள் நடைபெறுகின்றன.

நாமதேவர் எனும் பக்தரின் பாடலைக் கேட்கும் பொருட்டே நாகநாதர் மேற்கு முகமாகக் காட்சியளித்தார். பக்த விஜயம் எனும் நூல் இவ்வரலாற்றை விளம்புகிறது. இச்செய்தியை "வருநாம தேவ கீதங் கேட்க மேற்கு முகமாகத் திரும்புலிங்கம்" என 'நாகாபரணம்' என்ற நூலும்,

"நாமதேவர் நல்லிசை கேட்டுப்
போற்றுமவர்க்காய் மேற்றிசை திரும்பியும்" என

'நாகநாதர் சதகமும்' குறிப்பிடுகின்றன.

மூலவர் யாதொரு கரமும்படாமல் தானே சுயம்புவாகத் தோன்றிய நாகலிங்க மூர்த்தியாவார். ஆலயத்திலுள்ள லிங்கத்திற்குப் பின்புறத்தில் மருத மரத்தடியில் ஈசன் பாம்பு வடிவில் பக்தர்களுக்குக் காட்சியளித்தாராம். அவ்வாறு காட்சியளித்த இடம் இரும்பு வேலியிட்டுப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. பக்தர்கள் கோழி முட்டைகளைக் காணிக்கையாக அவ்விடத்தில் செலுத்துவதுடன் மரத்தடியிலுள்ள மண்ணையும் எடுத்துச் செல்கின்றனர் உடலின் உபாதையுண்டான பகுதியில் அம்மண்ணை

அப்புவதாலும், நீரில் கலக்கிக் குடிப்பதாலும் பிணிகள் அகலும் என்பது பக்தர்களின் அசையாத நம்பிக்கை.

மகாமண்டபத்திலமைந்துள்ள சந்நிதியில் சௌந்தர நாயகி அம்மன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். இச்சந்நிதிக்கு அருகேயுள்ள சுரங்கப் பகுதியில் ஒரு சிறிய நீரோடை உள்ளது. அதிலுள்ள நீர் நோய்களைத் தீர்க்கும் தன்மையைப் பெற்றிருப்பதாக நம்பப்படுவதால் மக்கள் அந்நீரைச் சிறு கலங்களில் எடுத்துச் செல்கின்றார்கள்.

புத்திரப்பேறு வேண்டித் தவமிருந்த ஒரு அந்தணத் தம்பதிகளுக்கு நாகநாதர் அருளால் மகப்பேறு கிட்டியது. ஆலயத்திற்கு அருகேயுள்ள வாசுகி தடாகத்தின் கீழ்க்கரையிலுள்ள புளியமரத்தில் கட்டிய ஒரு தொட்டிலில் அக்குழந்தையை விட்டு விட்டு அத்தமபதிகள் நீராடச் சென்றனர். குழந்தையின் அலறலொலி கேட்டு ஓடிவந்த அத்தம்பதிகளுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி காத்திருந்தது. குழந்தையின் காலைச் சுற்றி ஒரு நாகம் இருப்பதைக் கண்ட அத்தம்பதிகள் இறைவனிடம் குழந்தையைக் காப்பாற்றுமாறு வேண்டிக் கொண்டனர். இறையருளால் அந்நாகமும் குழந்தையை விட்டு நீங்கியது. அவ்விடத்தில் தங்களின் நன்றிக் காணிக்கையாக அந்தணத் தம்பதிகள் ஒரு நாகர் கோயிலை எழுப்பினர். சுவாமி சந்நிதிச் சந்தியாவந்தன மண்டபத்திற்கு வடமேற்கேயுள்ள இச்சிறு கோயிலில் மூன்று கால பூஜை நடைபெறுகிறது. நாகநாதர் ஆலயத்திற்கு வடக்கில் மருதவன மாகாளி கோயில் உள்ளது. இக்கோயிலின் முன்புள்ள பத்திரை தீர்த்தத்தில் நீராடி, சிறந்த வரப்பிரசாதியான மாகாளியைத் தொழுது பேறு பெறுபவர்கள் ஏராளம்.

திருமருதூர் என ஆதியில் இத்தலம் வழங்கப்பட்டது. வடமொழியில் முதலில் எழுந்த தல வரலாற்றைத் தமிழில் தலபுராணமாகப்பாடியவர் பெயர்சிறுகம்பையூர்

சிற்றம்பலக் கவிராயர் ஆகும் கிழவன் ரகுநாத சேதுபதியின் மேல் 'துளசிங்கமாலை' எனும் நூலைப் பாடி அதற்குப் பரிசாக 'மிழலைப்பட்டி' எனும் ஊரையே பரிசாகப் பெற்ற பெருமை இவருக்கு உண்டு. ஏட்டுச் சுவடியில் சிதைவுற்றிருந்த வில்வவனப் புராணத்தை வி. சக்திவேல் ஆசாரியார் சீராக எழுதி வைத்துள்ளார். நயினார் கோயிலுக்கு அருகிலுள்ள காடடர்ந்த குடியைச் சேர்ந்த அந்தகக் கவிஞர் 'தலைமலை கண்ட மருதத் தேவர்' 'மருதூர் அந்தாதி' எனும் நூலைப் பாடியுள்ளார். இப்பாடலைப் பாடியவுடன் அவருக்குக் கண் பார்வை கிடைத்ததாம். நிலையாமை பற்றிப் பாடும் வேதாந்த நூலான 'நெஞ்சறி விளக்கம்' கணபதி தாசரால் இயற்றப்பட்டது. வி. சக்திவேல் ஆசாரியார் இயற்றிய நாகாபரணம், கோமல் நா. அய்யாச்சாமி அய்யரின் 'ஸ்ரீநாகநாதர் சதகம்', கணபதி தாசர் இயற்றிய 'நெஞ்சறி விளக்கம்', மஞ்சக் கொல்லை ஆஸ்ரம சுவாமிஜியின் 'சிவாட்சரப்பதிகம்', பல பாடல்களின் தொகுப்பு நூலான 'சத கதம்பம்' ஆகியன இத்தலத்தின் சிறப்பைப் போற்றுகின்றன.

நயினார் கோயிலைச் சுற்றி சாளைகிராமம் வரகுணேஸ்வரர், குணநதிஸ்வரர், இயமனேசுவரம் இயமனீசுவரர், கொழுவூர் நாகநாதீஸ்வரர் ஆகிய நான்கு ஆலயங்கள் உள்ளன. இந்நான்கு இலிங்கங்களுக்கு நடுவே நாகநாதர் எழுந்தருளியிருப்பதால் நயினார் கோயில் பஞ்சலிங்கத் தலமென வழங்கி வருகிறது. ஆலயத்தின் புறத்திலுள்ள வாசுகி தீர்த்தமும், மங்கள தீர்த்தமும் இங்கு புண்ணிய தீர்த்தங்களாகும். இவை தவிர ஞானதீர்த்தம், பஞ்சமகாதீர்த்தம், இந்திர தீர்த்தம், அக்கினி தீர்த்தம், இயம தீர்த்தம், நிருதி தீர்த்தம், வருண தீர்த்தம், வாயு தீர்த்தம், குபேர தீர்த்தம் ஆகியவற்றின் பெருமைகளைத் தலபுராணம் போற்றுகிறது.

சூரிய குலத்திலுதித்த திரிசங்கு என்ற அரசன் வசிட்டர் அளித்த சாபத்தால் சண்டாள உருவம் அடைந்தான். அதே உருவத்துடன் திரிசங்குவை வானுலகம் அனுப்ப விசுவாமித்திரர் முன் வந்தார். தான் நடத்தத் திட்டமிட்டுள்ள வேள்வியில் பங்கேற்கு மாறு வசிட்டரின் சீடர்களான ஆயிரம் முனிவர்களை அழைத்தார். அம்முனிவர்கள் விசுவாமித்திரரின் அழைப்பை ஏற்க மறுத்தனர். இதனால் ஆத்திரம் அடைத்த விசுவாமித்திரர் அம்முனிவர்களை வேடர்க ளாகுமாறு சபித்தார். வேடர்களாக மாறிய அம்முனிவர்கள் மருதவனத்தில் சில காலம் தங்கி மருதூர் ஈசரைத் தொழுதனர். அம்முனிவர்களின் சாபம் நீங்கியது. மருதூர் இறைவனும் ஒரு அந்தணர் உருவில் முனிவர்களுக்கு ஞான உபதேசம் புரிந்தார். அங்கு வானுலகத்தோர் மருத மரங்களாகவும், வில்வ மரங்களாகவும் உருவெடுத்து ஈசனைத் தரிசித்து வந்தனர்.

உலகில் நிலையாமையை அறிந்த மாணிபத்திரன் என்ற கந்தர்வ அரசன் கௌதம முனிவரின் ஆசியுடன் மருதவனத்தில் தவம் மேற்கொண்டான். ஒரு வருட காலம் உண்மையான பக்தியுடன் வழிபடும் மன்னர் முன் நாகநாதர் காட்சியளித்தார். தனது மனதை அடக்கி மனக்குழப்பத்தை நீக்குமாறு நாகநாதரிடம் அரசன் வரம் கோரினான். இறையருளால் அவனது மனக்குழப்பம் நீங்கியது.

இறைவனால் தென் திசைக்கு அனுப்பப்பட்ட அகத்தியர் விந்திய மலையின் செருக்கை அடக்கிய பின் பல தலங்களைத் தரிசித்தவாறு மருதூர் சென்றார். மருதூரில் இறைவனை அன்புடன் பூசித்து வந்த நாக நம்பி என்பாருக்கும், அவரது மனைவியான தேவ நங்கைக்கும் உமையம்மை பெண் குழந்தையாகப் பிறந் தார். கல்வி, கேள்விகளில் தேர்ச்சியுற்று மணப்

பருவத்தை அப்பெண் அடைந்தாள். வைகாசி மாதத்தில் ஒரு உத்தம வெள்ளிக்கிழமையன்று சிவபெருமான் நம்பியின் மகளாக வளர்ந்து வந்த உமாதேவியைத் திருமணம் புரிந்து கொண்டார்.

இக்காட்சியை அகத்திய முனிவரும் கண்ணுற்றார். அரவரசனான ஆதிசேடனுக்குப் பிறவாப் பேரின்பம் பெற வேண்டுமென விருப்பம் ஏற்பட்டதால் சிவனாரைத் துதித்தான். சிவனாரின் அறிவுரையின் பேரில் ஆதிசேடன் ஒரு அந்தண வடிவம் தாங்கி மருதூர் சென்று தவமியற்றினார். அங்கே ஒரு அழகிய கோயிலும், பல சந்நிதிகளும், இறைவனுக்குரிய ஆபரண வகைகளும் ஏற்படுத்தி விழா நடத்தினார். அறிவு, ஆற்றல் ஆகியன மிகுந்த ஞானதேசிகன் என்ற ஞானியின் உருவில் சிவபெருமான் காட்சியளித்தார். ஞானம் பெறுவதற்கான போதசாலை ஒன்று நிறுவப்பட்டது. மருதூரில் முறைப்படி நீராடி வழி பட்டுவந்த சேடனுக்கு ஞானதேசிகன் நல்லுபதேசமும், பேரின்ப வாழ்வும் அளித்தார். ஆதிசேடன் அடைந்த பாக்கியத்தைக் கண்டு அட்டமா நாகங்கள் (எட்டு நாகர்கள்) மனித உரு வெடுத்து மருதூரில் எழுந்தருளியுள்ள நாகநாதரைத் துதித்தனர். அட்டமாசித்தியை நாகநாதர் அந்த நாகங்களுக்கும் அளித்தார்.

கோதாவரி நதிக்கரையில் வாழ்ந்து வந்த வேதவிரதன் என்ற அந்தணனுக்கு மதிமான் என்ற புத்திரன் பிறந்தான். சிறு வயதிலேயே பெற்றோரை இழந்து, வறுமையால் பீடிக்கப்பட்ட மதிமான் தென்னாடு சென்றான். மருதூரை அடைந்தவுடன் விமலரிஷி எனும் ஞானியின் தரிசனம் அவனுக்குக் கிடைத்தது. முனிவர் அறிவுறுத்தியவாறு மருதூரில் உரிய முறையில் பூசையை மதிமான் நடத்தினான். ஈசன் மதிமானுக்குப் பொன்முடிப்பு ஒன்றை அளித்து, நல்லறங்களைப் புரியுமாறு அருளினார். கொடிய செயல்களையே புரிந்து

வந்த துற்றெரிசன் என்ற வேடன் சிவராத்திரி அன்று இப்பகுதியில் நற்கதி பெற்றான். பிட்சையேந்தியே வாழ்வு நடத்தி வந்த சுமதிசன் என்ற வேதியன் கபில முனிவரின் உபதேசத்தை ஏற்று மருதூரில் முறைப்படி வழிபட்டான். ஈசன் அருளால் அவனது வறுமை நீங்கியது. சப்த கன்னியரும் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றனர்.

மருதூரை அடுத்த காடடர்ந்தகுடி என்ற சிற்றூரில் மறவர் குலத்தைச் சேர்ந்த 'தலைமலை கண்ட மருதத் தேவர்' என்ற தலைசிறந்த புலவர் வாழ்ந்து வந்தார். பிறவியிலேயே கண் பார்வை பெறாதிருந்த அப்புலவர் இறைவனை வழிபடுவதிலேயே காலம் கழித்து வந்தார். மறவர் குலத்திற்கேற்ற வீரச்செயல் எதுவும் புரியாத தேவருக்குப் பெண் கொடுக்க எவரும் முன்வரவில்லை. திருப்புவனம் என்ற தலத்தில் வாழ்ந்து வந்த தமிழ்ப் பற்றுமிக்க தனவணிகர் ஒருமுறை ஒரு பாடலை முடிக்க முடியாமல் திணறிக் கொண்டிருந்தபோது தேவர் அப் பாடலை முடித்துக் கொடுத்தார். வணிகர் அளித்த பொருட்களுடன் மருதூருக்குத் தேவர் திரும்பினார். இப்பொருளின் உதவியால் ஊரார் மெச்சும் அளவு இல்லற வாழ்வில் திளைத்து வந்தார். ஒருமுறை மருதீசர் அவர் முன்பு தோன்றித் தன் பெயரால் 'மருதூரந்தாதி' என்ற நூலைப் பாடுமாறு கூறி, அதற்கு முதலடியும் எடுத்துக் கொடுத்தார். அவ்வாறு எழுந்ததே 'மருதூர் அந்தாதி' என்ற சிற்றிலக்கிய நூல்.

இவ்வாலயம் இராமநாதபுரம் சமஸ்தானத்தின் மேற்பார்வையில் உள்ளது. அத்தேவஸ்தானத்தின் முயற்சியால் நயினார் கோயிலில் விடுதிகள், சத்திரங்கள் ஆகியன கட்டப்பட்டுள்ளன.

# 18. புதுக்கோட்டை

(புதுக்கோட்டை மாவட்டம்)

## அதிஷ்டானம்

தமிழகத்தில் பண்டைக்காலம் தொட்டே இறைவன் எழுந்தருளியுள்ள ஆலயங்கள் பல தோன்றின. கோயில் என்ற சொல் இறைவன் உறையும் இடத்தையே உணர்த்தும். கரக்கோயில், ஞாழற்கோவில், கொடிக்குக் கோயில், இளங்கோயில். மணிக்கோயில், ஆலக்கோயில் போன்ற பலவகைப்பட்ட கோயில்களை அப்பரின் தேவாரப்பாடலொன்று குறிப்பிடுகிறது. உயர்ந்த குறிக்கோளுக்காக உயிர்நீத்த தியாகிகளின் பூதவுடல் மீது எழுப்பப்பட்ட நடு கற்கள், பள்ளிப் படைகள் போன்றனவும் வழிபாட்டுச் சின்னங்களாகவே கருதப் பட்டன. இது போலவே ஞானிகள் ஜீவசமாதியடைந்த இடத்திலும் இறைவனின் திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்து இறைவழிபாடு நடத்தி வருவதுண்டு. திருவான் மியூரிலுள்ள பாம்பன் சுவாமிகள் சமாதி, திருவையாற்றி லுள்ள தியாக பிரம்மத்தின் சமாதி, திருவொற்றியூரி லுள்ள பட்டினத்தாரின் சமாதி ஆகியன இந்த வரிசையில் இடம் பெறுகின்றன. இது போலவே சதாசிவ பிரம்மேந்திர சுவாமிகளின் சமாதி அமைந்துள்ள புதுக் கோட்டை அதிஷ்டானம் புவனேஸ்வரியம்மனின் அருட் பீடமாகத் திகழ்கிறது.

புதுக்கோட்டை நகரில் அதிஷ்டானம் தோன்றிய தற்குக் காரண கர்த்தாவாக இருந்தவர் ஜட்ஜ் சுவாமிகள் என்று பாராட்டப்படும் ஸதாசிவ பிரம்மேந்திர ஸரஸ்வதியவதூத சுவாமிகள் ஆவார். இவரது வாழ்க்கை வரலாறு படிப்போரின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மையது. கோதாவரி நதிதீரத்தில் அமைந்த தவளேஸ்வரம் எனும் திவ்விய க்ஷேத்திரத்தில் வாழ்ந்து வந்த வேதமூர்த்தி சாஸ்திரிகள் என்பவர் விசாகப் பட்டினத்திற்குச் சென்றிருந்த போது அவருக்கு ஒரு ஞானக் குழந்தை பிறந்தது. அவர் உரிய வயதில் வேதாந்த சாஸ்திரங்களில் பயிற்சியும், பள்ளியில் கல்வியும் பயின்றபின் சென்னை சட்டக் கல்லூரியில் சட்டப்படிப்பில் தேர்ச்சி பெற்றார். சிறந்த வழக்கறிஞராக விளங்கிய இச்சத்புத்திரரைத் திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் பிரதம நீதிபதியாக நியமித்தனர். இப்பதவி வகித்த ஆறு ஆண்டுகளில் நீதிபதி பல மொழிகளில் தேர்ச்சி பெற்றுப் பல நூல்களையும் இயற்றினார். ஒருமுறை ஒரு கொலை வழக்கை விசாரணை செய்து ஒரு குற்றவாளிக்குத் தூக்கு தண்டனை வழங்க வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டது. குற்றம் சுமத்தப் பட்டவன் நிரபராதி என்று அவரது மனதில் தோன்றிய போதிலும் ஆதாரங்கள் அவனுக்கு எதிராக இருந்தன. தனது எண்ணத்தை நிறைவேற்ற இயலாமல் நீதிபதி தவித்தார். நிரபராதியைத் தண்டிப்பதை விடப் பதவியைத் துறப்பதே சிறந்தது என முடிவு செய்தார். தன்னையே நம்பியுள்ள குடும்பத்தினரைத் துறந்து, உடுத்திய உடையுடன் ஊரைவிட்டுக் கானகம் நோக்கிச் சென்றார். அவரது மனதிலுள்ள இறையுணர்வு சத்குருவை நாடிச் செல்லுமாறு வற்புறுத்தியது. அங்கங்கே அன்பர்கள் மனமுவந்தளித்த உணவை உண்டார். கண்ணில் தென்பட்ட புனிதத் தலங்களையும். ஞானிகளின் சமாதிகளையும் தொழுதார். தனது மனதில் குடிகொண்டுள்ள ஆன்மப் பொருளை எடுத்துணர்த்தவல்ல சத்குருவைப் புனிதத் தலங்களிலும்,

கானகங்களிலும், யோகியரிடையேயும் தேடினார். காஞ்சியம் பதியிலுள்ள புண்ணிய ஆலயங்களில் இறை வழிபாடு செய்து சத்குருவைக் காட்டுமாறு வேண்டினார். காஞ்சியிலுள்ள உபநிடத மடத்திற்குச் செல்லுமாறு காமாட்சியம்மன் வழிகாட்டினார்.

நூற்றெட்டு உபநிடதங்களுக்கும் ஆழ்ந்த உரையை இயற்றிய உபநிஷத் ஸரஸ்வதி சுவாமிகள் தோற்றுவித்த காட்டிய மடத்தையடைந்தார். தனக்கு ஞானகுருவைக் [illegible]மாறு அம்மடத்தின் தலைவரைப் பணிந்தார். நீதிப[illegible]ர்கள் ஞானமார்க்கம் பெறுவதற்குச் சிறிது கால[illegible] உள[illegible]தெனை அறிந்த மடத் தலைவர் அம் மடத்தில் சிலகாலம் [illegible]ங்கி அவரது முயற்சியைத் தொடருமாறு கேட்டுக் கொ[illegible]ார். வேதம், சாத்திரம் உபநிடதம் ஆகியவற்றில் பயிற்சி [illegible]பற்றார். பின்னர் காளஹஸ்தி சென்று பரத்வாச முனிவா தவமியற்றிய பரத்வாச குளக்கரையை அடைந்தார். அவரது [illegible]ப்பம் கைகூடும் காலம் வந்துவிட்டது.

பரத்வாச குளக்கரையிலுள்ள சிறு ஆசிரமத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண அவதூத மகராஜ் எனும் மகான் வாழ்ந்து வந்தார். மௌன விரதத்தை மேற்கொண்டிருந்த அந்த மகான் தனது கடைக்கண் பார்வையாலும், புன்முறுவலாலும் அடியார்களுக்கு அருள்பாலித்து வந்தார் ராமகிருஷ்ண அவதூதரும்தான் எதிர்பார்த்திருந்த சீடன் வந்துள்ளதை அறிந்தார். இருப்பினும் சீடரைச் சோதிக்க திருவுளம் கொண்டார். சுவாமிகள் அழைப்பை எதிர்பார்த்தவாறு நீதிபதி ஒரு வாரம் காத்திருந்தார். பின்னர் ஓர் இரவில் கண்களில் அருள் நோக்குடன் அவதூதர் குடிலை விட்டு வெளியே வந்தார். சீடர் அவரது காலடியில் விழுந்து உண்மை ஞானத்தை உணர்த்துமாறு பணிந்தார். மௌனவிரதம் கலைந்து ஸ்ரீமன் நாராயணனின் திருநாமத்தை உச்சரித்தபின் சுவாமிகள் நீதிபதியவர்களுக்கு நல்வழி

காட்டினார். "அவதூத சன்னியாசப் பரம்பரையின் ஆதிநாயகரான தத்தாத்ரேய முனிவர் காட்டிய வழியில் உயர்ந்தொழுகிய சுகப்பிரம்மமான சதாசிவ பிரம்மத்தின் திருவருள் நின்னை அடையும். அவதூத ஆஸ்ரமம் ஏற்றுச் 'சதாசிவோம்" என்ற தீக்ஷாநாமம் பெறுவாய். திகம்பரனாய் நாடு முழுவதும் வலம் வந்து நிஷ்டையில் ஈடுபட்டுப் பிரம்மேந்திரனாக விளங்குக," என சுவாமிகள் கூறினார். உபதேச மந்திரத்தை உணர்த்தி நெரூருக்குச் செல்லுமாறு கூறினார். அவதூதர் தூதர் முன்னோடியான ஆதி சதாசிவ பிரம்மேந்தி ,சிவ அஷ்டகம் ஐந்திடங்களில் சமாதியடைந்ததாகச் நதிக்கரையிலுள்ள இயம்பும். அவையாவன: நரும கரையிலுள்ள மானா ஓங்கார க்ஷேத்திரம்; வை லுள்ள நெரூர்; கங்கைக் கரை மதுரை; காவிரிக் க லுள்ள காசி· சிந்து நதிக்கரையிலுள்ள கராச்சியிலுள்ள காவிரிக் ரையிலுள்ள தலமான நெரூரில் நீடுபதி சிலகாலம் நிஷ்டை புரிந்தார். வடபுலம் சென்று ஹரித்வாரம் வரை யாத்திரை புரிந்தார். பின்னர் தென்புலம் திரும்பிப் பொதிகைமலை வழியாக மானாமதுரையடைந்தார். அங்குள்ள சிவாலயத்தின் அருகேயுள்ள ஆதி பிரம்மேந்திரரின் சமாதியருகே நிஷ்டையிலமர்ந்தார். சதாசிவ பிரம்மேந்திரரின் மகிமையை அறியாத சில அறிவிலிகள் அவர் நிஷ்டையிலிருந்த போது அவரது நீண்ட முடியையும், தாடியையும் நீக்கினார்கள். இதுவும் இறைவன் செயல் என்று எண்ணியவாறு தனது பணிகளைத் தொடர்ந்தார். வயோதிக நிலையில் திரிசிரபுரம் தாயுமானவர் சந்நிதியைத் தரிசனம் செய்தபோது தனது அந்திமகாலம் நெருங்கி விட்டதாக அறிந்தார்.

தனது சமாதி அமைவதற்குத் தகுந்த இடம் புதுக்கோட்டை நகரமே என்று சதாசிவ பிரம்மேந்திரர் முடிவு செய்தார். கால்நடையாகவே புதுக்கோட்டை நகரை நோக்கிச் சென்றார். புதுக்கோட்டைக்கு 12 கி.மீ. தொலைவிலுள்ள நார்த்தா மலையிலுள்ள

விஜயாலய சோழீஸ்வரம் என்ற சிவாலயத்தில் ராஜ யோக நிலையிலமர்ந்தார். சதாசிவ பிரம்மேந்திரரின் வரலாற்றை அறியாத போதிலும், ஒரு மகான் நிர்விகல்ப சமாதியடையும் நிலையிலுள்ளதை அறிந்த சில அன்பர்கள் அவரைச் சிவிகையில் சுமந்து புதுக்கோட்டை நகர்வரை எடுத்து வந்தனர். பல்லவன் குளக்கரையி லிருந்த துறவிகள் மடத்திக்கு இவ்வூர்வலம் வந்தது. தனது பிறவியின் பயனை அடைந்துவிட்ட நிம்மதியுடன் சதாசிவ பிரம்மேந்திரர் என்ற ஜட்ஜ் சுவாமிகள் நிர்விகல்ப சமாதியில் நிறைவு பெற்று, இறைவனுடன் ஒன்றாகக் கலந்தார். இவருடைய இயற்பெயர் எவருக்கும் தெரியவில்லை.

இச்செய்தி புதுக்கோட்டை மன்னரை எட்டியது. மன்னரின் திவானான வெங்கடராமதாச நாயுடு என்பார் ஜட்ஜ் சுவாமிகளுடன் இளமையில் நன்கு பழகியிருந்தார். சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றை திவான் மூலம் மன்னரும், மக்களும் அறிந்தனர். நகரின் வடகிழக்குப் பகுதியில், அரசுக்கு உரிய ஒரு தூய்மையான இடத்தில், சமாதியை அமைக்க அரசர் உத்தரவிட்டார். வேத கோஷங்களும், இன்னிசையும், முழங்க, முப்புரி நூல் அந்தணர் சிவிகையைச் சுமந்து வந்து அரசர் அன்புடன் அளித்த இடத்தில் சதாசிவ பிரம்மேந்திரரின் பூதவுடலைச் சமாதியினுள் அடக்கம் செய்தனர். சமாதி பூஜைக்கு வேண்டிய வைபவங்களும், அதன் பின் நிறைவேற வேண்டிய சடங்குகளும் முறையாக நடந்தேறின. இதுவே புதுக்கோட்டை அதிஷ்டானம் தோன்றிய வரலாறு.

இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் பூஜைகள் சில காலம் ஒழுங்காக நடை பெற்று வந்தன. சிலகாலத்திற்குப் பின் மக்கள் அதிஷ் டானத்தை மறந்தனர். நாளடைவில் அதிஷ்டானம் சிர்குலைந்து பூமியில் புதையுண்டது. மறைந்து போன

அதிஷ்டானத்திற்குப் புனர்வாழ்வு அளித்த பெருமை சதாசிவ பிரம்மேந்திரரின் அன்புச் சீடரான ஸ்வயம் பிரகாச பரிவ்ராஜக பிரம்மேந்திர சரஸ்வதி சுவாமிகளையே சாரும்.

தென்னாற்காடு மாவட்ட த்திலுள்ள கல்பட்டு என்ற ஊரில் இராமஸ்வாமி சாஸ்திரிகள், ஜானகியம்மை தமபதியருக்கு 28-11-1871 அன்று ஒரு சத்புத்திரன் அவதரித்தார். அக்குழந்தைக்குக் கிருஷ்ணமூர்த்தி என்று பெயரிட்டனர். பஞ்சகாலத்தில் கல்பட்டை விட்டு நீங்கி தஞ்சைத் தரணிக்கு அக்குடும்பம் சென்றது. கிருஷ்ணமூர்த்தியும் சிறுவயதில் உரிய கல்வி பயின்று, அரசு அலுவலகத்தில் வேலையில் சேர்ந்தார். உள்ளத்தில் ஆன்மிக தாகம் பொங்கியெழுந்ததால் சிறிது காலததில் பதவியையும், குடும்பத்தையும் உதறினார். காசிக்குச் சென்று பல ஞானிகளை அணுகினார். பெற்றோரின் அனுமதி இன்றி ஓடிவந்த ஒருவரை ஏற்றுக் கொள்ள எவரும் முன் வரவில்லை. தமிழகம் திரும்பிப் பல காலம் அலைந்து திரிந்த பின் மானாமதுரையில் நிஷ்டையிலிருந்த சதாசிவ பிரம்மேந்திரரைக் கண்டார்.

சதாசிவ பிரம்மேந்திரரும் தனக்கேற்ற சீடன் கிடைத்ததாக எண்ணினார். ஏழு நாட்கள் தன்னைப் பின் தொடரச் செய்தார். கிருஷ்ணமூர்த்தி மீது கல்லெறிந்து அவரது பொறுமையைச் சோதித்தார். 1900ம் ஆண்டு ஆனி மாதம், பௌர்ணமி நன்னாளில் சதாசிவ பிரம்மேந்திரர் கிருஷ்ணமூர்த்தியைச் சீடராக ஏற்று 'ஸ்வயம் பிரகாசர்' என்ற தீக்ஷா நாமத்தை அளித்தார். நல் உபதேசத்தை அளித்து, அவதூதருக்கான கோலத்தை ஏற்குமாறு கட்டளையிட்டார். திருவண்ணாமலை போன்ற பல திருத்தலங்களுக்குச் சென்று, பல சோதனைகளுக்கு உட்பட்ட பின் ஸ்வயம் பிரகாசர் சேலம் மாவட்டத்திள்ள சேந்தமங்கலத்தில் தங்கினார். திர்வாண கோலத்தில் அங்கும், இங்கும் திரிந்து கொண்டிருந்த சுவாமிகளுக்கு முகமதியர்களா

லும், சில அறிவிலிகளாலும் பல இன்னல்கள் ஏற்பட்டன. அவரது மகிமையையுணர்ந்த பல அன்பர்கள் அவரைத் தரிசித்து மனச் சாந்தியடைந்தார்கள். ஸ்வயம் பிரகாசர் நிர்விகல்ப சமாதி நிலையடைய எண்ணினார். அன்பர்கள் அவருக்காகக் 'குகாலயம்' என்ற ஆசிரமத்தை அமைத்துக் கொடுத்தனர். சேந்தமங்கலத்திலுள்ள 'தத்தகிரி' என்ற ஆலயத்தையமைத்து அதில் தத்தாத்ரேயரின் திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்தார்.

ஸ்வயம்பிரகாசர் தம் குருவான சதாசிவ பிரம்மேந்திரர் மீது பேரன்பு கொண்டிருந்தார். அவரை எண்ணியவாறு தியானம் புரிவார். புதுக்கோட்டையில் அவரது குரு மகா சமாதியடைந்த செய்தியையறியாமல் கடுந்தவம் புரிந்து வந்தார். ஜட்ஜ் சுவாமிகள் தான் சமாதியான செய்தியையும், தனது சமாதி பூமியில் புதையுண்ட நிலையையும் சீடரின் கனவில் தோன்றித் தெரியப்படுத்தினார். ஸ்வயம்பிரகாசர் உடனே புதுக்கோட்டை சென்று, குருநாதரின் சமாதியிருந்த இடத்தில் விளக்கை ஏற்றி விட்டு நிஷ்டையில் அமர்ந்தார். புதுக்கோட்டை வாழ் மக்களிடம் அதிஷ்டானம் பற்றிய சிந்தை தோன்ற வேண்டுமெனப் பிரார்த்தித்தவாறு சேந்தமங்கலம் திரும்பினார்.

ஸ்வயம்பிரகாசரின் விருப்பம் கைகூடியது. அதிஷ்டானத்திற்குப் புனர்வாழ்வு தரும் எண்ணம் கொண்ட சிலர் முன்னாள் நீதிபதி பி. வி. ரகுநாதய்யர் தலைமையில் கூடினர். அதிஷ்டானம் இருந்த இடத்தைக் காட்டுமாறு சேந்தமங்கலம் ஸ்வயம்பிரகாசரிடம் விண்ணப்பித்தனர். மிக மகிழ்ச்சியுடன் ஸ்வயம்பிரகாசர் தனது சீடரான சங்கரானந்தரை உடன் அனுப்பி அவ்விடத்திற்கான அடையாளங்களைக் கூறினார் அவ்விடத்தை முன்னாள் நீதிபதி பத்மனாப சாஸ்திரிகள் வாங்கியிருந்தார். அதே இடம் தோண்டப்பட்டு அடிபீடம் விரிவாக்கப்பட்டது.

மண்டபமும், கோபுரமும் அமைக்கப்பட்டன. அதிஷ்டானத்திற்கு முன்புறம் ஒரு கீற்றுக் கொட்டகை போடப்பட்டது. அதிஷ்டானத்தில் மகாலிங்கம் நிறுவப்பட்டது. வேதநாதமும், இன்னிசையும் முழங்க, 1-5-1936 அன்று ஸ்வயம்பிரகாசர் முன்னிலையில் அதிஷ்டான மகா கும்பாபிஷேகம் செவ்வனே நிறைவேறியது. சாதாசிவ பிரம்மேந்திரர் மகா சமாதியடைந்த அவ்விடத்தில் நிஷ்டையிலிருப்போருக்குத் தட்சிணாமூர்த்தி உபதேசம் அளிப்பார் என சுவாமிகள் அருளினார். அதிஷ்டானத்தில் பூஜைக்கு நாள்தோறும் அமுது படைக்கக் காணாம் பேட்டை சிவராமய்யர் என்பார் ஒப்புக் கொண்டார். அதிஷ்டானத்தை நன்கு பராமரிக்கத் தவவலிமை மிக்க புண்ணியவான் ஒருவரை ஸ்வயம்பிரகாசர் தேடினார். வெகுநாள் தேடியபின் ஸ்வயம் பிரகாசரின் எண்ணத்தை ஈடேற்றக் கூடிய ஒருவர் கிடைத்தார். அவரே சாந்தானந்தர். 1958ம் ஆண்டு டிசம்பர் 29ம் நாளன்று ஸ்வயம்பிரகாசர் தத்தகிரியில் தத்தாத்ரேயரின் பீடத்திற்குக் கீழே முதல் மாடியில் தாம் ஒதுக்கிக் கொண்ட இடத்தில் மகாசமாதியானார்.

மதுரை மாவட்டத்திலுள்ள அழகாபுரி என்ற சிற்றூரில் ராமசாமி எனும் அந்தணரின் பத்தாவது குழந்தையாக அவதரித்த சுப்பிரமணியம் என்பவர் தன்னை ஆட்கொள்ளவல்ல சத்குருவை நாடியவாறு குஜராத் மாநிலத்திலுள்ள கிரிநாரில் அமைந்துள்ள தத்தாத்ரேயரின் தத்த பாதுகாபீடம் சென்றார். தியானத்திலிருந்த பாலயோகி சுப்பிரமணியத்திற்குச் சேந்தமங்கலம் செல்லுமாறு உத்தரவு கிடைத்தது. சேலம் மாவட்டம் சேந்தமங்கலத்திலுள்ள சன்னியாசிக் கரடு என்ற குன்றில் தத்தாத்ரேயர் திருக்கோயிலையும், அங்கு வாழ்ந்துவரும் ஸ்வயம் பிரகாசரையும் கண்டார். தனக்கு ஞானோபதேசம் வழங்குமாறு சுப்பிரமணியம் இறைஞ்சினார். முறைப்படிச் சடங்குகளை நடத்திச் சாந்தானந்தா என்ற தீக்ஷா நாமத்தை ஸ்வயம் பிரகாசர்

வற்றை அளித்தார்
வழங்கி நல்லுப தேசங்கள் ர்வாணக் கோலத்தையே
இதுவரை அவதூதர்கள் வாணக் கோலத்தில் திரிந்தபோது.
பூண்டிருந்தனர் ர்கள் இம்சித்ததால் சாந்தானந்தரைக்
பல ஆடை அணிந்து கொள்ளுமாறு ஸ்வயம் பிரகாசர்
றினார். புதுக்கோட்டை அதிஷ்டானத்தின் பொறுப்பையும் அவரிடமே அளித்தார்.

சாந்தானந்தர் அதிஷ்டானத்தையடைந்து ஒரு மரத்தடியில் மௌன விரதம் மேற்கொண்டார். வேப்பிலைக் கொழுந்தே அவரது உணவு. சில காலத்தில் அன்பர்கள் வரவு அதிகமாயிற்று. வடகிழக்கு மூலையில் ஒதுங்குவதற்கு இடமும், உணவும் பக்தர்களால் அளிக்கப்பட்டன. அதிஷ்டானம் நிலவிய இடத்தின் உரிமையாளரான நீதிபதி பத்மனாப சாஸ்திரி அவ்விடத்தைச் சாந்தானந்தருக்கே உரிமையாக்கினார். சிறுவயதிலிருந்தே தான் ஆராதனை செய்து வந்த அன்னை புவனேஸ்வரியின் திருவுருவப் படத்தை அதிஷ்டானத்தில் வைத்துச் சாந்தானந்தர் பூசித்து வந்தார். தனது குருவின் ஆசியுடன் அதிஷ்டானத்தை மேன்மையடையச் செய்ய முயற்சிகள் மேற்கொண்டார்.

அதிஷ்டானத்தில் சிவலிங்கம், தத்தாத்ரேயரின் திருவுருவம் ஆகியவற்றை ஸ்வயம்பிரகாசரே நிறுவியிருந்தார். தென்புறத்தில் விநாயகரின் உருவமும், வடபுறம் முருகனின் உருவமும் சாந்தானந்தரால் நிறுவப்பட்டன. கடல் கடந்து சென்றும், பெருவேள்விகள் புரிந்தும் நிதி சேர்த்தார். 1956ம் ஆண்டு மே மாதம் இருபதாம் நாள் அதிஷ்டானத்தில் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. தமிழகத்தில் முதல் முறையாக அன்னை புவனேஸ்வரிக்கு ஆஸ்தான பீடம் ஒன்றை அமைத்தார். அழகிய சிங்காதனத்தில் புவனேஸ்வரியின் அற்புதமான சிலாவுருவத்தை அமர்த்தினார். ஏகாக்ஷ மந்திரத்திற்கு ஒரு வடிவமும், அதன் தந்திர நுட்பமான மேருவும்

அமைக்கப்பட்டன. கடந்த 22 வருடங்களாக உலக நன்மைக்காக அன்னை பு... ர் ஹோமயம் நடைபெற்று வருகிறது. உலகிற்கு அருள் சுர... ஹானாக இருந்து உலகின் நன்மைக்காகவே சாந்தா... வாழ்ந்து வருகிறார். இவரது முயற்சியால் அவதூதர் மங்கலம் தத்தபீடமும், சேலம் கந்தாஸ்ரமும் நல்லமுறையில் இயங்கி வருகின்றன.

கோபுர வாயில் வழியே அதிஷ்டானத்தினுள் நுழைந்தவுடன், பக்தி மணமும், அமைதியும் நிறைந்துள்ளதைக் காணலாம் உள்ளே பற்பல திருவுருவங்கள் உள்ளன. நான்கு கரங்களுடைய வராக மூர்த்தி ஆயுத பாணியாகக் காட்சியளிக்கிறார். வீணையேந்தியவாறு வெண்தாமரை மலரில் வீற்றிருக்கும் கலைவாணியைக் காணலாம். தனி சந்நிதியில் பத்து கரங்களுடன் ஆவேச உருவமாகக் காளி தோற்றமளிக்கிறார். சிவலிங்கம், பழனியாண்டவர், முருகன், விநாயகர் ஆகிய உருவங்களும் இடம் பெற்றுள்ளன. பஞ்சமுக விநாயகர், பஞ்சமுக அனுமன் ஆகியோரும் பத்து கரங்களுடன் பிரம்மாண்டமாகத் தோற்றமளிக்கின்றனர். தங்கத் தகட்டால் பொதியப்பெற்ற லக்ஷ்மியின் திருவுருவங்கள் சிலவற்றையும் காணலாம். இவற்றின் அருகே அன்னை புவனேஸ்வரி கருணை ததும்பும் முகத்துடன் காட்சியளிக்கிறார்.

பராசக்தியின் தசமஹா வித்யைகளில் ஒரு அம்சமே புவனேஸ்வரியாவாள். உலகங்களுக்கெல்லாம் ஐஸ்வர்யத்தை அவளே அளிக்கிறார்; உலக மாயா கன்மங்களை நீக்குவதைக் குறிக்கப் பாசத்தையும் ஆணவ மலத்தையடக்குபவள் என்பதையுணர்த்த அங்குசத்தையும் ஏந்தியுள்ளாள். அச்சத்தைப் போக்கி அமைதியை அளிக்க அபயகரமும், சகல செல்வங்களையும் அளிப்பதையுணர்த்தும் வரதகரமும் கொண்டுள்ளாள். வெள்ளிக்கிழமைகளில் மின்னும் அணிகலன்களுடன் அன்னை காட்சியளிக்கிறாள்.

"என்னை ஆளும் புவனேஸ்வரி அம்பிகையே! உனக்கென்றே அமைந்துள்ளது, என்னுடைய இதயம் எனும் குகை! அதை விட்டகலாது அமர்ந்து எனக்கு அருள்பாலிப்பாயாக"

"உன்னுடைய மெய்யாலும், மொழியாலும், மனத்தாலும் ஸ்ரீ புவனேஸ்வரி மாதாவைச் சரணம் அடைந்துவிடு; அம்மை உனக்கு இம்மையில் இகலோக இன்பங்களையும், மோட்சத்தையும் அளித்து இரட்சிப்பாள்"

"கர்மத்தினாலும், ஆசையினாலும், குன்றிய மனம் அம்பிகையின் சேவையைத் தவிர வேறொன்றிலும் அமைதியை அடையாது; ஸ்ரீ புவனேஸ்வரி அமபிகை துணை"

இதுபோன்ற சுவாமி சாந்தானந்தரின் பொன்மொழிகள் அதிஷ்டானத்து உட்புறச் சுவர்களில் எழுதப்பட்டுள்ளன இதே அன்னையின் பெருமையைத் தேவி பாகவதம் போற்றித் துதிக்கிறது புவனேஸ்வரியே மும்மூர்த்திகளுக்குரிய முத்தொழில்களைப் பெண் உருவங்களாக்கி அவர்களுக்கு மணமுடித்து வைத்தாள் என்று தேவி பாகவதம் கூறும்.

புவனேஸ்வரி என்ற திருநாமத்தில் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் உரிய எழுத்துக்கள் அடங்கியுள்ளன. இவ்வுலகத்தைப் பாதுகாக்கப் பொன், பொருள் ஆகியவற்றை வழங்கி, ஆதிசேடன், எண்திசைப் பாலகர்கள் ஆகியோருக்குப் பூவுலகைத் தாங்கி நிற்கும் வலிமையை அளிப்பதால் அன்னை புவனேஸ்வரி என்ற திருநாமத்தை ஏற்றுள்ளாள்.

புதுக்கோட்டை அதிஷ்டானம், ஒரு திருக்கோயில் அல்ல; ஆலயத்திற்கு உரிய அமைப்புகள் அங்கு இல்லை. அது அன்னை புவனேஸ்வரியின் சக்ரபீடமாகும் ஆன்ம நேய ஒருமைப்பாடு காண விழைவோரும், ஆரவாரமற்ற ஆன்மிக தரிசனம் பெற விரும்புவோரும் அன்னை முன்

அமர்ந்து ஆனந்தப் பெருவாழ்வு பெறுவதற்காக அவ தூதர் மூவர் அமைத்த ஆசிரமமேயாகும். சத்குரு சாந்தானந்தர், தாம் பெற்ற நிதியைத் தர்மடிரஸ்டாக நிறுவி இதனை நிர்வகித்து வருகிறார். அங்கு காலை முதல் மாலை வரை பக்தி மணம் கமழ்கிறது. வேதங்கள் முறைப்படி ஓதப்படுகின்றன. கணபதி ஹோமம், மஹாந்யாசம், தேவி மகாத்மிய பாராயணம், விசேஷ நவாவரண பூஜைகள், அபிஷேகங்கள் போன்றன இடையறாது நடைபெறுகின்றன. காலையிலும், மாலையிலும் பூஜைகள் உண்டு. பல ஆண்டுகளாக உலக நன்மை கருதிப் பலவிதப்பட்ட ஹோமங்கள் நடத்தப் பட்டு வருகின்றன. இங்கு தனி மனிதனுக்காக அர்ச்சனை, அபிஷேகங்கள் நடத்தப் பெறுவதில்லை. உலகின் நன்மை கருதியே அவை நடைபெறுகின்றன.

16-6-1986 அன்று அதிஷ்டானத்தின் பொன்விழா சிறப்பாக நடந்தேறியது. அண்மையில் அதிஷ்டானம் சார்பில் வைத்தியசாலையும், திருமண மண்டபமும் கட்டப்பட்டன.

உலகம் விஞ்ஞான யுகத்தை நோக்கிச் சிறகடித்துப் பறந்து செல்லும் வேளையில் பக்தி யுகத்திற்கு மக்களை அதிஷ்டானம் அழைத்துச் செல்கிறது.

# 19. மயிலாப்பூர்

*(சென்னை மாவட்டம்)*

## ஆதிகேசவப் பெருமாள், பேயாழ்வார் கோயில்

*முன்னொரு காலத்தில் பிருந்தாரண்ய க்ஷேத்திரம் என்ற தலத்திற்கு, அருகே பிருகு முனிவரும், பிற ரிஷிகளும் கடுமையான தவத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அங்கு மகாசூரனான மது எனும் அரக்கன் தோன்றி ரிஷிகளை விரட்டியடித்தான். பிருகு முனிவரை மட்டும் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அந்த வனத்தின் எழிலில் மனதைப் பறிகொடுத்த மது, அசுர தச்சனான மயன் உதவியுடன் பிரம்மாண்டமான நகரம் ஒன்றை உருவாக்கினான். மதுபுரி என்றும், மாயாபுரி என்றும் அழைக்கப்பட்ட அவ்வூரில் அசுரர்கள் வசித்து வந்தனர். அசுரர்களால் விரட்டப்பட்ட முனிவர்கள் ஸ்ரீராப்தி நாதனைத் துதித்தனர். மகாவிஷ்ணுவும் அவர்களுக்கு அருளினார். விரைவில் அசுரர்களின் ஆதிக்கத்தை ஒடுக்குவதாகவும் உறுதியளித்தார். அவரது வாக்கு நிறைவேறியது. பின்னர் முனிவர்கள் புரிந்த சயன யாகத்தில் தோன்றி, அவர்களது தவத்தினை ஏற்றார். சயன யாகத்தில் தோன்றியதால் சயனகேசவன் என மகாவிஷ்ணு அழைக்கப்பட்டார். "இரு கரங்களில் சங்கு சக்கரம் ஆகிய ஆயுதங்கள்; ஊர்த்துவ புண்டரத்தோடு கூடிய முகார விந்தம்;கேயூரம், இரத்னக் கிரீடம் போன்ற*

விலை மதிப்பு மிக்க அணிகலன்கள்; ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், வனமாலை ஆகியவற்றைத் தாங்கிய திருமார்பு; சுருள் சுருளாகவும், கறுத்த நிறத்துடனும் காட்சியளிக்கும் கேசம்'' இவ்வாறு தோற்றமளித்த மணி வண்ணனைக் கேசவன் என முனிவர்கள் அழைத்தனர். இவ்வாறு மகாவிஷ்ணு முனிவர்களை ஆட்கொண்ட இடமே சென்னை நகரின் மையப்பகுதிகளுள் ஒன்றான மயிலாப்பூர். ஆதிகேசவன் அவதரித்த இந்த வரலாற்றைக் கருட புராணத்திலுள்ள மயூரபுரி மஹான்மீயத்தில் மூன்றாம் அத்தியாயத்தில் காணலாம்.

கருட புராணத்திலுள்ள நான்காவது அத்தியாயத்தில் திருமகள் இத்தலத்தில் மயூரவல்லித் தாயாராக அவதரித்த வைபவம் விவரிக்கப்பட்டுள்ளது. பிருகு முனிவர் மகாலட்சுமியை மனதில் நினைத்தவாறு கடுந்தவம் இயற்றி வந்தார். மகாவிஷ்ணுவின் விருப்பத்தின் பேரில் திருமகள் பங்குனி உத்திரத் திருநாளில் பரிசுத்தமான ஆம்பல் மலர் ஒன்றில் ஆவிர்பவித்தாள். பிருகு முனிவர் அக்குழவியை எடுத்துப் பார்கவி என்று பெயரிட்டு வளர்த்தார். சுக்லபக்ஷ சந்திரன் போல அப்பெண்ணும் உரிய பருவம் அடைந்தாள். நான்முகனின் ஐந்தாவது தலையைக் கொய்த சிவபெருமானின் கரத்தில் அப்பிரம்மகபாலம் ஒட்டிக் கொண்டது. கையில் கபாலத்துடன் விளங்கிய அரனார் கபாலி என்ற பெயருடன் இப்பகுதியில் இருந்தார். பிருகு முனிவரின் மகளான பார்கவி அக்கபாலத்தில் பிட்சை செலுத்தியவுடன் கபாலம் மறைந்தது. பின்னர் மகாவிஷ்ணு இத்தலத்தில் காட்சியளித்து, பிருகுவின் வளர்ப்பு மகளான பார்கவியை மணந்தார்.

மக்கள் சம்சார சாகரத்தில் மூழ்கி அல்லலுறுவதைக் கண்டு அவர்களைக் கரையேற்றவே சர்வ வல்லமையுடைய மகாவிஷ்ணு பல அவதாரங்களை எடுத்தார். மக்களோ அந்த அவதாரங்களின் மகிமைகளை அறிந்து



நாக    தர்                    சௌந்தரநாயகி

நயினர் கோயில்



ஜட்ஜ் ஸ்வாமிகள்



ஸ்வயம்பிரகாசர்
புதுக்கோட்டை



சந்தானந்தர்



உட்புறம். பிரகன் நாயகி ஆலயம்
தேவிகாபுரம்



பேயாழ்வார்
ஆதிகேசவப் பெருமாள் கோயில்
மயிலாப்பூர்



தேவியருடன்
ஆதிகேசவப் பெருமாள் (உற்சவர்)
மயிலாப்பூர்



ஆதிகேசவப் பெருமாள் (மூலவர்)
மயிலாப்பூர்



இராஜகோபுரம்
ரிஷிவந்தியம்



இராமர்
வாழ்வச்சகோஷ்டம்



கர்ணன்
வாழ்வச்ச கோஷ்டம்



சகுனி
ாழ்வச்ச கோஷ்டம்



காளி
வாழ்வச்சகோஷ்டம்



நடராஜர்
வாழ்வச்சகோஷ்டம்

கொள்ளாமல் அவற்றைப் பயன்படுத்தத் தவறினர். அவதாரங்களால் மக்களை முழுவதும் மாற்ற முடியாமையால், மிருகத்தைக் கொண்டு மிருகங்களையே பிடிப்பவர் போல் தமது திவ்விய ஆயுதங்களை மானுடர்களாகப் பிறக்கச் செய்து, அவர்கள் மூலம் மக்களுக்கு நல்வழி காட்ட முடிவு செய்தார். அவ்வாறே திவ்விய ஆயுதங்களும் மனித உருவில் அவதரித்து, மறைந்திருந்த தமிழ் வேதங்களைப் பிரபந்தங்கள் வடிவில் உபதேசித்து மக்கள் பலரை நல்வழிப்படுத்தியுள்ளனர். பெருமானின் திவ்விய குணங்களில் திளைத்துக் கீழே ஆழ்ந்து போகின்றவர்களாகையால் இந்த அவதார புருஷர்களை ஆழ்வார்கள் என்று அழைத்தனர்.

ஆழ்வார்களுள் பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் முதலில் உதித்தவர்கள். இவர்களை முதலாழ்வார்கள் என்றே குறிப்பிடுவர்.

"மற்றுமுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த
பெற்றிமையோர்
என்று முதலாழ்வார்கள் என்னும் பேர் இவர்க்கு
நின்றதுலகத்தே நிகழ்ந்து"

(மணவாள மாமுனிகள் பாசுரம்)

இவர்களுள் பேயாழ்வார் தொண்டை நாட்டிலுள்ள திருவல்லிக்கேணிக்குத் தெற்கேயுள்ள "தேனமர்சோலை மாடமயிலை எனும் மயிலாப்பூரில், ஆதிகேசவப் பெருமான் கோயிலுக்குச் சொந்தமான மலர்த் தோட்டத்திலுள்ள "மணிகைரவணி" என்ற கிணற்றிலுள்ள செவ்வல்லிப் பூவில் அவதரித்தார். இவர் உதித்த காலம் துவாபரயுகம் 866922ம் ஆண்டு. சித்தார்த்தி ஆண்டு, ஐப்பசி மாதம் சுக்ல பக்ஷம் தசமிதிதி கூடிய வியாழக்கிழமை (சதய நட்சத்திரம்). திருமாலின் வாள்படையான நந்தகம் எனும் ஆயுதத்தின் அம்சமாக ஆழ்வார் உதித்தார். 'பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே'

என்று திருமாலிடம் ஆழ்ந்த பக்திகொண்டு அழுதல், சிரித்தல், தொழுதல், ஆடுதல், பாடுதல் போன்ற செயல் களைப புரிந்தவாறே இறைவனை அனுபவித்து வந்தார். இதனால் இவரைப் 'பேயனோ'? என்று மக்கள் சந்தேகித் தனர். பேயாழ்வார் என்றே அழைக்கத் தலைப்பட்டனர். பரமபக்தி நிரம்பியுள்ளதால் பிறரை விட அதிகமாகப் பாகவ அனுபவம் பெற்றவர்; எனவே, மஹதாஹ்வயர் (பேய்) என்ற திருநாமமும் ஏற்பட்டது.

பேயாழ்வார் மயிலையில் அவதரித்த சம்பவம் கருட புராணத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. ஸ்வேதத்வீபத்தில் திருமாலின் ஆயுதமான நந்தகம் ஒரு மானுட உருவெடுத்து அப்பெருமானுக்குப் பெருந்தொண்டு ஆற்றி வந்தது. அவ்வுருவத்திற்கு மகாவிஷ்ணு மகான் என்று பெயர் சூட்டியிருந்தார். ஒருமுறை 'மகான்' திருமகளிடம் தத்துவபதேசம் அளிக்குமாறு வேண்டியது. பிருந்தாவன க்ஷேத்திரமான மயூரபுரியில் அவதாரம் செய்யுமாறு மகானிடம் அன்னை கூறினாள். அவ்வாறு அவதரித்த பின் அங்கு உபதேசம் அளிப்பதாகவும் உறுதியளித்தாள்.

மயூரவல்லித் தாயார் என்ற பெயருடன் பிருகு முனிவரின் மகளாகப் பூவுலகில் தோன்றிய திருமகளிடம மகான் என்ற பெயருடைய பேயாழ்வார் முறைப்படி உபதேசம் பெற்றார். பிராட்டியின் கட்டளையின் பேரில் ஆதிகேசவப் பெருமாளை வைகானச ஆகமத்தின் விதி முறைகளை அனுசரித்தவாறு ஆராதித்து வந்தார். அங்கு ஒரு நந்தவனத்தை ஏற்படுத்திப் புஷ்ப கைங்கர்யம் புரிந்து வந்தார். இதே சமயம் திருமழிசை என்ற பதியில் அவதரித்த திருமழிசை ஆழ்வார் பல தரப்பட்ட மதங் களில் கூறப்பட்ட உண்மைகளையும் கேட்டறிந்தார் அவற்றுள் சிறப்பானது எது என்பதை அறிய இயலாமல் திரிந்து கொண்டிருந்தார். இந்த நிலையில் திருமழிசைப் பிரான் ஒரு நாள் மயூரபுரி வந்து சேர்ந்தார். உண்மை

யான ஞானத்தை அளிக்குமாறு பெருமாளிடம் வேண்டினார். மணிகைரவணி திரத்தில் புஷ்ப கைங்கர்யம் புரிந்து கொண்டிருக்கும் மஹாதாஹ்வயரிடம் ஞானோபதேசம் பெறுமாறு திருமால் திருமழிசையாரை அனுப்பினார். பேயாழ்வார ஒரு துளசிச் செடியைத் தலைகீழாக நட்டு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார். "ஒரு துளசிச் செடியைத் தலைகீழாக நட்டால் அச்செடி எப்படி முளைக்கும்" எனத் திருமழிசையாழ்வார் பேயாழ்வாரிடம் கேட்டார். "பிற சமயங்களில் ஈடுபட்டு முக்தியடைய உங்களால் இயலுமானால், தலை கீழாக நட்ட செடியை முளைக்கச் செய்ய அடியேனாலும் முடியும்" என்று பேயாழ்வார் பதில் அளித்தார். சிறிது தயங்கிய பின் திருமால் கூறியவாறு பேயாழ்வாரையே சரணடைந்த திருமழிசைப் பிரான் பஞ்சஸம்ஸ்கார பூர்விகமான மந்திரங்களை உபதேசமாகப் பெற்றார். பிள்ளைலோகம் ஜீயர் எழுதிய இராமானுஜ திவ்விய சரிதம், இராமானுஜர் இயற்றிய இராமானுஜ சம்பூ (16ம் நூற்றாண்டு), உ.வே. திருமழிசை கோயில் கந்தாடை அண்ணாவப் பங்கார் ஸ்வாமிகள் இயற்றிய பழநடை விளக்கம், பதினொன்றாம் நூற்றாண்டில் கருடவாகன பண்டிதர் வடமொழியில் இயற்றிய திவ்விய ஸூரிசரிதம், பின் பழகிய பெருமாள் ஜீயர் எழுதிய குரு பரம்பரைப்ரபாவம், பெரியவாச்சான் பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய திருநக்ஷத்திர மாலை, பிள்ளைலோகம் ஜீயர் அருளிய ப்ரபத்தி ஸ்தோத்திரம், ஓலைச்சுவடிகளாக உள்ள 'ஆழ்வார்கள் சரித்திரம்', 'பெரிய திருமுடியடைவு' ஆகிய பாடற்தொகுதிகள், ஆகிய நூல்களில் பேயாழ்வார் அவதாரம் பற்றிய குறிப்புகள் உள்ளன. மயிலையில் ஆதிகேசவப் பெருமாளுக்குச் சொந்தமான மணி கைரவணி புஷ்கரணியில் பேயாழ்வார் அவதரித்ததாக இந்த இலக்கியங்கள் அனைத்தும் இயம்புகின்றன.

மயிலை கபாலீஸ்வரர் கோயிலுக்குச் சிறிது தொலைவில் ஆதிகேசவப் பெருமாள் கோயில் அமைந்துள்ளது. இதன் பரப்பு சுமார் 1½ ஏக்கர் இருக்கலாம். இதன் முகப்பில் அழகிய ஏழு நிலை கோபுரத்தைக் காணலாம். இது 10-10-1955 அன்று அடிகோலப்பட்டு, 23-5-58 அன்று முடிவுற்றது. இது 1.26 லட்ச ரூபாய் செலவில் கட்டப்பட்டது கருவறையில் மூலவர் ஆதிகேசவப் பெருமாள் கிழக்கே திருமுக மண்டலம் கொண்டவாறு நின்ற கோலத்தில் சேவை சாதிக்கிறார். திருமாலுக்கு எண்ணற்ற திருநாமங்கள் உள்ளபோதிலும் கேசவன் என்ற திருநாமம் பிற பெயர்களை விட ஏற்றம் மிக்கது எனக் கருதுவர். "செவிக்கினிய இத்திருநாமமே முதலில் படிக்கப்படுவதால் விசுவரூபியான மகாவிஷ்ணுவின் மகிமை வாக்குகளுக்கும் எட்டாமல் சிறந்து விளங்குகிறது", "வேதத்தை விட மேலான சாத்திரம் இல்லையென்பது உண்மை; அதுபோலவே கேசவனை விட மேலான தெய்வம் இல்லை என்பதும் உண்மை"; "கேசவனுடைய திருநாமத்தைக் கூறியவுடனே ஆபத்துக்கள் எல்லாம் கதிரவனைக் கண்ட இருள்போல விலகும்; பெருஞ்செல்வங்கள் நிலையாகும்". இவையே கேசவன் என்ற நாமத்தின் சிறப்புகளாக வடமொழியிலுள்ள சில சுலோகங்கள் கூறும் கருத்துக்கள். நம்மாழ்வாரும், "கேசவன் என்று ஒருமுறை கூறினால் பாவங்கள் அவனை விட்டு அகலுவதால் எமதூதர்கள் அவனை அணுக அஞ்சுவர்" என்று அருளுகிறார். 'ஒரு குழந்தைக்குக் கேசவனின் பெயரைச் சூட்டிய தாயார் நரகத்திற்குச் செல்லமாட்டாள்', என்று பெரியாழ்வார் கருதுகிறார். 'கேசவன் என்ற சொல்லைக் கூறினால் நரகமும் சுவர்க்கமாகும்', என்று தொண்டரடிப் பொடியாழ்வார் செப்புகிறார். ஆதி என்ற சொல் உலகத்திற்கே மூலகாரணமான "ஆதிமூலம்" என்ற எம்பிரானையே குறிப்பிடுகிறது. இவையே ஆதிகேசவன் என்ற திருநாமத்திற்குரிய பெருமைகளாகும்.

மூலவருக்கு வலதுபுறத்தில் தாயாரின் சந்நிதி உள்ளது. பிருகு மகரிஷியின் புதல்வியாகப் பிறந்து மகாவிஷ்ணுவை மணந்த பின் மயூரவல்லித் தாயாராக இங்கு வீற்றிருக்கிறாள்.

"கருணைக்கு இருப்பிடமான கேசவனின் பிரிய பத்தினியும், பிறரைத் தண்டிப்பது என்ற செயலை அறியாதவளும், அருளுவதையே வடிவமாகக் கொண்டவளும், மயூரபுரியான மயிலையில் வாழும் கொடி போன்றவருமான பிராட்டியை வணங்குகிறேன்", "அபய முத்திரை, வரத முத்திரை ஆகியவற்றையளிக்கும் கரங்கள்; பத்ம ஆசனத்திலமர்ந்த நிலை; மற்றிரு கரங்களில் தாமரை மலர்கள்; நிறைந்த செல்வத்தை அளிக்கும் குணத்தாள்; கண்டவுடனே பாவச்சுமைகளை அகற்றும் அருட்குண முடையாள்; மந்தகாசத்துடன் மலர்ந்த முகம்; "இத்தகைய தன்மைகளையுடைய மயூர வல்லியான கற்பகக் கொடியைப் போற்றித் துதிக்கிறேன்". இவையே வடமொழி சுலோகங்களில் மயூரவல்லித் தாயார் பற்றி உள்ள கருத்துக்கள் ஆகும்.

இக்கோயிலில் சீதாப்பிராட்டி, லட்சுமணன் ஆகியோருடன் இராமபிரான் தனி சந்நிதியில் காட்சியளிக்கிறார். அயோத்திக்குச் செல்லும் வழியில் இராமபிரான் மயூரபுரியில் தங்கிச் சென்றாராம். இன்றும் விபீஷணனைக் கடாட்சித்த கோலத்தில் தெற்கு நோக்கியவாறு காட்சி தருகிறார். மூலவருக்கு வலது புறத்தில் ஆண்டாள் சந்நிதி உள்ளது. பெருமானை ஒட்டியவாறு வலது புறமாகப் பேயாழ்வார் காட்சியளிக்கிறார். "வெளுத்த முப்புரி நூலையும், விளங்கா நிற்கும் திருமண் காப்பையும், தாமரை போன்ற கண்களையும், பிரகாசிக்கும் சிகையையும், கூப்பிய கரங்களையும் பெற்றுள்ள இரத்தினம் போன்ற பேயாழ்வாரை" வணங்குவதாக வடமொழி நியான சுலோகம் தெரிவிக்கிறது இவ்வாலயத்தில் 2-10-1955 அன்று திருமழிசை

யாழ்வாரின் திருவுருவம் பிரதிஷ்டை செய்யப் பெற்றது. ஆஞ்சநேயரின் சந்நிதியும் இங்கு பிரசித்தி பெற்றது.

ஆலயத்திற்கு வெளியேயுள்ள திருக்குளம் மகிமை வாய்ந்தது. குருவின் சாபத்தால் பீடிக்கப்பட்ட சந்திரன் மயூரபுரியில் மகாவிஷ்ணுவைப் பூசித்தான். பெருமாளின் கட்டளையின் பேரில் சகல புண்ணிய நதிகளும் ஒன்று கூடி ஒரு தீர்த்தத்தை உருவாக்கின. அதில் நீராடிய சந்திரனின் துன்பமும் தீர்ந்தது. பல நதிகள் ஒன்று சேர்ந்து உருவாக்கியதால் சர்வ தீர்த்தம் என்றும், சந்திரன் நீராடியதால் சந்திர புஷ்கர்ணி எனவும் பெயர் பெற்றது. இன்று சித்திரைத் திருக்குளம் என்று இதனை அழைக்கின்றனர். இது இன்று உபயோகத்தில் இல்லை.

சிவபெருமான் புகழ்ந்து போற்றியுள்ளதாகக் கருட புராணம் கூறும் மணி கைரவணி தீர்த்தத்தில் பேயாழ் வார் அவதரித்தார். தற்போது அருண்டேல் தெருவில் ஆதிகேசவப் பெருமாள் கோயிலுக்குச் சொந்தமான மலர்வனத்திலுள்ள கூபம் (கிணறு) வடிவில் இத்தீர்த்தம் காட்சியளிக்கிறது. இக்கிணற்று நீரே ஆதிகேசவப் பெருமாள் ஆலயததில் அபிஷேகத்திற்குப் பயன் படுகிறது.

பிள்ளைலோகம் ஜீயர் எழுதிய இராமானுஜ திவ்விய சரிதத்தில் இராமானுஜர் பிறப்பிற்கும், இத்தலத்திற்கும் உள்ள தொடர்பு பற்றிய குறிப்பு உள்ளது. அசூரி கேசவப் பெருமாள் என்பவர், ஸ்ரீபெரும்புதூரிலிருந்து மயிலை ஆதிகேசவர் சந்நிதியை அடைந்து புத்திரனைப் பெறவேண்டி ஒரு யாகம் புரிந்தார். அந்த யாகத்தின் பலனாகவே அவருக்கு ஒரு புத்திரன் பிறந்தார். இப்புத்திரனே வைணவ உலகிற்குப் பெரும் தொண் டாற்றிய இராமானுஜர். இதே நூல் இராமானுஜர் திருவல்லிக்கேணி பார்த்தசாரதியை வழிபட்ட பின்னர் திருமயிலை ஆதிகேசவரையும் மங்களாசாசனம் செய்த

தாகக் கூறுகிறது. இராமானுஜர் பேயாழ்வாரைத் துதித்து அருளிய சுலோகம் அவரது "இராமானுஜசம்பூ" என்ற நூலில் இடம் பெற்றுள்ளது 'ஸ்ரீஆதிகேசவப் பெருமாள் அருளால் மயூரபுரியின் கிணற்றிலுள்ள செவ்வல்லிப் பூவில் அவதரித்தவரும், பிராட்டியுடன் கூடிய எம்பெருமானைப் பூசித்து அவர் மீது மூன்றாம் திருவந்தாதி என்ற தமிழ்மறையை அருளியவருமான பேயாழ்வாரை வணங்குகிறேன்" என்பதே அப்பாடலின் கருத்து.

ஆண்டாளின் திருப்பாவையிலுள்ள 'கீசு கீசு" என்ற பாசுரத்தில் "கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ" என்ற வாசகங்கள் இடம் பெற்றுள்ளன. இவ்வரிகள் மயிலை ஆதிகேசவரையே குறிப்பதாகவும், இப்பாசுரத்தில் ஆண்டாள் பேயாழ்வாரைத் துயில் எழுப்புவது போல அமைந்துள்ளதாகவும் வானமாமலை ஜீயர் சுவாமிகள் கருதுகிறார். (திருப்பாவை பாசுரத் திற்கு ஜீயர் சுவாமிகள் அருளிய ஸ்வதே சார்த்தம்) முதலாழ்வார்கள் மூவரும் இத்தலத்தைப் போற்றியுள்ள தாகவும் கூறுவர்.

ஆதிகேசவப் பெருமாள் சூரிய வம்சத்திலுதித்த ஸுமனங்கள் என்ற அரசனுக்கு இத்தலத்தில் அருள் புரிந்து, கருடக் கொடியை அளித்தார். சூரியனுக்கும் இப்பெருமான் காட்சியளித்து அருள்பாலித்தார். ருத்திரர் இங்கு ஆதிகேசவனை வழிபட்டுத் தோஷம் நீங்கப் பெற்றதால் இப்பதிக்கு ருத்ரபுரி என்ற பெயரும் ஏற்பட்டது.

இங்கு வைகாசன ஆகமப்படி நாள்தோறும் ஆறு கால பூஜை நடைபெறுகிறது. பங்குனி மாதத்தில் ஆதி கேசவருக்குப் பத்து நாள்பிரம்மோற்சவம் நடைபெறு கிறது. திருவோண நாளன்றுநடைபெறும் தீர்த்த வாரியுடன் அதுமுடிவுறுகிறது. பேயாழ்வாருக்கு ஐப்பசி மாதத்தில் நடைபெறும் பத்துநாள் திருவிழா சதய நட்சத்திரத்தன்று நிறைவுறும். இவ்விழாவின் போது

முதலாழ்வார்கள் மூவரும் ஒரு மண்டபத்தில் நெருக்க மாக எழுந்தருளி, கருடவாகனம்மீது தோன்றும் ஆதி கேசவரின் அருளைப் பெற்று மங்களாசாசனம் செய்யும் நிகழ்ச்சி நடைபெறும். திருக்கோயிலூரில் முதலாழ்வார்கள் ஒன்று சேர்ந்து மகாவிஷ்ணுவைத் தரிசித்து மூன்று திருவந்தாதிகள் பாடிய சம்பவத்தை இந்நிகழ்ச்சி நினைவுறுத்தும். மயூரவல்லித் தாயாருக்கு நவராத்திரி, பங்குனி உத்திரம், ஆகிய காலங்களிலும், வெள்ளிக்கிழமைகளிலும் உற்சவங்கள் நடைபெறு கின்றன. ஆலயத்தில் 2 பல்லக்குகளும், 11 வாகனங்களும் உள்ளன. இக்கோயிலில் தென்கலை சம்பிரதாயம் கடைப் பிடிக்கப்படுகின்றது. இக்கோயிலை நாட்டு நாராயண சாமி முதலியார் குடும்பத்தினர் வெகுகாலம் பராமரித்து வந்தனர். பின்னர், ஐந்து நபர்களைக் கொண்ட குழு பராமரித்து வந்தது.

இக்கோயிலின் உட்பகுதிகள் சில ஆண்டுகளாகப் புதுப்பிக்கப்பட்டன. 1989ம் ஆண்டு இறுதியில் மகா சம்ரோக்ஷணம் நிறைவேறியது. 1990-ம் ஆண்டு துவக்கத் தில் சித்திரைத் திருக்குளத்தைச் செப்பனிட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன இக்கோயிலுக்குக் கிழக்கே வடகலை சம்பிரதாயத்தின்படி வேதாந்த தேசிகனின் சந்நிதி நிர்வகிக்கப்பட்டு வந்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஆதிகேசவப் பெருமாள் கோயில் நிர்வாகிகளின் அனுமதியுடன் வடகலை சம்பிரதாயத்தைக் கடைப்பிடிப்போர் தங்களது ஆசாரிய ரான வேதாந்த தேசிகனின் சந்நிதியைக் கட்டினார்கள். பின்னர் ஸ்ரீநிவாசப் பெருமாள், ஆழ்வார்கள் போன்ற திருவுருவங்கள் இங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டன. இன்று இங்கு வழிபாடு, உற்சவங்கள் ஆகியன வெகு விமரிசையாக நடைபெறுகின்றன.

# 20. ரிஷிவந்தியம்

(தென் ஆற்காடு மாவட்டம்)

## அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்

"பெண்ணுரு ஒரு திறன் ஆகின்று; அவ்வுருத்
தன்னுள் அடங்கிக் கரக்கினும் கரக்கும்"

(புறநானூறு)

பிருங்கிமுனிவர் சிவபெருமான் மீது பெரு விருப்பு கொண்டவர். முழுமுதற் கடவுளாகத் தான் கருதிய சிவபெருமானை மட்டுமே அவர் வழிபட்டு வந்தார். அரனாருக்கு அருகே அமர்ந்துள்ள உமையன்னையை அவர் வழிபடுவதில்லை. உமையன்னை அவரது சக்தி முழுவதையும் பறித்துக்கொண்டார். பிருங்கி முனிவரால் நிற்கக் கூட முடியவில்லை. முனிவர் செய்த தவறை உணர்த்திய வேதநாயகன், பார்வதிக்குத் தம்முடைய உடலில் இடது பாதியை அளித்து என்றும் தம்முடன் ஒன்றியிருக்கும் நிலையில் ஏற்றுக் கொண்டார். ஒரே திருமேனியில் வலது புறத்தில் சிவபெருமானும், இடது புறத்தில் அம்மனும் ஒருவரை ஒருவர் பிரிக்க இயலாத நிலையில் விளங்கும் நிலையே அர்த்த நாரீசுவர மூர்த்தியாகும். "மாதியலும் பாதியர்" என்றும், 'அம்மையப்பர்' என்றும் இக்கோலத்தையே குறிப்பிடுவர். இறைவனே எல்லாவுயிர்க்கும் தந்தையாகவும், தாயாகவும் விளங்கும் நிலையையே இவ்வடிவு குறிக்

கிறது. ஆண், பெண் இருவரும் ஒருவருக்கொருவர் இன்றியமையாதவராய், அன்பினால் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்ற உண்மையை இவ்வுருவம் உணர்த்து கிறது. மாதொரு பாகன் உருவை "இறைவனின் தொன்மைக் கோலம்" என்று மாணிக்கவாசகரும், 'முதல் உரு' என அருள் நந்தி சிவாச்சாரியாரும் போற்று கின்றனர். திருச்செங்கோடு என்ற திருத்தலத்தில் அர்த்தநாரீஸ்வரர் முழு உருவத்துடன் மூலமூர்த்தியாகக் காட்சியளிக்கிறார். 'வாசுதேவநல்லூரில்' அர்த்த நாரீஸ்வரர் லிங்க உருவில் அருள்புரிகிறார். அது போலவே சிவபெருமான் அர்த்தநாரீஸ்வரர் என்ற திருநாமத்துடன் லிங்க வடிவில் தோன்றும் திருத்தலமே ரிஷிவந்தியம். இத்தலம் தென் ஆற்காடு மாவட்டத்தில், திருக்கோயிலூரிலிருந்து கள்ளக்குறிச்சி செல்லும் சாலை யில் அமைந்துள்ளது. சென்னை, விழுப்புரம், திருக் கோயிலூர், கள்ளக்குறிச்சி. உளுந்தூர்ப்பேட்டை ஆகிய ஊர்களிலிருந்து ரிஷிவந்தியம் வழியாகப் பேருந்துகள் செல்கின்றன.

தேவர்களுக்கு அதிபதியான இந்திரன் தனது குல குருவான வியாழ பகவானிடம் நான்கு வேதங்களின் தனமைகளைக் கேட்டறிந்தான். சாவித்திரி மந்திரத்தின் நுட்பத்தை அறிந்து கொள்ளவும் இந்திரன் விரும்பினான். பூவுலகிலுள்ள ரிஷிவந்தியம் என்ற தலத்தில் சில காலம் தங்கிச் சிவபெருமானைப் பத்து குடம் பாலாலும், பார்வதியன்னையைப் பத்து குடம் பாலாலும் அபிஷேகம் செய்து வழிபட்டு வந்தான். தேவேந்திரனின் பக்தியைச் சோதிக்க விரும்பிய பார்வதி தேவி அபிஷேகத்திற்கு உரிய பால் குடம் ஒன்றை மறைத்து விட்டார். பால் குடத்தைக் காணாத இந்திரன் கடுமையான துயரத்தில் மூழ்கினான். தனது பக்தனின் துன்பத்தைத் தீர்க்கத் திருவுளம் கொண்ட உமையன்னை இந்திரன் முன் தோன்றினாள். "அன்ப! இந்தத் தலத்தில் ஈசன் மாதொரு பாகனாக எழுந்தருளியுள்ளார்.

இலிங்கத்திற்குப் பாலால் அபிஷேகம் செய்யும்போது இடது புறத்தில் என்னுருவத்தையும் காண்பாய். இங்கு எங்கள் இருவருக்கும் தனித்தனியே அபிஷேகம் செய்து வழிபட்டதால் ஒரு குடம் பாலை மறைத்து அருளினோம்" என்று அம்மன் மொழிந்தாள். பின்னர் இந்திரனுக்குச் சாவித்திரி மந்திரத்தை உபதேசித்தார்

இந்திரன் தொடர்ந்து நாள்தோறும் நூறுகுடம் பால் கொண்டு சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்து இடையறாது வழிபட்டு வந்தான். இந்திரனின் பூசையினால் மகிழ்வுற்ற அரனார் மாதொரு பாகனாகக் காட்சியளித்தார்; ஒரே உருவத்தில் வலது புறத்தில் ஈசனையும், இடதுபுறத்தில் உமையன்னையையும் கண்ட இந்திரன் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தான் தனக்கு அருளிய இதே கோலத்தில் அன்பர்களுக்குத் தரிசனம் அளிக்குமாறு இந்திரன் வரம் வேண்டினான். இதுவே இத்தலத்தில் சிவனார் அர்த்தநாரீஸ்வரராக எழுந்தருளிய வரலாறு

தவம் புரிந்து பெற்ற வலிமையால் ஒப்பாரும், மிக்காரும் இல்லாமல் விளங்கிய இரணயாக்ஷன் பூவுலகைப் பாயாகச் சுருட்டி ஆழ்கடலில் புதைத்தான். மகாவிஷ்ணு வராகவதாரம பூண்டு இரண்யாட்சனுடன் கடுமையாகப் போரிட்டு அழித்தார். பின்னர் பூமிதேவியைத் தூக்கியெடுக்க முனைந்தார் பூமாதேவியின் இருதயகமலமாக ரிஷிவந்திய க்ஷேத்திரம் விளங்குகிறது. எனவே, பூமாதேவியின் இதயத்தில் பரமசிவன் நீங்காது நிலை பெற்றுள்ளார். அவரை வழிபடாமல் சென்றதால் வராகமூர்த்தியால் பூவுலகைச் சுமக்க முடியவில்லை. உடனே மகாவிஷ்ணு ரிஷிவந்தியத் தலத்தில் எழுந்தருளியுள்ள அர்த்தநாரீஸ்வரரைத் தரிசித்து அருள் பெற்றார். இதன் பின்னர் அவரால் பூமியை ஆழ்கடலினின்று வெளியேற்ற முடிந்தது.

சகல உலகங்களையும் படைக்கவல்ல பிரமதேவன் அனைத்து அழகையும் திரட்டித் திலோத்தமை என்ற மங்கையை உண்டாக்கினார். தன்னால் படைக்கப்பட்ட அம்மங்கையிடம் அவருக்கு அளவற்ற மோகம் உண்டாயிற்று. இதனால் பாசம் பிரம்மனைப் பற்றத் தலைப்பட்டது. தன்னைப் பற்றிக் கொள்ள வந்த பாசத்தின் பிடியில் சிக்காமல் நான்முகன் தென்திசை நோக்கிச் சென்றார். இருடிவந்தியத் தலத்தை அவர் நெருங்கியவுடன் பாசம் தன்னைத் தொடராமை கண்டு மகிழ்ந்தார். அவ்விடத்திற்குப் பாசார் (பாசம் அற்ற இடம்) என்று பெயரிட்டு அங்கு தன் பெயரால் 'பிரம்ம சடையார்' என்ற லிங்கத்தைத் தாபித்து வழிபட்டார். இதன்பின் ரிஷிவந்தியத் தலத்தில் கொன்றை மர நிழலில் எழுந்தருளியுள்ள அர்த்தநாரீஸ்வரரை வழிபட்டார். பெண் மீது மோகம் கொண்டால் தேவனும் தொல்லைக்கு உட்படுவான், என்ற உண்மையை இச்சம்பவம் மூலம் உலகிற்கு எடுத்துக் காட்டிய மாதொருபாகன் நான்முகனுக்கு இங்கு அருள்புரிந்தார்.

தட்சயாகத்திற்குப் பின்னர் இமயவானின் புதல்வி யாகப் பார்வதி தேவி அவதரித்தாள். உரிய பருவம் வந்தவுடன் பார்வதியைச் சிவபெருமான் மணந்தார். சிவபெருமானின் திருமணத்தில் பங்கேற்க ஈரேழுலகத் தில் உள்ளோரும் திரண்டு வந்ததால் வடபுலம் தாழ்ந்து தென்புலம் உயர்ந்தது. பூமியைச் சமமாக்கும் நோக்கத் துடன் குறுமுனியான அகத்தியர் தென்புலம் நோக்கி அனுப்பப்பட்டார். விரும்பும் போது திருமணக் கோலத்தை அவர் தங்கியுள்ள இடத்திலேயே காட்டுவ தாகச் சிவபெருமான் இயம்பினார். தென்திசை நோக்கிச் சென்ற அகத்தியர் பல புனிதத் தலங்களைத் தரிசித்தார். வழியில் பல தலங்களில் அகத்தியருக்குச் சிவபெருமான் தனது திருமணக் கோலத்தில் பார்வதி சமேதராகக் காட்சி அளித்தார். இருடிவத்தியத் தலத்தின் ஈசான மூலையிலுள்ள வாழை மரங்கள்

சூழ்ந்த பகுதியில் சிவலிங்கத்தைத் தாபித்து, ஒரு தீர்த்தத்தையும். உண்டாக்கிய அகத்திய முனிவர் தன் மனைவியான லோபாமுத்திரையுடன் அங்கு வழிபாடு செய்தார். அந்த இடம் முனிவாழை என்று பெயர் பெற்றது. இருடிவந்தியத் தலத்தில் அகத்தியருக்கு ஈசனின் திருமணக் கோலத்தைக் காணும் பேறு உண்டாயிற்று அதே தலத்தில் உமையொரு பாகனாகக் காட்சியளித்து அருளுமாறு அகத்தியர் வேண்டினார். இத்தலத்தில் ஈசனுக்குத் தேனாபிடேகம் செய்பவருக்கு லிங்கத் திருவுருவத்திலே உமையம்மையுடன் மாதொரு பாகனாகக் காட்சி அளிப்பதாக அரனார் வரம் அளித்தார். இதே நேரத்தில் அனைத்து வானவர்களும் உமையொரு பாகனைத் தரிசித்துத் துதித்தனர்.

கேசி எனும் அசுரனால் தேவலோகத்திற்குப் பெரிய அபாயம் நேரிட்டது. தேவேந்திரனுக்கு உதவிபுரிய நிலவுலகில் செங்கோலாட்சி புரிந்து வந்த மகா பராக்கிரமசாலியான புரூரவச் சக்கரவர்த்தி அழைக்கப் பட்டார். புரூரவனின் உதவியுடன் கேசியை வானவர் கோன் வென்றான். வெற்றி விழாவின் போது வானவ நடன மாதரின் நடனத்தைப் புரூரவன் கண்டான். ஊர்வசியின் அழகில் புரூரவன் மயங்கினான். அவளை மனைவியாக அடைய விரும்பினான். இருடிவந்தியத் தலத்திலுள்ள ஞானதீர்த்தத்தில் நீராடிய பின் புரூரவன் தன் விருப்பத்தை ஈடேற்றுமாறு அரனாரிடம் வேண்டினான். இறைவனின் அருளால் ஊர்வசி பூவுலகில் அவதரித்துப் புரூரவனின் பத்தினியானாள் புரூரவன் இதே தலத்தில் ஆனிபூரணையில் கேட்டை நட்சத்திரத்தன்று திருவிழா நடத்தினான்.

அயோத்தி மாநகரில் இராமபிரான் தனது தம்பியர் பிரதானியர். முனிவர்கள் புடைசூழக் கொலு மண்டபத்தில் வீற்றிருந்தபோது ஒரு அந்தணன் அவையினில் புகுந்து தனது மகனின் பிணத்தைக் காட்டி அழுது புலம்

பினான். அச்சிறுவன் முறை தவறி இறந்ததாக அந்தணன் மூலம் அறிந்த இராமர் தென்திசை நோக்கிப் புஷ்பக விமானத்தில் சென்றார். இருடிவந்தியத் தலத்திலுள்ள ஞானதீர்த்தம் என்ற புனிதப்புனலில் நீராடி ஈசனை இராமர் வழிபட்டார். அருகிலுள்ள பல்லகைச் சேரி என்ற ஊரில் மானுட உடலுடன் வானுலகம் செல்ல வேண்டும் என்ற நோக்கத்துடன் சம்புகன் என்பவன் கடுந்தவம் புரிந்து வருவதாக ஒரு அசரீரி ஒலித்தது. அந்தணச் சிறுவனின் மரணத்திற்குச் சம்புகனே காரணம் எனவும், அவனது தலையைச் சேதித்தால் இறந்த பாலன் பிழைப்பான் என்றும் அந்த அசரீரி கூறியது. அங்ஙனமே முறைகேடாகத் தவம் புரிந்து வந்த சம்புகனின் தலையை இராமபிரான் துண்டித்து அந்தணச் சிறுவனை உயிர்ப்பித்தார்.

இச்சம்பவம் முடிந்தவுடன் இருடிவந்தியத் தலத்தின் மேன்மையையும், அங்குள்ள தீர்த்தங்களின் பெற்றியையும் அகத்திய முனிவர் இராமபிரானுக்கு உணர்த்தினார். இராமபிரானும் அர்த்தநாரீஸ்வரரை முறைப்படி வழிபட்டார். அயோத்தி மாநகரிலுள்ள தனது தம்பியரிடமும் இத்தலத்தின் சிறப்பை இராமபிரான் எடுத்தியம்பினார். ஆனிபூரணை கேட்டை நட்சத்திர நன்னாளில் இராமபிரான் தனது சுற்றத்தாருடன் இருடிவந்தியத் தலத்திற்கு வருகை புரிந்து முறைப்படித் திருவிழா நடத்தினார். இராமனின் சகோதரர்கள் தங்கள பெயரால் லிங்கங்களை இப்பதியில் நிறுவிப் பூசித்தனர்.

இருடிவந்தியத் தலத்திற்குப் பூவிருதயம், சர்வாதிகம், பிரம்மபுரம், வராகபுரம், இந்திரபுரம், புரூரவபுரம், அகத்தீஸ்வரம், கொன்னபுரம், சுயம்புநிலை, அர்த்தநாரீஸ்வரம், இகபரதலம், புண்ணியமுகீஸ்வரம், விந்தபுரம், ஆகிய பதின்மூன்று சிறப்புப் பெயர்கள் உள்ளதாகத் தலவரலாறு இயம்பும். இங்கு கீர்த்திமிக்க பதினொரு தீர்த்தங்கள் உள்ளதாகத் தலவரலாறு

செப்புகிறது. அக்னிதேவன் பிருகு முனிவரால் பெற்ற சாபத்தினின்று நிவர்த்தியடையும் பொருட்டு அக்னி தீர்த்தத்தை உண்டாக்கினான். கோயிலுக்குத் தென் கிழக்கில் வயல்நடுவில் இது அமைந்துள்ளது. இதில் வெகு காலமாக மகளிர் நீராடுவதில்லை. ஆலயத்திற்கு முன்புறம், கிழக்குத் திசையில் இறைவனால் உண்டாக்கப் பட்ட சங்கர தீர்த்தமும் சகல சித்திகளையளிக்க வல்லது. அகத்தியமுனிவர் உண்டாக்கிய அகத்திய தீர்த்தம் கோயிலுக்கு அருகே தென் மேற்கு மூலையில் உள்ளது. இதன் வடபகுதியிலுள்ள சிறுமண்டபத்தில் பெருநந்தி என்ற பெயருடன் சிவபெருமான் குடிகொண்டு உள்ளார். புத்திரப்பேறு வேண்டுவோர் இதில் நீராடுவது வழக்கம்.

கர்மநோய்கள், புத்தி பேதலித்தல் போன்றவற்றால் பிடிக்கப்படுவோர் கோவிலுக்குப் பின்புறத்தில் அமைந்துள்ள இந்திரதீர்த்தத்தில் நீராடி ஒரு மண்டலம் வழிபடுவதுண்டு. சாவித்திரி மந்திர உபதேசம் பெற வந்தபோது இந்திரனே இதனை உருவாக்கினான். கோயிலுக்கு மேற்கிலுள்ள ஞானபோத புஷ்கரணியில் இராமர் நீராடி வழிபட்டார். இதனால் இதற்கு இராம தீர்த்தம் என்றும் பெயர் உண்டு. 5000 வண்டி கற்களால் கட்டப்பட்டதாலும், 5000 சதுரக்குழி பரப்பு இருப்ப தாலும் இதற்கு 'ஐயாயிரம் தீர்த்தம்' என்ற பெயர் ஏற்பட்டது. திருமணம் நடத்த முறபடுவோர் இதில் நீராடியபின் இதன் கரையிலுள்ள ராஜநாராயணப் பெருமாள் கோயிலில் திருமண வைபவங்களை நடத்து கின்றனர். இதன் கரையிலுள்ள ஸ்ரீ தேவி மண்டபத்தில் பிரம்மோற்சவ காலத்தில் தீர்த்தவாரி உற்சவம் நடை பெற்று வந்தது. நிருதியின் பெயரால் ஏற்பட்ட நிருதி தீர்த்தத்தில் வறட்சிக் காலத்தின்போது பிருகு முனிவர் நீராடி ஈசர் மீது எட்டுப் பாடல்களைப் பாடினார். உடனே பெருமழை தோன்றி நாட்டை வளப்படுத்தியது. புரூரவ மன்னனால் ஏற்படுத்தப்பட்ட கலியாண

தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம், யமதீர்த்தம், சப்தரிஷி தீர்த்தம், பிரமதீர்த்தம், சர்வதீர்த்தம் போன்ற மகிமை மிக்க தீர்த்தங்களும் இப்பதியில் உள்ளன. துவக்க காலத்தில் வனப்பிரதேசமாக இருந்த இப்பகுதியில் ரிஷிகள் தவம் புரிந்ததால் இருடிவனம் (ரிஷிவனம்) என்றும், முனீஸ்வரர் இத்தலத்தில தங்கி ஈசனை வழி பட்டதால் ரிஷிவந்த ஸ்தலம் என்ற பெயரும் ஏற்பட்டன. முனீஸ்வரரின் உருவத்தைக் கோபுரத்தின் உட்பகுதியில் தென்புறத்தில் காணலாம். ரிஷிகள் வந்து வழிபட்ட இடம் ரிஷிவந்தியமாயிருக்கக் கூடும் இத்தலத்தில் ராஜநாராயணப் பெருமாள் எழுந்தருளியுள்ளதால் ராஜநாராயணப் பட்டினம் என்ற பெயரும் இவ்வூருக்கு ஏற்பட்டது.

சுமார் ஒரு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள இக்கோயிலின் முகப்பில் ஒரு ஐந்து நிலை கோபுரத்தைக் காணலாம். கோபுரத்திற்குச் சிவகணகோபுரம் என்ற பெயரும், கோபுர வாயிலுக்குச் சிவகணவாயில் என்ற பெயரும் உள்ளன. கோயிலின் உட்பகுதியில் வட புறத்தில் நடராஜ மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தின் வாயிற்படிகளிலுள்ள தூண்கள் அழகிய யாளிகளின் உருவங்களைத் தாங்குகின்றன. ஒரு யாளியின் வாயில் உருண்டையான கல்குண்டு ஒன்று பொருத்தப்பட்டுள்ளது. இதனைச் சுழற்ற முடியுமே தவிர வெளியே எடுக்க இயலாது. இது இக்கோயிலைக் கட்டிய சிற்பிகளின் கைத்திறத்தினை வெளிப்படுத்துகிறது. தென்புறத் திலுள்ள மண்டபம் வசந்த மண்டபம் என்றும், கலியாண மண்டபம் என்றும் அழைக்கப்படும். இங்கு சப்த ஸ்வரங்களை எழுப்பும் இசைத்தூண்கள் சில இடம் பெற்றுள்ளன; சுற்றுப் பிரகாரத்தின் தென்மேற்கில் மற்றொரு மண்டபமும், கோபுரவாயிலுக்கு முன்பு 16 கால் மண்டபமும் உள்ளன. கோயிலுக்கு வெளியே வடகிழக்கு மூலையில் அலங்கார மண்டபம் உள்ளது.

முற்காலத்தில் திருவிழாப்படிமங்களுக்கான அலங்காரங்கள் இங்கு செய்யப்பட்டன.

சிவகணகோபுரத்தின் தென்பாகத்தில், உட்பகுதியில் இக்கோயிலின் காவல் தெய்வமாகக் கருதப்படும் முனீஸ்வரர் மேற்கு முகமாகக் காட்சி தருகிறார். செவ்வாய், வெள்ளி ஆகிய நாட்களில் பக்தர்கள் இவருக்கு அபிஷேக, ஆராதனைகள் புரிவதுடன், வடை மாலையும் சார்த்துகின்றனர். குழந்தைகளுக்கு ஏற்படும் உபாதைகளை இவர் நீக்குவதுடன், பக்தர்களுக்கு ஒரு சிறந்த வரப்பிரசாதியாகவும் திகழ்கிறார். இவருக்கு அருகே பலிபீடமும், விக்னேஸ்வரரின் சந்நிதியும் உள்ளன. விக்னேஸ்வரரை வழிபட்ட பின்னரே முனீஸ்வரருக்கு அபிஷேக, ஆராதனைகளை நடத்துகின்றனர்.

கருவறையில் மூலவரான அர்த்தநாரீஸ்வரர் சுயம்பு லிங்கமாக அருளாட்சி புரிகிறார். இந்திரனும், வானவர்களும் இந்த லிங்கத்திற்குத் தேனால் அபிஷேகம் செய்த போது இடதுபுறத்தில் அம்மனுடன் இவரே மாதொரு பாகனாகக் காட்சியளித்தவர். இன்றும் தேனால் அபிஷேகம் செய்தால் ஈசன் லிங்கத் திருவுருவத்திலுள் மாதொருபாகனாகக் காட்சியளிப்பதாக நம்பப் படுகிறது. தேன், பால், தயிர் ஆகியவற்றால் இவருக்கு அபிஷேகம் செய்வது சிறப்பு.

முத்தாம்பிகை என்ற திருநாமத்தை உடைய அம்மனுக்குத் தனி சந்நிதி உள்ளது. செல்வ கணபதி, சிவசுப்பிரமணியர், சமயக் குரவர், நந்திதேவர், நவகிரகங்கள் போன்ற மூர்த்திகளுக்கும் உட்பகுதிகளில் இடமுள்ளது. மூலவரின் கருவறையின் புறச்சுவரிலுள்ள கோஷ்டங்களில் நிருத்த கணபதி, தென்முகக் கடவுள், அருணாசலேஸ்வரர், நான்முகன், திருமால், துர்க்கை ஆகியோரைக் காணலாம். அம்மன் கோயிலின் மேற்குப் பிரகாரத்தில் அகஸ்தியலிங்கம், கஜலக்ஷ்மி, விஸ்வநாதர்,

விசாலாட்சி, பிரமலிங்கம் ஆகியோரையும் தரிசிக்கலாம், வடக்குப்பிரகாரத்தில் அர்த்தநாரீஸ்வரரின் கதைச் சிற்பம் வண்ணம் பூசப்பெற்ற நிலையில் அழகாகக் காட்சியளிக்கிறது. பராசக்தி, கால பைரவர், புலிக் காலுடன் தோன்றும் திருமால் ஆகியோரையும் வழிபடலாம். நடராஜர், அம்பாளுடன் சந்திரசேகரர், விநாயகர், வள்ளி, தெய்வயானை சமேதரான சுப்பிர மணியர், சண்டேசர், அம்மன் ஆகிய பஞ்சலோக விக்கிரகங்கள் பாங்குடன் அமைந்துள்ளன.

குருநமசிவாயரின் சீடரான குகநமச்சிவாயர் திருவண்ணாமலையிலிருந்து பல தலங்களைத் தரிசித்த வாறு சிதம்பரம் நோக்கிப் பயணமானார். வரும் வழியில் ரிஷிவந்தியத்தை அடைந்தபோது அவருக்குப் பசி அதிகரித்தது.

“தாயிருக்க பிள்ளை தளருமோ தரணியில்?
நீயிருக்க நான் தளர நீதியோ?
வேயுரு தோணிபங்கன் விண்ணோர்கள் போற்றும்
திரு முத்து வாளியே—சோறு கொண்டு வா”

என்று முத்தாம்பிகை அப்பனை நோக்கி அப்புலவர் பாடினார். அம்மன் புலவருக்கு நேரில் காட்சியளித்து ‘அன்பரே! யான் இங்கு ஈசரின் இடது பாகத்தில் இடம் பெற்றுள்ளதால் எங்கள் இருவரையும் இணைத்தே பாடுவாயாக!”, என்று அருளினார். இதனைக் கேட்ட குகநமச்சிவாயரும்,

“மின்னும் படிவந்த மேகலத் திசருடன்
பொன்னின் கலையாளே
மலையாளே! சோறு கொண்டு வா”!

என்று பாடினார். அம்மன் அவரது பசியைப் போக்கப் பொற்கிண்ணத்தில் சோறு அளித்தார்.

961ம் ஆண்டு ஆகஸ்ட்டு மாதம் வெள்ளிக்கிழமை நாளில் முத்தாரம்மனின் கழுத்தைச் சுற்றியவாறு ஒரு நாகப் பாம்பு பக்தர்களுக்குக் காட்சியளித்ததாம். முற் காலத்தில் விசேட நாட்களுக்கு முன் இதுபோன்ற காட்சி பலமுறை ஏற்பட்டதாகக் கூறுகின்றனர். இத் தலத்தில் புன்னை மரமே தலவிருட்சமாகும். இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் இக்கோயிலின் தல வரலாற்றை நாவலர் ஜடாதர முதலியார் என்பவர் செய்யுள் வடிவில் எழுதியிருந்தார்.

இக்கோயில் முற்காலத்தில் கட்டப்பட்டு விஜயநகர மன்னர்களாலும், நாயக்க மன்னர்களாலும் புதுப்பிக்கப் பட்டதாகச் சான்றுகள் உணர்த்துகின்றன. ரிஷிவந்தியம் என்ற ராஜநாராயணப் பட்டினத்திலிருந்து வெளியே எடுத்துச் செல்லப்படும் வாணிபப் பொருட்களுக்கும், வெளியூரிலிருந்து இவ்வூருக்குக் கொண்டு வரப்படும் வாணிபப் பொருட்களுக்கும் வரி விதிக்கப்பட்டதாக ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. விஜய நகர மன்னர்கள் காலத்தில் (சக 1441 பிரமாதி) தை பஞ்சமி நாளன்று இக்கோயில் புதுப்பிக்கப் பட்டதாகவும் தகவல் கிடைத்துள்ளது.

இக்கோயிலில் நாள்தோறும் நான்கு கால வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. காலை 8. 30 மணியளவில் கால சந்தியும், 10.30 மணியளவில் உச்சி காலமும், மாலை 6.30 மணிக்குச் சாயரட்சையும், இரவு எட்டு மணியளவில் அர்த்தஜாமமும் நடைபெறுகின்றன. ஆனி மாதத்தில் பெரிய அளவில் பிரம்மோற்சவம் நடைபெற்று வந்தது. ஆனி மாதம் சுக்லபட்ச மக நட்சத்திரத்தன்று கொடியேற்றமும், கேட்டை நட்சத் திரத்தன்று ரத உற்சவமும் நடைபெற்று வந்தன. பத்து நாட்களுக்கும் சுவாமி பல வகையான வாகனங்களில் புறப்பட்டு உலா வருவது உண்டு. மின் விளக்கு அலங் காரம், வாண வேடிக்கை, இசைக் கச்சேரிகள், சமயச் சொற்பொழிவுகள் ஆகியனவற்றைக் காண எண்ணற்ற

பக்தர்கள் இங்கு குழுமி ஞானபோத புஷ்கர்ணியில் நீராடி வழிபடுவது உண்டு. ஆடி பதினெட்டாம் பெருக்கு, ஆவணி விநாயக சதுர்த்தி, புரட்டாசி நவ ராத்திரி, ஐப்பசி தீபாவளி, சூரசம்ஹாரம், திருக் கலியாண உற்சவம், கார்த்திகை சோமவாரம், மார்கழி தனுர்மாத வழிபாடு, தைப்பொங்கல், மாசிமகம், பங்குனி திருக்கலியாணம் ஆகிய பண்டிகைகள் முறைப்படி நடைபெற்று வந்தன. மாதந்தோறும் கிருத்திகை நாட்களில் முருகனுக்கு அபிஷேக ஆராதனைகள், மாதந்தோறும் பிரதோஷ விழா, கார்த்திகை மாதம் முழுதும் கோபுரத்தில் தீபம் ஏற்றுதல் ஆகிய வைபவங்கள் நடைபெற்று வந்தன. முருகப் பெருமா னுக்கும், அர்த்தநாரீஸ்வரருக்கும் காலந்தோறும் லட்சார்ச்சனைகள் செய்து வரப்பட்டன.

பரமபரை தர்மகர்த்தாக்களின் நிர்வாகத்தில் இவ்வாலயம் இயங்கியபோது சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்பு கும்பாபிஷேகம் நடைபெற்றது. ஆகஸ்டு 1961 முதல் இந்து அறநிலைய ஆட்சித் துறையினரால் இதன் நிர்வாகம் ஏற்றுக் கொள்ளப்பட்டது மிகவும் பழமை யும் புராதனச் சிறப்பும் மிகுந்த இக்கோயிலின் உட்புறப் பகுதிகளும், இராஜகோபுரமும் புதுப்பிக்க வேண்டிய நிலையில் உள்ளன.

பாதி பெண்ணுருப் பாதியாணுருவெனப் பரந்த
வேதின் முச்சகம் பூசை செய்வானவை யிரண்டும்
ஓதிலோர் வடிவாகிய விலிங்கமோ யொளிரும்
தீதிலர்த்தனாரீ சுரதேவனே சரணம்.

(தலபுராணம். நாவலர் ஜடாதர முதலியார்)

# 21. வாழ்வச்ச கோஷ்டம்

(கன்னியாகுமரி மாவட்டம்)

## மகிஷாசுரமர்த்தினி ஆலயம்

*அயிகிரி நந்தினி நந்திதமேதினி விச்வவினோதினி
நந்தநுதே
கிரவர விந்தயசிரோதி நிவாஸினி விஷ்ணுவிலாஸினி
ஜிஷ்ணுநுதே
பகவதி ஹேசிதி கண்ட குடும்பினி பூரிகுடும்பினி
பூரிக்ருதே
ஜயஜயஹே மஹிஷாஸுரமர்த்தினி ரம்யகபர்தினி
சைலஸுதே.*

*வென்றி மாமழுஏந்தி முன் மண்மிசை மன்னரை
மூவெழுகால்
கொன்றவ நின் குரைகழல் தொழுவது ஓர் வகை
எனக்கருள் புரியே.*

என்று பரசுராமரைத் திருமங்கை ஆழ்வார் துதிக்கிறார்.

திருமாலின் தசாவதாரங்களில் பரசுராம அவதாரம் ஆறாவது ஆகும். அசுரர்களைத் திருமால் சம்ஹாரம் செய்யும்போது சுதர்சனம் என்ற சக்கரத்தையே அதிக அளவில் உபயோகித்து வந்தார். இதனால் சுதர்சனத்திற்கு அகம்பாவம் ஏற்பட்டது. இதன் விளைவாகப் பூவுலகில் மகிஷ்மதி நகரின் அரசனாகக் கார்த்த

வீரியார்ச்சுனன் என்ற பெயருடன் சக்கரம் அவதரித்தது. அதே சமயத்தில் ஜமதக்கினி முனிவருக்கும், அவரது பத்தினியான ரேணுகா தேவிக்கும் மகனாகத் திருமால் அவதாரமெடுத்தார். இராமர் என்ற அக்குமாரன் தந்தையின் விருப்பப்படியே சிவபெருமானைக் குறித்துத் தவம் புரிந்து பரசு எனும் வலிமையான ஆயுதத்தைப் பெற்றார். பரசு எனும் ஆயுதத்தை ஏந்தியதால் அவர் பரசுராமர் எனப்பெற்றார். தந்தையின் சொலலை ஏற்றுத் தவறு புரிந்த தன் தாயின் சிரத்தையே கொய்தார். பின்னர் தந்தையிடம் இறைஞ்சித் தன் தாய்க்கு மீண்டும் உயிர் அளித்தார்.

ஆயிரம் கரங்களையுடைய கார்த்தவீரியார்ச்சுனன் இராவணனையே வென்று புகழ்பெற்றான். திக் விஜயம் முடிந்து திரும்புகையில் ஜமதக்கினி முனிவரின் ஆசிரமத்திற்கு வருகை புரிந்தான். தெய்வப்பசுவான காமதேனுவின் அருளால் அவனுடைய பரிவாரங்களுக்கும் சிறப்பான விருந்தை முனிவர் அளித்தார். கேட்கும் பொருட்களை அளிக்கவல்ல காமதேனுவைத் தன்னிடம் அனுப்புமாறு அரசன் வேண்டினான். முனிவர் மறுத்தார். இதனால் கோபமுற்ற மன்னன் காமதேனுவை வலுக்கட்டாயமாகக் கவர்ந்து சென்றான். நடந்த செயலையறிந்து வெகுண்ட பரசுராமர் கார்த்த வீரியார்ச்சுனனையும், அவனது படைகளையும் நிர்மூலம் செய்தார்.

கார்த்த வீரியார்ச்சுனனின் புத்திரர்கள் பரசுராமர் இல்லாத நேரத்தில் ஆசிரமம் புகுந்து ஜமதக்கினி முனிவரை வதைத்தனர். கோழைத்தனமாக முனிவரைக் கொன்ற வஞ்சகர்களின் குலத்தையே வேரறுப்பதாகப் பரசுராமர் உறுதிபூண்டார். தனது தாய் ஜமதக்கினி முனிவரை இழந்த துயரத்தைத் தாளாமல் 21 முறை வயிற்றிலடித்து அழுததால் க்ஷத்திரிய குலத்தை 21 தலைமுறை சம்ஹாரம் செய்தார். தவம் புரிந்து அதி

பராக்கிரமசாலியாக விளங்கியபோதிலும் ஆணவம், குரோதம், கொலைவெறி ஆகிய குணங்களுக்கு அடிமையானதால் பரசுராமரின் மேன்மை குன்றியது. தசரத ராமர் முன் அவரது ஆணவம் அடங்கியது.

"பூதலத்து அரசையெல்லாம் பொன்றுவித்தனை யென்றாலும்
வேதவித்தாய மேலோன் மைந்தன் நீ விரதம் பூண்டாய்
ஆதலில் கொல்லல் ஆகாது; அம்பு இது பிழைப்பது என்றால்
யாது இதற்கு இலக்கம் ஆவது இயம்புதி விரைவின் என்றான்" (கம்பர்)

இராமரின் அம்புக்கு இலக்காகத் தனது தவவலிமையையே பரசுராமர் அளித்தார். கர்வபங்கம் அடைந்த பின்னர் இப்பூவுலகைக் காசிப முனிவருக்குத் தானமாக அளித்தார். பின்னர் தனக்கென்று பரசுராம க்ஷேத்திரம் என்ற தலத்தைக் கடலில் நிர்மாணித்தார். ஆரியதாயன ரிஷியின் அறிவுரையின் பேரில் அம்பிகையின் அருள்நாடி இமயமலை சென்ற பரசுராமர் தத்தாத்ரேயரின் சீடராக அமர்ந்தார். பரசுராம க்ஷேத்திரத்தில் (இன்றைய கேரளம்) உள்ள பல ஆலயங்களில் பூஜாவிதிகளையும், நடைமுறைகளையும் பரசுராமரே ஏற்படுத்தியதாகக் கூறுவர். க்ஷத்திரியர்களின் உதிரத்தைப் பருகிய தனது வாளை அன்னை துர்க்கையிடம் சமர்ப்பணம் செய்துவிட்டுப் பரசுராமர் இமயம் நோக்கிச் சென்றார். அவ்வாளை ஏற்ற அன்னை மகிஷாசுரமர்த்தினியாகவே கோலம் கொண்டுள்ளார். அவ்வாறு மகிஷாசுரமர்த்தினி கோயில் கொண்டுள்ள தலமே வாழ்வச்சகோஷ்டம். கன்னியாகுமரி மாவட்டத்தில் தக்கலை-கருங்கல் சாலையிலுள்ள பள்ளியாடி எனும் ஊரிலிருந்து ஒரு கல் தொலைவில் இக்கோயில் அமைந்துள்ளது. நாகர்கோயிலிலிருந்து பள்ளியாடியைப் பேருந்து மற்றும் புகைவண்டி மூலம் அடையலாம். குழித்துறையிலிருந்து

வாழ்வச்சகோஷ்டம் வழியாக நகரப் பேருந்து செல்கிறது.

ஆதியில் பரசுராமர் ஸ்தாபித்து வழிபட்ட ஆலயம் நாளடைவில் பாழடைந்து போயிற்று. தற்போதுள்ள கோயில் பழைய கோயிலுக்குச் சற்று தொலைவில் அமைந்துள்ளது. இப்பகுதியில் அரசாண்ட இடத்தாரப் போத்தி என்ற குறுநில மன்னனின் கனவில் அம்மன் தோன்றித் தனக்கு ஒரு புதிய கோவில் கட்டுமாறு கட்டளையிட்டாராம். அப்பகுதியில் வாழ்ந்து வந்த மக்களின் ஆதரவுடன் அம்மன்னனே அன்னைக்கு ஒரு கோயில் ஏற்படுத்தினானாம். இடத்தாரப்போத்தி, அவனது குடும்பத்தினர், சகாக்கள் ஆகியோரின் திரு வுருவங்கள் கோயிலின் உட்புறத்தில் இடம் பெற் றுள்ளன.

இக்கோயிலில் மஹிஷாசுர மர்த்தினியாகவே தேவி எழுந்தருளியுள்ளாள். மஹிஷாசுரமர்த்தினியின் வரலாறு புராண நூல்களில் பல வேறுபாடுகளுடன் கூறப்பட் டுள்ளது. வராக புராணத்தில் அவ்வரலாறு பின்வருமாறு இடம் பெற்றுள்ளது. மந்தாரமலையின் சாரலில் விஷ்ணு வின் அம்சமான வைஷ்ணவி அழகிய தோற்றமுடைய சேடிகள் சூழத் தவம் புரிந்து வந்தாள். வைஷ்ணவியின் பேரெழில் பற்றி நாரதர் மூலம் அறிந்த மஹிஷாசுரன் அவளை மனைவியாக அடைய விரும்பி ஒரு தூதுவனை அனுப்பினான். அத்தூதுவன் மூலம் மஹிஷாசுரனின் சரிதம் கூறப்படுகிறது. சிந்துத்வீபர் எனும் ரிஷி கான கத்தில் தவம் புரிந்து வந்தபோது அவ்விடம் வந்த மஹிஷ்மதி எனும் மங்கை அவரது ஆசிரமத்தின் அழகிய தோற்றத்தைக் கண்டு அதனைக் கைப்பற்ற விரும்பி னாள். பெண் எருமை வடிவம் கொண்டு முனிவரை விரட்ட அம்மங்கை எண்ணினாள். உண்மையைத் தனது ஞான திருஷ்டியின் மூலம் அறிந்த சிந்துத்வீபர் அவளை உண்மையில் பெண் எருமையாகவே ! மாறுமாறு சபித்தார். மகிஷ்மதியும் தனது தவறுக்காக வருந்தி

னாள். ஒரு புத்திரன் உண்டானபின் அவளது எருமை யுருவம் மாறும் எனப் பரிகாரம் கூறப்பட்டது. மகிஷ் மதியின் மகனே மகிஷாசுரன். வானவர்களை வென்ற செருக்குடன் மகிஷன் அனுப்பிய தூதுவனுக்கு மறுப் புரையை வைஷ்ணவி வழங்கினாள். வைஷ்ணவியைச் சிறைப்பிடிக்க மகிஷாசுரன் படையெடுத்து வந்தான். கடுமையான போருக்குப் பிறகு மஹிஷாசுரனை வதைத்து மஹிஷாசுரமர்த்தினியாக அம்மன் கோலம் கொண்டார்.

மஹிஷாசுர வதம் வாமன புராணத்தில் சற்றே மாறுபட்ட முறையில் உரைக்கப்படுகிறது. தவபலத்தால் பெரும் வலிமையை அடைந்த மஹிஷாசுரன் வானவர் களை விரட்டியடித்தான். தேவர்கள் அனைவரும் நாராயணனைச் சரணடைந்தனர். நாராயணனின் ஆலோசனையின் பேரில் அனைத்து வானவர்களும் தங்களது கண்களிலிருந்து கொடிய நெருப்பை வெளிப் படுத்தினர். இந்நெருப்பிலிருந்து ஆயிரம் சூரியர்களின் பிரகாசமும், மூன்று கண்களும், கரிய திருமேனியுமுடைய காத்யாயனி தோன்றினாள். அனைத்துத் தேவர்களும் தங்களது சிறந்த ஆயுதங்களைக் காத்யாயனியிடம் கொடுத்தனர். தனது பதினெண்கரங்களிலும் இத்தகைய ஆயுதங்களை ஏந்திய தேவி மஹிஷாசுரனுடன் கடுமை யாகப் போர் புரிந்து, இறுதியின் அரக்கனை மிதித்துக் கொன்றாள். இது போலவே தேவி பாகவதம், பாத்ம புராணம் மற்றும் பல புராண நூல்களில் மஹிஷாசுர மர்த்தினியின் சரிதை சொல்லப்பட்டுள்ளது அன்னை யான ஞானசக்தி அறியாமையாகிய அசுரனை வெற்றி கொள்வதையே இச்சம்பவம் குறிக்கும்.

ஆகம நூல்கள் மஹிஷாசுரமர்த்தினியின் திருவுருவ அமைப்பு பற்றி விரிவாக எடுத்துரைக்கின்றன. சில்பரத்னம் என்ற நூல் பத்து கரங்கள், சந்திர கலை யுடன் கூடிய ஜடாமகுடம், உடலில் திரிபங்க வளைவுகள் ஆகியவற்றுடன் மகிஷாசுரமர்த்தினி காட்சியளிப்பாள்

என்று கூறும். வலது கரங்களில் திரிசூலம், கடகம், சக்தியாயுதம், சக்கரம், வில் ஆகியனவும். இடது கரங்களில் அங்குசம், பாசம், கேடகம், பரசு, மணி ஆகியனவும் உள்ளன அம்மனின் திருவடியில் தலை துண்டிக்கப்பட்ட மகிஷன் வாள், கேடயம் ஆகியவற்றை ஏந்தியவாறு விழுந்து கிடப்பான். எருமைத் தலையிலிருந்து உண்மையான அசுர உருவம் வெளிப்படுமாறு காட்சியளிக்கும். சிம்மத்தின் முதுகின் மீது அன்னை தனது இடது காலை ஊன்றியிருப்பாள். இதுவே மஹிஷாசுரமர்த்தினியின் உருவமைப்பு ஆகும்.

வாழ்வச்சகோஷ்ட ஆலயத்தில் மஹிஷாசுரமர்த்தினியே மூலவராகக் காட்சியளிக்கிறார். சதுர்புஜங்களுள் ஒன்று திரிசூலத்தை ஏந்தியுள்ளது. அவளது திருவடிகளுக்கு அருகே சங்கும், சக்கரமும் உள்ளன கால் மகிஷாசுரனின் தலை மீது அழுந்தியுள்ளது. ஆணவமலத்தின் வலிமையை அடக்கிய அம்மனின் தோற்றம் கம்பீரமாகவும், அச்சத்தை உண்டு பண்ணுவதாகவும் உள்ளது. இவ்வன்னை சிறந்த கருணைக் கடாட்சியாக விளங்குவதால் எண்ணற்ற பக்தர்கள் இங்கு வழிபடுகின்றனர்.

அன்னையின் அருளால் உடல் மற்றும் மனப்பிணிகள் அகன்று நல்வாழ்வு பெற்றவர்கள் ஏராளம். முற்காலத்தில் இப்பகுதியை ஆண்ட திருவிதாங்கூர் மன்னர்கள் அரியணை ஏறுமுன் வாழ்வச்சகோஷ்டம் மஹிஷாசுரமர்த்தினியையும், திருவட்டாறு ஆதிகேசவப்பெருமானையும் வணங்கி ஆசி பெறுவது உண்டு. போருக்குச் செல்லுமுன் அம்மனின் திருவடிகளில் வாளை வைத்து ஆசி பெறுவது உண்டு. இதனால் வாள் வைத்த கோட்டம் என்ற பெயர் இவ்வூருக்கு ஏற்பட்டு அதுவே நாளடைவில் வாள்வச்சகோஷ்டமாக மருவியிருக்கிறது. திருவிதாங்கூர் மன்னர்கள் அன்னைக்குப் பல அணிகலன்கள் அணிவித்துள்ளனர்.

கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மிகப் பழமையான ஆலயங்களுள் வாழ்வச்சகோஷ்டமும் ஒன்று. இரண்டு பிரகாரங்களைப் பெற்றுள்ள இக்கோயில் கேரளக் கட்டிடக் கலையின் அம்சங்களைக் கொண்டுள்ளது உள் மண்டபங்களிலுள்ள அரிய, கம்பீரமான சிற்பங்கள் தமிழகச் சிற்பியின் கைவண்ணத்தால் உருவாகியிருக்கக் கூடும் வாளேந்திய துர்க்கை, பதும மலரில் அமர்ந்த திருமகள், வீணை ஏந்திய வாணி, ரதிதேவியுடன் உள்ள காமதேவன் ஆகிய சிற்பங்கள் மரத்தினால் செய்யப்பட்டுள்ளன. தசக்கிரீவங்களுடன் தோன்றும் இலங்கேசன், சீதாப் பிராட்டியுடன் காட்சியளிக்கும் இராமர், திருமகளை மார்பில் சூடிய திருமால், அமிர்தகலசம் தாங்கிய அன்ன பூரணி, நடராஜர், கங்காளநாதர், அச்சமுறுத்தும் தோற்றமுடைய பத்ரகாளி ஆகிய பிரம்மாண்டமான சிற்பங்களையும் காணலாம். இராமாயணம், மகாபாரதம் ஆகிய காவியங்களில் இடம் பெற்றுள்ள முக்கிய பாத்திரங்களான இந்திரஜித், இலக்குவன், சகுனி, கர்ணன், அருச்சுனன் ஆகியோரின் கம்பீரமான திருவுருவங்களையும் அழகிய சிற்பங்களாக வடித்துள்ளனர். ஆலயத்திற்கு வெளியே திருக்குளம் உள்ளது.

ஆலயத்திற்கு அருகேயுள்ள மண்டபமே ஆதியில் பரசுராமர் அமைத்த ஆலயத்தின் எஞ்சிய பகுதி என்று கூறுவர். விசேட நாட்களில் இவ்விடத்திலிருந்து உற்சவரை ஊர்வலமாக எடுத்துச் செல்வது உண்டு. அப்பகுதியிலிருந்து ஒரு மருத மரம் முறிந்த போது அம்மரத்தினால் ஒரு விளக்கு மாடம் செய்யப்பட்டது. கருவறையின் முன்னர் அவ்விளக்கு காட்சியளிக்கிறது. ஆண்டுதோறும் கார்த்திகைத் திருவிழாவின்போது மருதவிளக்கும், பாதுகையும் என்ற நிகழ்ச்சி இடம் பெறுவதுண்டு.

இக்கோயிலின் முக மண்டபத்தில் கவிதை வடிவில் இரு கல்வெட்டுக்கள் உள்ளன. தொல்காப்பியம்

போன்ற நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள 'வாள் மங்கலம்' என்ற விழாவைப் பண்டைய மன்னர்கள் இங்கு சிறப்பாகக் கொண்டாடியதாக இவை மூலம் அறியலாம். கி. பி. 1620ல் முல்லை மங்கலம் எனும் ஊரைச் சேர்ந்த திருவிக்கிரமன் என்பான் திருவிதாங்கூர் மன்னனான இரவி வர்மா பாராட்டும் வகையில் ஒரே கல்லில் முகமண்டபத்தைக் காட்டினான் என்றும், இம்மண்டபத்தின் பழுது வேலைகளைப் பார்த்த முல்லை மங்கலத்துத் தாமோதரன் என்பான் கி.பி. 1622ல் இறைவனடி சேர்ந்தான் என்றும் இவை தெரிவிக்கின்றன.

''ஆதியெழுநூற்றுடன் தொண்ணூற் றய்யா
மாண்டிலற்பசி யெழ்முள்ள
சமயவிட்டம் வெள்ளி மாதிசை செரின்னாளி
விரவிவேந்தன்
மனமகிழப் பகவதி வாள் வைத்த கோட்டத்து ஓதிலுறு
மிறைவி இருப்பதற்கு
மென்மையுறும் முகமண்டப மாமாதற்கு நாப்பண்
மூதறிவாலொரு கவிண்மண்டபஞ் செய்வித்தான்முல்லை
மங்கலத் திருவிக்ரமன் தானே''

இங்கு விசாக விழா கொண்டாடப்பட்டதாக ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. மேல் மருயாத்தூரைச் சேர்ந்த காவல் அரங்க நாராயணன் என்பார் பகவதி கோயில் எழுப்பித்ததாக கி.பி. 1234ல் எழுதப்பட்ட கல்வெட்டு கூறுகிறது.

இக்கோயிலில் கேரள விதிமுறைகளை ஒட்டியே பூஜை நடைபெறுகிறது. திருக்கார்த்திகை, மகரசங்கராந்தி, வருடப்பிறப்பு (விஷு) ஆகிய பண்டிகைகள் இங்கு கொண்டாடப்படுகின்றன. திருவிதாங்கூர் மன்னர்கள் காலத்தில் நடைபெறும் திருவிழாக்களின் போது விலையுயர்ந்த தங்க அங்கியுடன் அம்மன் தோன்றுவார். தற்காலத்தில் தமிழக அரசின் இந்து அறநிலையத்துறையின் பரிபாலனத்தில் ஆலயம் இயங்கி வருகிறது.

# திவ்வியப் பிரபந்த பாடல்கள்

## ஆதனூர்

என்னை மனங்கவர்ந்த ஈசனை—வானவர்தம்
முன்னவனை மூழிக்களத்து விளக்கினை
அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை

(திருமங்கையாழ்வார். பெரியதிருமடல். 129-30)

## திருவிடவெந்தை

பார்த்தற்காயென்று பாரதங்கைசெய் திட்டுவென்ற பரஞ்சுடர்
கோத்தங்காயர் தம் பாடியில் குரவைபிணைந்த எம் கோவலன்
ஏத்துவார் தம் மனத்துள்ளான் இடவெந்தை மேவிய வெம்பிரான்
தீர்த்த நீர்த்தடஞ்சோலை சூழ் திருவேங்கடமடை நெஞ்சமே

திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி (1-1021)

திவளும்வெண் மதிபோல் திருமுகத் தரிவை
செழுங்கட லமுதினிற் பிறந்த
அவளும், நின் னாகத் திருப்பது மறிந்தும்
ஆகிலு மாசைவி டாளால்,
குவளையங் கண்ணி கொல்லியம் பாவை
சொல்லுநின் தாள்நயந் திருந்த
இவளை, உன் மனத்தா லென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 2

துளம்படு முறுவல் தோழியர்க் கருளாள்
துணைமுலை சாந்துகொண் டணியாள்,
குளம்படு குவளைக் கண்ணிணை யெழுதாள்
கோலநன் மலர்குழற் கணியாள்
வளம்படு முந்நீர் வையமுன் னளந்த,
மாலென்னும் மாலின மொழியாள்,
இளம்படி யிவளுக் கென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 3

சாந்தமும் பூணும் சந்தனக் குழம்பும்
தடமுலைக் கணியிலும் தழலாம்,
போந்தவெண் திங்கள் கதிர்சுட மெலியும்
பொருகடல் புலம்பிலும் புலம்பும்,
மாந்தளிர் மேனி வண்ணமும் பொன்னாம்
வளைகளும் இறைநில்லா, என்றன்
ஏந்திழை யிவளுக் கென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 4

'ஊழியில் பெரிதால் நாழிகை!' என்னும்
'ஒண்சுடர் துயின்றதால்!' என்னும்,
'ஆழியும் புலம்பும்! அன்றிலு முறங்கா
தென்றலும் தீயினிற் கொடிதாம்,
தோழியோ!' என்னும் 'துணைமுலை யரக்கும்
சொல்லுமி னென்செய்கேன்?' என்னும்
ஏழையென் பொன்னுக் கென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 5

ஓதிலும் உன்பே ரன்றிமற் றோதாள்
உருகும்நின் திருவுரு நினைந்து,
காதன்மை பெரிது கையற வுடையள்
கயல்நெடுங் கண்துயில் மறந்தாள்,
பேதையேன் பேதை பிள்ளைமை பெரிது
தெள்ளியள் வள்ளிநுண் மருங்குல்,
ஏதலர் முன்னா என்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 6

தன்குடிக் கேதும் தக்கவா றினையாள்
தடங்கடல நுடங்கெயி லிலங்கை,
வன்குடி மடங்க வாளமர் தொலைத்த
வார்த்தைகேட் டின்புறும் மயங்கும்,
மின்கொடி மருங்குல் சுருங்கமேல் நெருங்கி
மென்முலை பொன்பயந் திருந்த,
என்கொடி யிவளுக் கென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 7

உளங்கனிந் திருக்கும் உன்னையெ பிதற்றும்
உனக்கன்றி யெனக்கன்பொன் றிலளால்,
'வளங்கனி பொழில்சூழ் மாலிருஞ் சோலை
மாயனே!! என்றுவாய் வெருவும்,
களங்கனி முறுவல் காரிகை பெரிது
கவலையோ டவலம்சேர்ந் திருந்த,
இளங்கனி யிவளுக் கென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 8

'அலங்கெழு தடக்கை யாயன்வா யாம்டற்
கழியுமா லென்னுள்ளம்!' என்னும்,
புலங்கெழு பொருநீர்ப் புட்குழி பாடும்
'போதுமோ நீர்மலைக்' கென்னும்,
குலங்கெழு கொல்லி கோமள வல்லிக்
கொடியிடை நெடுமழைக் கண்ணி.
இலங்கெழில் தோளிக் கென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 9

பொன்குலாம் பயலை பூத்தன மென்தோள்
பொருகயல் கண்துயில் மறந்தாள்,
அன்பினா லுன்மே லாதரம் பெரிதுஎன்
அணங்கினுக் குற்றநோ யறியேன்,
மின்குலா மருங்குல் சுருங்கமேல் நெருங்கி
வீங்கிய வனமுலை யாளுக்கு.
என்கொலாம் குறிப்பி லென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே! 10

அன்னமும் மீனும் ஆமையும் அரியும்
ஆயஎம் மாயனே! அருளாய்,
என்னுமின் தொண்டர்க் கின்னருள் புரியும்
இடவெந்தை யெந்தை பிரானை,

மன்னுமா மாட மங்கையர் தலைவன்
 மானவேல் கலியன்வா யொலிகள்,
பன்னிய பனுவல் பாடுவார் நாளும்
 பழவினை பற்றறுப் பாரே. 11

ஏரார் பொழில்சூழ் இடவெந்தை 12
(திருமங்கையாழ்வார், சிறிய திருமடல், 73)

தொன்னீர்க் கடல் கிடந்த தோளா மணிச்சுடரை
என் மனத்து மாலை இடவெந்தை ஈசனை 13
(திருமங்கையாழ்வார், பெரிய திருமடல், 119)

## திருத்தண்கால்

தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்
தமருள்ளும் தண்பொருப்பு வேலை - தமருள்ளும்
மாமல்லை கோவல் மதிட்குடந்தை யென்பரே
ஏவல்ல எந்தைக் கிடம் 1
(பூதத்தாழ்வார், இரண்டாம் திருவந்தாதி) 2251 (70)

பேரானைக் குறுங்குடியெம் பெருமானை, திருத்தண்கால்
ஊரானைக் கரம்பனூர் உத்தமனை முத்திலங்கு
காரார்திண் கடலேழு மலையேழிவ் வுலகேழுண்டும்
ஆராதென் றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே 2
பெரிய திருமொழி, 6, (1399)

பொங்கார் மெல்லிளங் கொங்கை பொன்னே பூப்பப்
பொருகயல் கண்ணீ ரரும்பப் போந்து நின்று
செங்கால மடப்புறவம் பெடைக்குப் பேசும்
சிறுகுர லுக் குடலுருகிச் சிந்தித்து ஆங்கே
தண்கா லும் தண்குடந்தை நகரும் பாடித்
தண்கோவலூர் பாடி யாடக் கேட்டு
நங்காய்! நங்குடிக் கிதுவோ நன்மை? என்ன
நறையூரும் பாடுவாள் நவில்கின் றாளே! 3
(திருநெடுந் தாண்டகம்—2068)

பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர் 4
(சிறிய திருமடல்—2673—71)

வானவர்தம் சென்னி மணிச் சுடரைத் தண்கால்
திறல் வலியை 5
(பெரிய திருமடல்—2674—120)